இந்தப் புத்தகம்
திருமலை திருப்பதி
தேவஸ்தானத்தாரால்
அளிக்கப்பட்ட உதவி
தொகையில்
அச்சடிக்கப்பட்டது
என்பதை மகிழ்ச்சியுடன்
தெறிவித்துக்கோள்கிறேன்

# ACKNOWLEDGEMENT

In the reference No. F.5-113/94 (HRP) dated 21-5-1994 the University Grants Commission was kind enough to sanction the major research project entitled **"Impact of Bhakti Movement in Medieval Tamil Literature with Special Reference to Modern Times"** for three years period from August 1995 to February 1998. In this connection, I wish to place on record my thanks to the University Grants Commission authorities for sanctioning the research project.

Further I also thank Prof. Deva Sangeetham, the then head of the Department of Tamil whose interest evolved me to get this research project. My thanks are due to Dr. R. Manuvel, the present head, Department of Tamil, for having given more co-operation to operate the project. My sincere thanks to Dr. M. Varadarajan, Assistant Professor, Department of Tamil for his generous help in all aspects to develop the research in effective manner.

It is my bounden duty to sincerely thank the eminent scholars whom I met for the collection of material of the project during the period. Especially I thank Dr. K.P. Aravanan, Professor and Head, Department of Tamil, Pondicherry University, Pondicherry had given his valuable suggessions to complete the project.

I am also thankfull to Mr. M. RAVI, M.A., M.Phil., Project fellow of this research project who has extended his more efforts and interest to successful completion of the project.

**Dr. T.J. Ragupathy**
M.A. Ph.D., Dip-in-Ling.,

**DATE :** 14-12-1998

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பா.எ. | - | பாடல் எண் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| கா. | - | காதை |
| வ. | - | வரி |

# முன்னுரை

வாழ்க்கை இருவகைப் போக்குகளில் இயங்கும் ஒன்றாக விளங்குகிறது. ஒரு பக்கம் கடவுளர்கள் - சமயங்கள் - புராணங்கள் என்று பழமையைப் போற்றுவது; மற்றொன்று மூடக் கொள்கைகளைச் சாடுவது - அறிவியல் அடிப்படையில் பாதை வகுத்து வாழ்வது ஆகும். இந்த இரண்டும் பழங்காலந் தொட்டே தொடர்ந்து வந்தாலும் பக்தி இயக்கப் போக்குச் சிறாக அமைந்துள்ள தன்மை தெளிவாகக் காணப்படுகிறது.

சைவம் ஒருபுறம்; அந்தச் சைவ சமயக் கடவுளர்களான சிவன், முருகன் ஆகியோர் தோன்றி அமையும் பாங்கு ஒரு புறம், வைணவம் மற்றொரு புறம். மகாவிஷ்ணு, அவருடைய தசாவதாரங்களின் சிறப்பு, வழிபடும் முறை - லட்சுமி ஆகியோர் வழிகாட்டிச் செல்லும் தன்மை காணப்படுகிறது. இந்த இரண்டு பெரிய முக்கிய சமயங்கள் ஒரு பக்கம் வளர்ந்தாலும், அதையொட்டி சமணம் - பௌதம் ஆகிய சமயங்களும் அருகருகே வளர்ந்து வந்திருப்பது கண்கூடு ஆகும். இத்துடன் அந்நிய நாடுகளில் தோன்றி வளர்ந்த சமயங்கள் பிற்காலத்தில் -தற்காலத்தில் இந்திய நாட்டில் புகுந்து செல்வாக்குப் பெற்று சமயத்துறையில் பல்வேறு திருப்பங்களைக் கொண்டு அமைந்து மக்கள் வாழ்க்கையில் இவை இன்றியமையாத சமய தாக்குதல்களை ஏற்படுத்தியுள்ளமையை நன்கு அறிய முடிகிறது.

சமய வளர்ச்சி மக்கள் வாழ்வில் பெரும் மாற்றங்களைத் தோற்றுவித்து அமைந்துள்ளமை இலக்கிய வரலாற்றில் தென்படுகிறது.

1. பக்தி, உணர்வின் ஓரத்தில் பொங்கி எழும்போது, ஏற்கனவே தோன்றியமைந்த 'மதிப்பு' ஒரு புதிய வாழ்வை வளப்படுத்தி வளர்க்கத் தொடங்கியது.

2. சிலை வழிபாடு ஒழுக்கமுடைய வாழ்விற்கு அடிப்படை அமைத்துக் கொடுத்தது. ஆகையால், உண்மைகள் சுடர்ஒளி போல வளர்ந்த நேர்த்தி நன்றாகக் காணப்படுகிறது.

3. கோயில்களுக்குச் சென்று வழிபாடு செய்யத் தொடங்கியபோது, உள்ளத்தில் மறைந்திருக்கும் அழுக்குகள் கரைந்து, கலைந்து போய்விடும் தன்மை நன்றாக வெளிப்பட்டு அமைந்துள்ள தன்மைக் காணப்படுகிறது.

4. தீர்த்த யாத்திரை பக்தி பெருக்கெடுத்து வரும்போது தோன்றி அமையும் ஒன்றாகும். பல சமயத்தினர் தத்தம் மதக் கடவுளர்களை வழிபாடு செய்து வளர்ந்து மகிழ்வதை இந்திய நாட்டில் எங்கும் காணலாம். சமயப் போராட்டங்கள் மேலோட்டமாக தோன்றிய போதிலும் உணர்வின் அடிப்படையில் எல்லோரும் சேர்ந்து இயங்கும் தன்மை ஓர் சிறந்த இயக்கமாகும்.

5. சமய வாழ்வு, மனிதனின் இருண்ட பகுதிகள் இருக்கும் இடத்தில் விரிந்து பரந்து சென்று, ஒளிமயமான சூழ்நிலையைத் தோற்றுவிக்க வல்லதாய் அமைந்துள்ளதைக் காணலாம்.

6. பல தோற்றங்களில் அமைந்த நாட்டுப்புறத் தெய்வங்களின் தாக்கம், வாழ்வில் சில மகத்தான உருவ-அருவ வழிபாட்டிற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தது.

7. 'ஆதிபகவனை' அறிய தவம் இயற்ற வேண்டும். தவம் அதற்கு மாறாகப் பக்தியின் துளிகளை வெளிப்படுத்திக் காட்டும்.

8. வானத்துக் கோள்களை விழிகளால் காணும்போது, ஓயாமல்-ஒழியாமல் காணும்போது மனிதனுக்கு மயக்கம் ஏற்படுவது உண்டு. அந்த மயக்கத்தில் தன் பலவீனத்தை அறியவும் செய்கிறான். அந்த மலைப்புதான் இறைவனைப் பற்றிய கருத்து உருவாவதற்கு காரணமாக உள்ளது.

9. என்னதான் அறிவியல் இன்று ராக்கெட்டுகளைக் கண்டுபிடித்தாலும் பெரிய கப்பல்களில் ஏறி அமர்ந்து கடலை வென்றாலும், ஜெட் விமானங்களைச் செய்து வானத்தை வென்றாலும், ஏன் புதிய கோளங்கள் வானின் உயரத்தில் தோன்றி அமைகிறது?' என்ற கேள்விக்கு விடையே காணவில்லை. 'எல்லாம் ஓர் சக்தியால் உண்டாவது' என்று கொண்டு, சமய வளர்ச்சியைச் செய்து வருகிறார்கள் சான்றோர்கள்.

இவ்வாறு சமய வளர்ச்சி மனித வரலாற்றின் ஆற்றல் தன்னை வளர்ச்சிப் போக்கில் இட்டுச் செல்வது உண்டு. சிந்தனைத் தோற்றங்கள் - செயல்பாட்டின் சீரமைப்புகள் ஆகியவை மதம் ஓங்கி நின்றபோது ஏற்பட்ட ஒரு 'கொள்கை' ஆகும்.

இந்தச் சமய வாழ்வை இருவகையாகப் பிரிக்கலாம்.

1. செயல்வடிவ - புறஇயல் வழிபாடு
2. உணர்வுமயமான - அகஇயல் வழிபாடு

## 1. புற இயல் வழிபாடு

காலையில் விழித்தெழுந்ததும், முகத்தைக் கழுவிக் கொள்ளும் முறை - நெற்றியில் திருமண் இடும் முறை - அங்க வஸ்த்திரத்தைப் போர்த்திக் கொள்ளுதல் - தியானங்கள் கற்று இறைவனை நினைத்தல் - விளக்கு ஏற்றி வைத்தல் - இசை வெள்ளத்தில் மூழ்குதல் - 'சரணம்' என்று 'அங்கபிரதிஷ்ட்டை' செய்து மகிழ்தல் - பக்திப் பெருக்கில் கண்ணீர் சிந்தி வழிபடல் -பஞ்ச கச்சம் கட்டிக் கொள்ளல் -இது போல இன்னும் பலவகையான வழிபாட்டு முறைகள் வாழ்வில் அமைந்துள்ளமை நன்கு வெளிப்பட்டு நிற்கிறது. அடியார்களைக் காணும்போதும் - அடியார்களை வாழ்த்தும்போதும் - மிகுந்த எச்சரிக்கையுடன், அவர்களுடைய மனம் சொல்லால் அடிக்கப்பட்டு ஊமைத் துயரத்தில் சிக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். மலைக் குன்றுகளிலும், மண்ணில் மணற் மேடுகளிலும் வாழ்வின் புறத்தில் இருக்கும் பொருள்களிலும் இறைவனைக் கண்டு வழிபடும் மரபு ஒன்று தோற்றுவிக்கப் பெற்று வளர்வதை நன்றாக அறியலாம்.

## 2. அகவழிபாடு

உள்ளத்து உணர்ச்சிகள் இருவகைப்படும். ஒன்று நன்மையை நாடுவது; மற்றொன்று தீமையை நாடுவது. நன்மை என்பது எந்தவிதக் காட்டுமிராண்டித்தனமும் - முரட்டுத்தனமுமான செயலை உடையது. தீமை என்பது பாலில் காரம் கலப்பது போல், மென்மையைக் கரைத்துத் தீய சக்திகளால் சூழப்படுவது ஆகும். 'உள்ளம் கவர்கள்வன்' என்று பொதுவாக இறைவனைச் சுட்டிக்காட்டுவது ஒரு வகை. அதை அகம் - உணர்வு கண்ட 'இறைமை' என்று சுட்டுவது மற்றொரு வகை. மெல்லிய உணர்வு - அன்புணர்வு தோன்றும்போது மிக வலிமையுடன் வரும்; செல்லும் போது 'அன்பில்லாத' ஒன்றை, வெய்யில் சுட்டுப் பொசுக்கி விடுவதைச் சான்றோர் காட்டுவர்'.

ஆகையால், இந்த ஆய்வுக் கட்டுரை அதாவது ''இலக்கிய வானில் பக்தி மலர்கள்'' என்னும் தலைப்பில் எழுதத் தொடங்கப்பட்டது. பகுத்தும்-தொகுத்தும்-வகுத்தும் ஆக்கப்பட்டுள்ள இந்த ஆராய்ச்சிக் கட்டுரை 'பக்தி' ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட முறையில் அமைக்கப்பட்டுள்ளது. மௌனமாகவே இருந்து 'மௌனம்' பண்பை வளர்த்த, தங்கால் மௌன குருவின் வழியில் நடைபோடுவதுதான் இனி எல்லோருடைய கடமை ஆகும். ஆரவாரம் நிறைந்த தற்கால வாழ்க்கை, சூழ்நிலையில், கடவுள் தத்துவத்தில் புதிய கோட்பாடுகள் தோற்றுவிக்கப்பட்டு அவற்றை அறிவியல் கண்ணோட்டத்தோடு செயல்படுத்த முனைந்துவரும் இத்தருணத்தில், மேலும் பல புதிய சமயங்கள், புதிய பல கடவுள் கொள்கைகள் அறிமுகமாகி மக்கள் விரும்பி பங்கேற்கும் சமயத் துறையில் புதிய பல குழப்பங்கள் இச்சமுதாயத்தில் நிலவி வருகிறது. இவ்வேளையில் எல்லாவற்றையும் தன் ஞானக்கண் கொண்டு பார்த்து அமைதியாக, அன்பே உருவாக அமைந்திருக்கும் இறைவனின் எழில் நிறைந்த அவனுடைய சந்நிதியை அடையவேண்டுமானால் 'மௌனம்' மட்டுமே தற்போதைய சிறந்த சமய வழியாகும். அதைக் குறிக்கவே 'மௌனிசம்' என்னும் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்:

மாறி வரும் உலகத்தில் விஞ்ஞானத்தின் விபரீத தாக்குதல்களினால் மனித சமுதாயம் தன் பண்டைய மரபுகளில் இருந்து வழிவிலகி அறிவியலுக்கு எதிராக இங்கே வாழ முடியாத சூழ்நிலையில், காலங்காலமாக போற்றி வரும் சமயம், சடங்கு, சம்பிரதாயம் போன்ற எல்லா கொள்கைகளுக்கும் விலக்கு அளித்து அல்லது அதன் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி மேலோட்டமாகவும் அதே நேரத்தில் எளிமையாகவும் கடவுளை அதனைச் சார்ந்த எல்லா நிகழ்ச்சிகளையும் கண்ணோக்கத் தலைப்பட்டுள்ளது. எதையுமே அவசரமாகவும் எந்த ஒரு செயலையும் ஆழமாகச் சென்று அதைப் பின்பற்ற விரும்பாத - முடியாத நிலையில் இன்று மனிதன் தவிக்கும் வேளையில் இந்திய சமுதாயத்தில் தோன்றி ஊன்றி வளர்ந்த சமயக் கொள்கைகள், கோட்பாடுகள், தத்துவங்கள் நமது பண்பாடு, நாகரிகம்,

கலாச்சாரம், வாழ்வியல் சிந்தனைகள் போன்ற அனைத்திற்கும் அடிப்படை ஆதாரமாகவும் அவசியமாகவும் விளங்கிய சமயம் இன்று மரபுகளை மீறிய புதிய பல கடவுட் கொள்கைகளை உருவாக்கி அவற்றை வழிபடவும், போற்றவும், புகழவும் துணிந்தனர். இக்காலகட்டத்தில் தமிழ் இலக்கியத்தில் அதிலும் குறிப்பாக இடைக்கால இலக்கியத்தில் காணப்படும் பக்தி இயக்கக் கூறுகளை ஆராய்ந்து அவற்றின் சிறப்புகளைக் கண்டறிந்து தற்கால பக்திநெறியோடு அவற்றை ஒப்பு நோக்குவதே முக்கிய குறிக்கோளாகக் கொண்டு இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுக் கரு:

சங்க காலத்தில் அரசர்களையும், இயற்கையினையும், மக்களின் வாழ்வியல் நிகழ்ச்சிகளையும், படைப்புக் களமாகக் கொண்டிருந்த தமிழ் இலக்கியம் இடைக்காலத்தில் அதாவது ஏறக்குறைய ஆறாம் நூற்றாண்டிற்குப் பிறகு சமயக் கருத்துக்களையும் அதனூடே நல்லறங்களை மக்களுக்கு உணர்த்த இறைவனை மையமாகக் கொண்டு இலக்கியங்கள் தோன்றலாயின. அதன் தாக்கம் தற்காலம் வரை நீண்டு வளர்ந்து வருவது அவ்விலக்கியத்தின் சிறப்பை நன்கு அறிய உதவுகிறது. மனித சக்திக்கு மிஞ்சிய சக்தி ஒன்று இந்த உலகத்தை ஆட்டிப் படைத்து வருகிறது. அந்த சக்தியே மனித உற்பத்திக்கும்-வாழ்க்கைக்கும் மூலமாகவும் ஆதாரமாகவும் இருக்கமுடியும். எனவே, அதனை அறியவும் கடவுளின் ஆதிக்கத்தையும் அற்புதத்தையும் உணரவும் மனிதன் கடவுளை நாடிச் செல்ல முயன்றான். அன்று தோன்றிய அச்சமயப் பயணம் இன்னும் அந்த சக்தியை மேலும் கண்டறிவதற்கு முன்னேறி முன்னோக்கிச் சென்றவண்ணமாகவே இருக்கிறான். இதனடிப்படையில் ஒவ்வொருவரும் தாங்கள் அறிந்த சமயமே சிறந்தது என்றும், தங்கள் கடவுளே உண்மை என்றும் நிரூபிக்கத் தலைப்பட்டனர். அவ்வழியில் தோன்றிய சமய இலக்கியங்களின் செல்வாக்கு இடைக்காலத் தமிழ் இலக்கியத்தில் எவ்வாறெல்லாம் இடம் பெற்றிருந்தன என்பதனையும், முன்பு தமிழகத்தில் நன்கு வேரூன்றி மிக்க செல்வாக்கு பெற்றிருந்த சமயங்களான சமணம், பௌத்தம் ஆகியவற்றை வீழ்ச்சியடையச் செய்து சைவம், வைணவம் என்னும் சமயங்கள் தோன்றி தங்கள் தங்கள் சமயமே பெரியதென்று சாதிக்க மேற்கொண்ட எல்லாப் போராட்டங்களும் இலக்கியத்தின்கண் சுவையாக காணக்கிடக்கின்றது. அவற்றையும் அதன் சிறப்பையும் விரிவாக அறிய முனைந்ததின் விளைவாக எழுந்ததே இவ்வாய்வு ஆகும்.

## ஆய்வு எல்லை:

மனிதன் தோன்றிய சிறிது காலத்திற்கெல்லாம் கடவுளை அவன் தேடத் தொடங்கினான். தமிழ்இலக்கியத்தில் இந்தத் தேடல் மிகவும் ஆழமாகவும், விரிவாகவும், விந்தையாகவும் இருக்கக் காண்கிறோம். இச்சமய கொள்கை மனித வாழ்க்கைக்கு பாதுகாப்பையும், வாழும் வழிமுறைகளையும் எடுத்துக் கூறுவதுமின்றி அறத்தையும், நீதியையும், நியாயத்தையும், மற்ற அனைத்து ஒழுகலாறுகளையும் செவ்வனே எடுத்துக்கூறும் வகையில் அமைந்துள்ளப் பாங்கை தமிழ் இலக்கியத்தின் வாயிலாக அறிய முடிகிறது. இவ்விலக்கியத்தில் சங்க இலக்கியம் தொட்டே பக்திக் கூறுகள் இடம்பெற்றிருக்கும் மாற்றை அறியலாம். இது இடைக்காலத்தில் முக்கிய குறிக்கோளாக இலக்கியத்தில் அமைந்து எல்லாச் சமய சிறப்புகளையும் எடுத்துக்கூறுகிறது. இது பற்பல தாக்கங்களையும் மாற்றங்களையும் கொண்டு தற்காலத்தில் ஒரு புதிய பரிணாம வளர்ச்சியை அடைந்து பின்பற்றப்படுகிறது. எனவே, சங்க இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், தற்கால இலக்கியம் இவற்றில் காணப்படும் கடவுள் குறிப்புகள் இவ்வாய்வுப் பொருளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு மூலங்கள்:

தமிழ் இலக்கியத்தை முப்பெரும் பிரிவுகளாகக் கொண்டு சங்க இலக்கியங்களாகிய புறநானூறு, பரிபாடல், திருமுருகாற்றுப்படை போன்ற நூல்களில் காணப்படும் பக்தி பற்றியக் குறிப்புகளையும், காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, கம்ப இராமாயணம் போன்றவையும் இடைக்காலத்தில் தேவாரங்கள், திருவாசகம் ஆகிய சைவ இலக்கியங்கள், நாலாயிர திவ்விய பிரபந்தம் என்னும் வைணவ ஆழ்வார்களின் பாசுரங்கள், சித்தர் பாடல்கள், பட்டினத்தார், திருமூலர் ஆகியோரது பாடல்களையும், சிற்றிலக்கியங்களில் காணப்படும் கடவுள் செய்திகள், தற்காலத்தில் கவிமணி,பாரதியார், பாரதிதாசன் இன்னும் பலர் எழுதிய இலக்கியங்களை முதன்மை ஆதாரங்களாகவும், அவைகளைப் பற்றிய திறனாய்வு நூல்கள் துணைமை ஆதாரங்களாகவும் அமைகின்றன.

### ஆய்வுச் சூழல்:

மாறிவரும் சமுதாயத்தில் சமயக் கருத்துக்களும் பக்தியும் வழிபாடும் கடவுள் கொள்கைகளும் காலத்திற்குத் தக்கபடி மாற்றங்களை அடைந்து மரபுவழி வரும் சமயத் தத்துவங்களை ஒதுக்கி புதிய கருத்துக்களை நடைமுறைக்குக் கொண்டுவரும் அறிவியல் பார்வை இன்று சமயக் கோட்பாடுகளுக்கு எதிராக மனித வாழ்க்கைச் சூழல் மாறி வருகிறது. இதனிடையில் மனித வாழ்க்கைப் போக்கில் எந்த ஒரு மனிதனும் எந்தச் சூழ்நிலையிலும் கைவிடமுடியாத இந்தக் கடவுள் தத்துவம் எவ்வாறு காலத்திற்குத் தக்கபடி மாற்றம் அடைந்து பின்பற்றப்பட்டு வருகிறது என்பதை அறியும் நோக்கத்தோடு இவ்வாய்வு அமைகிறது. அதே நேரத்தில் பக்தி என்னும் முக்கியமான சமயக் கூற்றிற்கு இடைக்காலத்தில் இருந்த முக்கியத்துவத்தைத் தற்கால இலக்கியப் போக்கோடு ஒப்பிட்டுப் பார்க்கும் வகையில் இவ்வாய்வேடு ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

### ஆய்வு அணுகுமுறை:

இவ்வாய்வு, தொகுப்புமுறைத் திறனாய்வு, பகுப்பு முறைத் திறனாய்வு, விளக்கு முறைத் திறனாய்வு, ஒப்பீட்டு முறைத் திறனாய்வு மற்றும் சர்வ சமய கொள்கைகளை அறியும் நோக்கில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

முடிவுரையில் ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்வுக்கு துணை நின்ற நூல்கள் துணைநூற் பட்டியலாகத் தரப்பட்டுள்ளன.

### ஆய்வு அமைப்பு:

இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் முறையில் அமைந்துள்ளது.

1. ஆதிகாலத்தில் பக்தி
2. சமயத் தோற்றம்
3. வாழ்க்கை அனுபவங்கள்
4. இன்ப நுகர்ச்சி
5. மன உளைச்சல்
6. பிறப்பு

7. வலிமை

8. தேடல்

9. வாழ்வின் நிழல்

10. ஊரும்பேரும்

11. வாழ்க்கை

12. தற்காலத் தாக்கம் - மௌனிசம்

எல்லா இயல்களும் பக்தி இலக்கியத்தின் பரிணாம வளர்ச்சியின் போக்கையும், பக்திக் கூறுகள் சமய வாழ்வில் மனிதனுக்கு அளித்த எல்லா இன்பங்களையும், முன்னேற்றத்தையும், கடவுள் வழிபாட்டில் மனிதன் பெற்றுக்கொண்ட அனுபவங்களையும், கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே அமைந்திருக்கும் நல்லுறவினால் மனிதனும் இந்தச் சமுதாயம் பெறும் ஏற்றங்களையும், அதன் விளைவால் மக்களின் பண்பாடு, நாகரிகம், போன்றவற்றால் மனிதன் அடையும் சிறப்புகளையும் அறிய முற்படுகிறது. மொத்தத்தில் இறைவனின் எல்லாவிதமான குணங்களையும் அருமைகளையும் பெருமைகளையும் ஆராய்ந்து மனிதன் அறிய விரும்பும் பக்தி பற்றிய புதிய சிந்தனைகளும் இவ்வாய்வின்கண் விளக்கம் பெறுகின்றன.

# இயல் - 1

# ஆதிகாலத்தில் பக்தி

## 1. பக்தியும் குகை மனிதனும்

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே குகைவாழ் மனிதன் அச்ச உணர்ச்சியாலும், பயம் கலந்த உணர்ச்சியாலும் காடுகளில் சுற்றித் திரிந்தான். அப்போது கீழ்த் திசையில் கதிரவன் தன்னுடைய கிரணங்களைப் பரப்பிக் கொண்டு எழுந்தான். அன்று ஏற்பட்ட வியப்புணர்ச்சியில் ஆழ்ந்தபோது 'இறைமை' அல்லது 'கடவுள்' தத்துவம் மெல்ல அவனுக்குப் புரியத் தொடங்கியது. அதுதான் மனிதனின் பக்தி குறிப்பாகும்.

பக்தி என்றால் வழிபடுதலும், மதிப்பளித்தலும் ஆகும். இந்த பக்தி என்பது குகை மனிதனைக் கடவுள் தத்துவத்திற்கு அழைத்துச் சென்றது. பழங்காலத்தில் மனித இனம் தன்னைக் காட்டிலும் வல்லமையும், ஆற்றலும் பொருந்தி இருக்கின்ற தன்மையில் கடவுள் தென்பட்டார். மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி ஏதோ ஒன்று இயங்கிக்கொண்டிருந்தது. அதை அளக்கவும் தேடவும் அவன் முயன்றான். ஆயின் மிகுந்த ஊக்கத்துடனும் அந்தத் தொழிலில் அவனால் ஈடுபட முடியாமல் போய்விட்டது. அதே நேரத்தில் தன்னைச் சுற்றிலும் இருக்கின்ற இயற்கைக் காட்சிகளில் - இயற்கை ஆற்றலில் - அவனுடைய கவனம் திரும்பியபோது 'இறைமை' என்பதனுடைய பொருளை உணரத் தொடங்கினான்.

இயற்கை சக்திகளை உற்றுநோக்கிய மனிதன் தன்னுடைய பலவீனத்தை அறிந்தான். ஓடும் ஆறுகள் - ஓங்கி நிற்கும் மலைத் தொடர்கள் - அடர்ந்து காணப்பட்ட காடுகள் - ஓயாத அலையோடு கூடிய கடற்கரைகள் - அந்த மனிதனுக்கு ஏதோ ஒரு புரிந்து கொள்ளமுடியாத சக்தியை அவனுக்கு நினைவூட்டியது. என்னதான் முயன்றாலும், என்னதான் புரிந்தாலும் ஒன்றை மட்டும் அவனால் அறிந்துகொள்ள இயலவில்லை. அதுதான் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் 'கடவுள்' (God) என்னும் தத்துவம்.

மனிதனின் பகுத்தறிவு வளரத் தொடங்கியபோது பசியில் மிகவும் தவித்தான். எப்போதெல்லாம் வயிறு பசித்ததோ அப்போதெல்லாம் சோர்வால் - ஆற்றலின்மையால் அவன் நடுங்கிப்போனான். ஏதாவது மிருக இனங்கள் எதிரில் தென்பட்டால் கல்லாலாகிய கருவிகளை எடுத்து அவற்றின்மேல் வீசி வென்றான். அப்படி கல்லாயுதத்தை பயன்படுத்த வேண்டும் என்று அவனுள் ஒரு ஆர்வம் பொங்கி எழுந்திருக்க வேண்டும். ஆகையால் முதன்முதலாகப் பசியென்னும் உணர்ச்சி அவனுடைய ஆராயும் திறமைக்குச் சவால் விட்டபோதும்கூட 'இறைமை'யை வழிபாடு செய்ய அவனுக்கு ஒரு தெளிவினை அளித்தது.

தமிழ் இலக்கியத்தில் மணிமேகலை காவியத்தில் பசிபற்றிய ஒரு குறிப்பு வருகிறது. அதை 'யானைத்தீ பசிநோய்' என்று குறிப்பிட்டிருக்கின்றார்கள் சான்றோர்கள். மிதமிஞ்சிய பசியால் துன்பப்படுவதே சங்கம் மருவிய காலத்திலும் தென்படுகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகப்பெரிய பங்கு வகித்த தமிழ்ச் சான்றோர்[1] ஒருவர் பசிநோயை மணிமேகலை காவியத்தில் இடம்பெறச் செய்து அக்காலத்தில் உணர்ச்சி மிக்க காட்சிகள் சிலவற்றைப் படைத்துக்காட்டி இருக்கின்றார். அவர் கூறும்போது வறுமை, துன்பம், பசி ஆகியவற்றை மனிதனுடைய தீர்க்க இயலாத சில பிரச்சினைகளைச் சுட்டிக்காட்டுகிறார். இந்தக் காட்சி பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் ஏற்பட்டிருந்த பசி பற்றிய ஒரு கருத்தோட்டத்தை நிறுவுகிறது.

மணிமேகலை காவியத்தில் சீத்தலைச் சாத்தனார் 'அட்சய பாத்திரம்' ஒன்றை உருவாக்கி அதன் வாயிலாகக் காணார், கேளார், முடவர், அநாதையர்[2] ஆகியோரைச் சுட்டிக்காட்டிப் 'பசியை நீக்குவது இறைவனுடைய கடமை' என்று பாடுகின்றார். அதை 'யானைத் தீ நோய்'[3] என்று குறிப்பிடுகின்றார். அடுத்ததாக மணிமேகலை மக்களுக்குத் தொண்டுபுரியும் தன்மையை அறிந்து அவளுடைய ஒழுக்கத்தைக் காக்க எண்ணி ஏது வந்துற்றதால் மணிபல்லவத் தீவுக்கு[4] மணிமேகலா தெய்வம் தூக்கிச் சென்றுவிடுகிறது.

இந்த இலக்கியக் காட்சிகள் பசி என்னும் தத்துவத்தைக் குறிப்பிடுகின்றன. கற்கால மனிதனிடமிருந்து உணர்ச்சிகளை அறிந்துகொள்ள சில இயற்கைக் காட்சிகள் பயன்படுத்தப் பட்டன. என்னதான் கொடிய நோயாக இருந்தாலும் அதை

சரிபடுத்திக்கொள்ளுதல் வேண்டும். மலையோரங்களிலும் - காட்டோரங்களிலும் - ஓயாது ஓடித் திரிந்து ஆடிக்கொண்டிருந்த மனிதன், தனக்கு எதிரில் மிருகங்கள் வந்தபோது அவற்றை வெல்ல வேண்டும் என்ற உணர்ச்சி தன்னுள் பொங்கி எழுவதை அறிந்தே இருந்தான். தனிமனிதனாக நின்று அவற்றைக் கொல்வதைக் காட்டிலும் கூட்டமாக நின்று அவற்றைச் சாடி வெல்லலாம் என்று உணரத் தொடங்கினான். அப்போதுதான் குழு, கூட்டம் என்னும் சமுதாய வாழ்வியல் போக்கு இடம்பெறத் தொடங்கியது. புலி, யானை ஆகியவற்றைக் கொன்று அவற்றின் வாயிலாய் தன்னுடைய சக்தி பெருகுவதை அறிந்த மனிதன் வியந்துபோனான். அந்தக் கூட்ட உணர்ச்சியில் தோன்றிய எண்ணங்கள் பக்தி உணர்ச்சிக்கு வித்திட்டது. ஏதோ ஒரு நேரத்தில் எங்கோ ஒரு இடத்தில் மனிதன் அடிபட்டு இறந்துதான் போயிருப்பான். ஆயினும்கூட கண்களில் கண்ணீர் பொங்கினாலும், உடலில் வலி ஏற்பட்டாலும், தொடர்ந்து வாழத் தொடங்கிய அவன் 'கல்' ஆயுதங்களை மண்ணில் நட்டு வழிபடத் தொடங்கினான். அதுதான் சமய உணர்ச்சிக்கு வித்திடத் தொடங்கியது. இந்தக் காலகட்டத்தில் கூட்ட உணர்ச்சியும் கூடியாடும் உணர்ச்சியும் களிப்பு மிகுதியை வெளிக்காட்டியது. அக்களிப்பில் ஆழ்ந்துபோன மனிதன் 'இறைமை' வழிபாட்டு உணர்ச்சிக்கு முதன்முதலாக வித்திட்டான். பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட சில காட்சிகள் காடுகளிலும், குகைகளிலும் தோன்றி மறைந்திருக்கும். ஆகையால் தன்னுடைய எண்ணத்துக்கு மீறிய பயங்கரமான ஓர் சக்தி இயங்குகிறது என்பதை அறிந்து கொண்டபோது வியந்துபோனான் அவன். மொழியியல் அறிஞர் ஒருவர் கூறும்போது 'மொழிகள் இறைவனால் படைக்கப்பட்டது என்று மொழி தோற்றக்' கொள்கையில் சமயத்தையும் மத உணர்ச்சியையும் சேர்க்க வேண்டாம்' என்று சிறந்த கருத்தொன்றைக் கூறியிருக்கின்றார். [5]

மொழியினுடைய பழமையை விளக்கும்போது சிவன் அகத்திய முனிவரை வேண்டி, பொதிய மலைக்கு அனுப்பி த்மிழினை வளர்க்க வேண்டும் என்று கூறியதாக ஒரு புராண வரலாறு உண்டு. அதன்படி அகத்தியர் பொதியமலைக்கு வந்து தமிழை வளர்த்தார் என்று சான்றோர் கூறுவர். குகைவாழ் மனிதனுடைய கருத்தோட்டத்துக்கும் சமய கருத்தோட்டத்துக்கும் வேறுபாடு இருப்பது தெரிகிறது. ஆயினும்கூட மனிதன் தன்னுடைய சொந்த அறிவினால் கருத்துக்களை அறியத் தொடங்கியபோது தன்னைக்காட்டிலும்

வலிமை வாய்ந்த தெய்வத்தின் தன்மையை மொழி வளர்ச்சிக்கு அளித்தான். இதையொட்டி சென்னைப் பல்கலைக்கழகம் தெய்வத் தமிழ் என ஒரு தொகுப்பு நூலை வெளியிட்டுள்ளதை அறியலாம். இந்தத் தலைப்பு மொழிக்கு தெய்வத்தன்மை ஊட்டும் பண்பு தற்கால சமய வரலாற்றிலேயும் இடம் பெற்றிருக்கிறது என்பதனைத் தெளிவாக்குகிறது.[6]

எப்படியாயினும் மொழி வளர்ச்சிக்கு - மொழித் தோற்றத்திற்குக் கதை அடிப்படையினை தள்ளிவிட இயலாத நிலை உள்ளது. மொழியியல் வல்லுனர்கள் சிலபோதில் இதை எதிர்த்தாலும் வழிவழியாக - மரபோட்டமாக வழங்கிவரும் இக்கதைக் கூறுபாடுகள் கவனிக்கத்தக்கதாக உள்ளது. இத்தகைய ஒரு மரபு வழியை தள்ளமுடியாததாகவும் தவிர்க்க முடியாததாகவும் காணப்படுவது இயல்பு. கல்விக் கடவுள் இந்து மதத்தில் 'சரஸ்வதியாக' அமைக்கப்பட்டுள்ளது. பழங்காலந்தொட்டு சக்தி வழிபாடு இருந்தமையால் இந்தப் பெயர் குறித்தல் தன்மை போற்றத்தக்கதாக உள்ளது. இந்த சக்திதேவியின் ஆதரவு இல்லாதுபோனால் கல்வி கற்றல் இயலாததாகும் என்ற குறிப்பு இங்கு நோக்கத்தக்கதாக உள்ளது. கல்விக் கடவுளின் கருணையின்றி அறிவு பெற இயலாது என்பது பழங்காலந்தொட்டு வருகின்ற ஒரு நம்பிக்கையாகும்.

இவ்வாறு வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த பழங்காலத்து மனிதன் அவசரமாகவும் பயத்தினுடைய நிலையிலும் தன்னுடைய உணர்ச்சியை வெளிப்படுத்தி சமய உணர்ச்சிக்கு வித்திட்டான். ஆகையால் சமயம் என்பது மனிதவாழ்வின் ஒரு தொடர்கதையாக அமைந்துள்ளதை காணமுடிகிறது.

## 2. சங்க காலத்தில் பக்தி:

தமிழகத்தில் 'சங்க காலம்' என்று ஒன்றை வரலாற்றாசிரியர்கள் நிறுவுகிறார்கள். அந்தக் காலகட்டத்தில் வாழ்க்கை வளர்ச்சி பெற்றது. இலக்கியங்கள் அரசர்களால் நன்கு வளர்க்கப்பட்டன. 'சங்க இலக்கியம்' என்ற பெயரில் இருபெரும் பிரிவுகள் தோன்றி வளர்ந்தன. சங்கங்களை நிறுவி - விழாக்களை எடுத்துச் - சமயங்களை வளர்த்த பாங்குத் தெளிவாக அமைக்கப்பட்ட நேர்த்தி வியப்பாக உள்ளது.

அரசர்கள் வாழ்வில் பக்தியை வளர்த்திருக்கிறார்கள். 'உண்மையே கடவுள்' என்றும், 'பொய்யாமையே கடவுள்'

என்றும் போற்றி வாழ்ந்த போக்கு உள்ளது. எளிய மக்கள்-சாதாரண மக்கள் 'மன்னன் மதப்பற்று உள்ளவனாக இருக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். மன்னர்கள் அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி வந்தார்கள். அகன்ற வானம் - உயர்ந்து நிற்கும் கோபுரங்கள் - ஆழ்ந்து அடங்கி ஓடும் ஆறுகள் - புதியனவற்றைப் படைத்துக் காட்டும் சாரல்கள் - கண்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கும் இயற்கை ஓவியங்கள் - ஆகியவற்றால் சமய உணர்ச்சி எழும்பி வேகமாகப் பரவத் தொடங்கி இருந்தது. கல்லிடுக்கில் பாய்ந்துவரும் நீரோட்டங்கள் - உள்ளத்திற்கு அமைதி அளிக்கும் மலர்ப் பரப்புகள் - மரங்களில் தேங்கி நிற்கும் துளிர் இலைகள் ஆகிய இவை புதிய ராகம் ஒன்றை அரசியலில் மன்னர்களுக்கும் பக்தி துறையில் சலனமின்றி பணியாற்றிய சமயத் தலைவர்களுக்கும் ஒருவகை 'உந்தல்' சக்தியைத் தோற்றுவித்துக் கொண்டிருந்தது. மக்கள் வாழ்வில் மதம் ஒரு இதமான உணர்ச்சியைத் தோற்றுவித்ததால், உயர்ந்த நோக்கமொன்று அதன்பின் வளர்ந்து வரத் தொடங்கிய போக்கு நன்கு விளங்குகிறது.

## இயற்கை :

சங்க காலத்தில் மனிதவாழ்வு இயற்கையோடு இணைந்து செல்வது புலப்படுகின்றது. இயற்கை கூறுகளை ஞாயிறு, திங்கள், வானம், சுனை ஆகியவற்றின் போக்கில் 'இறைமை', 'சமயம்', 'பக்தி' ஆகியவை விளக்கப்பட்டுள்ளது. இந்த இயற்கையின் பின்னணியில் அன்றைய வாழ்வு செப்பனிடப்பட்டுள்ளது என்றால் அது மிகையில்லை. புலவர்கள் 'இறைபாதி - இயற்கை பாதி ' என்று கோடிட்டுக் கொண்டு பாடிய தன்மை உள்ளது. அத்தகைய இயற்கை அழகை

''கைபுனைந் தியற்றா கவின்பெரு வனப்பு'' (பத்துப்பாட்டு - திருமுருகாற்றுப்படையில்) என்று உள்ளம் உவகை அடையுமாறு வரைந்து வைத்திருக்கிறார்கள்.

அழகில் இரண்டு வகை உண்டு. ஒன்று கரத்தில் காணப்படுகின்ற விரல்களால் புனைவது மற்றொன்று இயற்கையுடன் இனிது அமைவது; ஒன்று விரலால் தீட்டி மகிழ்வது; மற்றொன்று உணர்வால் ஆக்கி மகிழ்வது; ஒன்று செயல்பாட்டில் வரைந்து தெரிவிப்பது; மற்றொன்று மனித முயற்சிக்கு அப்பால் நிகழ்வது; ஒன்று விழிகளுக்கு 'படாடோபமாய்த்' தெரிவது; மற்றொன்று தானே உருவாகி

உணர்ச்சிக்கு உயிரூட்டுவது - ஒன்று இறைவன் படைப்பால் ஆகி வருவது; மற்றொன்று இயற்கையின் விரிந்த கூறுபாட்டால் அமைந்து காணப்படுவது - ஒன்று சில காலத்துக்குப் பின்பு அழிவது ; மற்றொன்று எல்லாக் காலத்திலும் நிறைவாய் வாழ்வது - ஒன்று தற்காலிகமாக ஒளி வீசுவது; மற்றொன்று அழியாமல் ஓங்கி நிற்பது ஆகும்.

இந்த இருவகைப் போக்கும் ஆற்றுப்படை இலக்கியங்களில் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. இயற்கையால் படைக்கப்பட்ட பொருள்களில் இறைமை தோன்றுவது இறைவனின் துணையால்தான். ஆகையால், புலவர்கள் மன்னர்களை வாழ்த்தும் போதெல்லாம் உள்ளம் குளிர்ந்து நிற்கும் காட்சி தெற்றென விளங்குகிறது.

### 3. நதியும் - காலமும்:

மனித வாழ்க்கை, வளர்ச்சிப் போக்கில் இயங்கும் ஒன்றுதான். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் மனித இனம் தனித்து வளர்ந்து - தனித்து ஓங்கி - தனித்து ஓடி - ஒரு இடத்தில் நிலையாக நின்று போய் விடும் என்றெல்லாம் கருத்து மோதல்கள் சான்றோரிடையே - அறிஞர்களிடையே கல்வியால் உயர்ந்தோரிடையே இருக்கும்தான். ஆனாலும், இயக்கப் பாதையில் எந்தவிதமான முட்டுக் கட்டைகள் வந்து வழி அடைத்தாலும், வாழ்வியல் போக்குச் சீறாக - செம்மையாக - அமைந்து கிடப்பதைக் காணலாம்.

காலத்தின் வேகம் தொடர்ந்து ஓடும் நதியைப் போன்றது. மழை பெய்யும்போது, சில ஆறுகள் - நதிகள் - வறண்டு போன மணற் குவியல்களைக் கரைக்க வைத்து, சமவெளிகளில் பாய்ந்து ஓடுவதுண்டு. அப்போது மணற்திட்டுக்கள் ஓங்கி உயர்ந்து நின்றுகாட்சி அளித்தாலும், நீரின் வேகத்தால் குறைந்து வெறும் மணல் வெளியாகிய தோற்றத்தை அடைகிறது. மழைக்கொட்டும் போது, வானத்தில் இருந்து வன்மையான நீர்த்திவலைகளை ஏற்கிறது. அப்போது மொத்தமான திவலைகள் - குமிழிகள் பொங்கி அசைவைக் காட்டுவதுண்டு.

**விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே**
**பசும்புல் தலை காண்பு அரிது** [7]

என்னும் குறள், வானில் இருந்து கொட்டும் மழையின் தேவையைக் காட்டுகிறது. இது மிகவும் இன்றியமையாத

ஒருஇயற்கைப் போக்கே ஆகும். பசுமையான புல் நிறைந்த இடம் மிகவும் இனிமையாக இருக்கும். அதுவும் கூட விண்ணில் இருந்து துளிகள் பொழியும்போது நெஞ்சிற்கு இதமாக இருக்கும். ஆகையால் பசும்புல்லும் - மழையின் சாரலும் இணைந்து இயங்கி இயற்கையான வளர்ச்சிப் போக்கைக் காட்டுகிறது. நதிகளின் மீது தண்துளி விழும்போது எத்தனை அழகான குமிழிகள் தோன்றுகின்றன? எல்லாம் வளர்ச்சிப் போக்கைக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. ஒரே சீராய் இயங்கும் நதி நீரில் எத்தனைவகை சிறு அலைகள்? அதன் வேகத்தில்தான் எத்தனைவகை மாற்றங்கள் ?

**நீர்வழிபடும் புணைபோல் ஆருயிர்** [8]

**என்று** புறநானூற்றில் புலவர் ஒருவர் பாடுகிறார். ஆகையால் ஆற்றின் போக்கு உருளுவதால், அதன் வழியே செல்லும் புணைபோல் உயிர்களின் ஓட்டம் அமைந்துள்ளது. கரைமோதும் நதிநீரில் தோன்றி அமையும் சின்னஞ்சிறு திவலைகளைப்போல வாழ்வின் புதிய தோற்றம் மாறி அமைகிறது. ஆறும் அவற்றின் புனிதமும் நீரின் ஓட்டமும் நீங்கா நினைவாக்கங்களும் புதிய தோற்றத்தை உருவாக்கிக் காட்டும்.

வரலாற்றின் வீச்சு, மனிதனின் வாழ்க்கை, சில திருப்பு முனைகளைச் சந்திக்க முயல்வதுண்டு. கற்கால மனிதன் - குகை மனிதன் - ஆகியோர் வாழ்வின் மாறுபட்ட திக்கில் வாழ்ந்து வந்தார்கள். அந்த இருண்ட குகைக்குள் பாதுகாப்போடு இருப்பதற்கு பலமுயற்சிகளை அவன் செய்திருப்பான். அந்த முயற்சிகளுக்குத் துணை நிற்பதுபோல் குகையோரங்கள் இருந்தன. ஆற்றின் ஓரத்திலேயும் கூட சிறுசிறு அழகிய குகைகள் விளங்கின. அவற்றுள் வாழ-பாதுகாவலோடு வாழ-மனிதன் முயன்ற போக்கு உள்ளது.

மலையோரங்களில் - கற்குன்றுகளின் பிளவுகளில் - ஓங்கி வளர்ந்திருந்த மரங்களின் கிளைகளில் - எப்படியோ மனிதன் வாழத் தொடங்கி இருந்த காலம் ஒன்றிருந்திருக்க வேண்டும். அங்கெல்லாம் இருள் காணப்பட்ட பகுதிகளில் அச்ச உணர்ச்சியோடு வாழத் தொடங்கிய மனிதன், வானின்று கொட்டிய மழையைப் பார்த்துப் பயந்து போயிருப்பான். அதனால் என்ன செய்வது என்ற திகைப்பில் சில ஆண்டுகளை மிகவும் ஆபத்தான சூழ்நிலைகளில் வாழ்ந்து கழித்திருப்பான். அப்போதெல்லாம் இயக்கப் போக்கில் சிற்சில மாறுபாடுகள் தோன்றி அமைந்திருக்கும்.

மரப்பொந்தில் - மழை நீரில் இருந்து தப்பிக்கவும் முடியாமல் - வெளியேறவும் முடியாமல் - தவித்த அக்கால மனிதன் மின்னல் வெட்டுக்களையும் - மேகமூட்டங்களையும் - சேர்த்துக் கொண்டு வாழ்ந்த பாங்கு தெளிவாய் உள்ளது. சூறாவளிக் காற்றும் - மரத்து இலைகள் காற்றில் நனைந்து ஓசையிட்டு செய்த தன்மைகளும் - முள்புதற் ஓரங்களில் ஊர்ந்து சென்ற பாம்புகளின் ஓசையற்ற போக்குகளும் - அம்மனிதனின் உண்மை அறியமுயன்ற முயற்சி நன்கு வரையப்பட்டுள்ளது. ஈரத்தில் நனைந்துபோன குகை முகடுகள், பிளவின் விரிசல்கள், சறுக்கல் வளைவுகளின் காட்சிகள் - அவனுள் அச்ச உணர்வைத் தூண்டிக் கொண்டே இருந்தன.

பேய் மழைக் காரணத்தால் மலைகளின் அடி பாகங்களில் எத்தனையோ சுழற்சிகளும் - சிந்தையைப் பயப்படுத்தவல்ல கற்பாறை கசிவுகளும் எல்லா இடங்களிலும் பரவலாக தென்பட்டுக் கொண்டிருந்த போக்குக் காணப்படுகிறது. கல்லை உருட்டிக் கொண்டு வரும் வெள்ளங்கள் பல அன்று இருந்தன. அவை 'நீத்தம்' என்ற பெயரில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ் மக்கள் அழகாக இயக்கப் போக்கில் சுட்டி நிற்பதை அறியலாம்.

ஒரு புலவர் தோழிக் கூற்றாகக் களவு வாழ்வில் ஈடுபட்ட தலைவனின் செயலை பிரிவில் விடுகின்ற தன்மையை ஆற்றாளாய்த் தலைவிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. இது பாலைத் திணையில் அமையும் பாடலாகும்.

**சூருடை நனந்தலை சுனைநீர் மல்கப்**
**பெருவனா அடுக்கத்து அருவி ஆர்ப்பக்**
**கல்லலைத்து இழிதரும் கடுவால் காண் அற்றுக்**
**கழையாய் நீத்தம் காடலை ஆர்ப்பத்**
**தழங்குகா லேறெடு முழங்கி வானம்**
**இன்னே பெய்ய மின்னுமால் தோழி**
**வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை**
**தண்ணவஞ் சிலம்பின் துஞ்சும்**
**சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே.** [9]

''உணவினைப் பெற்று முகத்தில் புள்ளிகளைப் பெற்ற யானை தண்ணியதாகிய நறுமணம் கமழும் மலை பக்கத்திலே உறங்கும், சிறிய இலையை உடைய - சந்தன மரத்தினை உடைய - பெரிய காட்டில் அச்சத்தை உடைய சுனையில் நீர்நிரம்பும்;

கற்களைப் புரட்டிக் கொண்டு ஓடிவருகின்ற மிக்க விசையினை உடையது. கான் ஆற்றின் இடத்தில், பற்றுக் கோடாகிய மூங்கிலும் முழுகுமாறு பெருகிய வெள்ளத்தின் அலைகின்ற காட்டில் சென்று மோதி நிற்கவும் ஒலிக்கின்ற இடியேற்றோடு முழக்கம் செய்து வானம் இன்னே பெய்ய மின்னும் மின்னி நிற்கும். இக்காலத்தை நோக்கிய உடன் அவர் இன்னே வந்து நின்னை வரைந்து கொள்வார். வருத்தம் வேண்டாம் " என்று தோழி தலைவியை ஆறுதல் படுத்தும் விதமாக அமைந்துள்ளதைக் காணலாம்.

இங்கு 'வெள்ளக்காடு' சுனைநீர் - அருவி நீர் - அவற்றின் பெரிய ஓசை - அகன்ற காடு - இலைகளின் மிகுதி - கற்களின் உருளை ஓட்டம் - வேகத்தால் மோதல் தோன்றல் - மழையும், பின் தோன்றும் மின்னல் - ஆகியவை நன்கு விளக்கப்பட்டுள்ளன. இதற்கோர் வரைபடத்தைக் காணலாம்.



1. 'சூர்' உடைய சுனை - எனில் 'பயங்கரமான அச்சத்தை உருவாக்கிக் காட்டும் காட்டில் இருக்கும் சுனைகள்' என்று பொருள் கொண்டால், வளர்ச்சிப் போக்கில் விரிந்து விளங்கிய தன்மை நன்கு தென்படுகிறது. அந்தத் தன்மை மிகுந்த சுனைகளிலே முதலைகள் ஒதுங்கி இருந்து அச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கும். பாசிகள்-காற்றோடு அடித்து வந்த சின்னஞ்சிறு கிளைகள் - ஆகியவை நீர்ப்பரப்பின் மேல் தவழ்ந்து வந்து கொண்டிருக்கும். ஆகையால், ஆதிகால மனிதன் அந்தச் சுனைகளில் - நிரந்தரமாகக் குளிர்ச்சியுடன் இருக்கும் சுனைகளில் கைவிட்டுத் துழாவி, மலர்களைப் பறிக்கவோ - அருகில் - மிக அருகில் ஓடிய மீனைப் பற்றவோ செய்திருப்பான். அப்போது கால் வழுக்கிச் சுனையில் வீழ்ந்திருப்பான். பெரிய மீன்களாடும். கரையோரம் ஒதுங்கி இருந்த முதலைகளோடும் தாமரை மலர்களின் கொடிகளில் சிக்கிய துயரோடும் போராடி இருப்பான். அப்போதெல்லாம் அச்சம் பயம் அவனுள் தோன்றியிருக்கும். ஆகையால்தான் 'சூர்' என்னும் சங்க காலச் சொல்லொன்று 'அச்ச' உணர்வைத் தோற்றுவித்து அதற்கும் அப்பால் இந்தச் சுனையும் - முதலைகளும் - மீன்களும் - மலர்க் கொடிகளும் ஏதோ ஒரு 'மாபெரிய' ஆற்றலை - தன்னுடைய தன்மையை மீறிய சக்தியை - எங்கோ - ஏதோ ஒரு புத்துணர்ச்சியைத் தோற்றுவித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தான். அந்த எல்லையற்ற 'சக்திக்கு' அவன் 'வணக்கம்' தெரிவித்தான். அதுவே காலவேகத்தில் பக்தி (சமயம்) உணர்விற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தது.

2. ஆர்க்கும் அருவிகள் - 'ஓ' வென ஓங்காரமிடும் அருவிகள் - குன்றுகளின் இடையே குழைந்து வரும் அருவிகள் - மண்ணைக் கிழித்துக் கொண்டே ஓடும் அழகிய அருவிகள் - அக்கால மனிதனுடைய வாழ்வை எப்படி எல்லாம் தாக்கி இருக்கிறது என்பதை உணர்ந்தால் - ஆர்த்தல் (ஓசை) என்னும் சொல் மனித வாழ்வின் - சமயம் (மதம்) பக்தி (உணர்வு) ஞானம் (அறிவு) ஆகியவற்றைத் திறமையுடன் காட்டும் நிலை உள்ளதல்லவா ? எங்கோ கற்குன்றுகளின் மீது தவழ்ந்து ஆடி - மலைகளைச் சிற்றலையால் மோதி - மரத்துண்டுகளின் மீது பாய்ந்து ஒலியெழுப்பி - ஓடோடிச் செல்லும் அருவிகள் - ஓய்வு இன்றி குதித்துக் கும்மாளமிட்டுக் - குவிந்து - எழும்பி, ஆழ்ந்து-அலைந்து -

வீழ்ந்து - விலகிச் செல்லும் அருவிகள் - எத்தனையோ 'பக்தி' விதைகளைப் போட்டு உள்ளது அல்லவா? இத்தகைய வளர்ச்சி மனித வாழ்வியல் வரலாற்றுப் போக்கில் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே அச்சத்துடன் கூடிய சமய உணர்வைக் கிளறிவிட்ட போக்குத் தெளிவாய் உள்ளது.

3. அருவி மலையில் இருந்து கொட்டி - மணலில் வெண்ணுரையுடன் ஓடிக் கல்லை உருட்டிக் - கண்களுக்கு ஏற்ற காட்சி அளித்து - உயர்ந்த கோடுகளின் மீது உருண்டு ஓடி - பெரியதோர் நீர்ப்பரப்பைத் தோற்றுவித்து மெல்ல ஆறுகள் சலசலத்தல் உண்டு. அப்போது சிறிய சிறிய கல் உருளைகள் ஓடிவந்து வழியைப் பாழாக்குமல்லவா? அதற்குத்தான் 'அச்சத்தோடு கூடிய உணர்வைத் தோற்றுவித்தல்' என்பதாகும்.

4. உயர்ந்த வானம் அழகாய் விளங்குகிறது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை 'மின்மினி'களுடன் விரிந்து அமைந்துள்ளது. அதற்கு எல்லை என்பது உண்டா? காட்சிக்குக் கனிவாய் இருந்தாலும் விரிவை நோக்கும் போதும்-அந்த விரிவில் கலந்து மழையாய்ப் பெய்கிற தன்மையைக் காட்டும் போதும் - மனிதனின் நெஞ்சில் ஒருவகையான மயக்க உணர்வு தோன்றி மறைகிறது அல்லவா? அந்த 'மயக்க' உணர்விலேயே ஆழ்ந்து - உண்மைகளை அறிந்து கொள்ள முடியாமல் - தெரிந்து கொள்ள முடியாமல் - புரிந்து கொள்ள முடியாமல் - திகைப்பில் ஆழ்த்திப் பெய்யும் 'பெயல்' நெஞ்சினில் பாய்கிறது அல்லவா ? அந்தப் பொருள் புரியாத - உணர்ச்சிக் கலவைக்குத்தான் - 'சமயம்' 'ஆன்மீகம்' 'பக்தி' 'பேரின்பம்' என்றெல்லாம் சான்றோர்கள் பொருள் கூறினார்கள். குழப்பமும், தெளிவின்மையும் சேர்ந்து புதியதொரு புத்துணர்ச்சிக்குத் தூண்டிலாய் நின்ற அழகு தென்படுகிறது. அதுதான்

(அ) தெய்வீகப் பற்று

(ஆ) கடவுள் அருள்

(இ) திருவருள் துணை

(ஈ) உள்ளொளி

(உ) உவப்பிலா ஆனந்தம்

(ஊ) வாலறிவன்

(எ) தாமரைக் கண்ணான்

(ஏ) வேண்டுதல் இல்லான்

(ஐ) வேண்டாமை இலான்

(ஒ) மாசக்தி

(ஓ) வருணன்

(ஔ) பிறைநுதலோன்

என்பது போன்ற சொற்றொடர்கள் வாழ்வின் புதிய திசைக்கு வழிகாட்டி அழைத்துச் சென்ற பாங்கு உள்ளது. ஆகையால்தான் வரலாற்று வளர்ச்சிபடி நிலையில் குவிந்து கிடக்கும் எல்லாச் சமய உணர்வுக்கும் - மதம் என்னும் 'புதுச்சொல்' ஆக்கத்துக்கும் - விதையிட்ட போக்கு உள்ளது. வாழ்வில் இயலாமை - பீதி நிறைந்த உணர்வுக் கரைச்சல் - பயந்த தோற்றப் பொலிவு - வேகத்தின் குழிகளில் அசைவு - காட்சிப் பொருள்களில் உணர்ச்சி - விரைந்து வரும் 'பக்தி' நோக்கு ஆகியவை சமய எழுச்சிக்கு வித்திட்டது. அந்த 'மதம்' என்ற 'தனிவழி' மானிட வாழ்வின் படிநிலைத் தோற்றத்தை விளக்க வல்லதாய் உள்ளது. இது மனிதனின் வாழ்வியல் 'பிரிவினை' உருவாக்கி அமைத்துள்ளமை நோக்குதற்கு உரியது. 'பிரிவு' என்னும் சொல் இல்லற வாழ்வின் இயைந்த போக்குக்கு உரியதாக இருந்தாலும், ஆதிகால மனித வாழ்வில் உலகை விட்டே 'பிரிந்து' செல்லும் - 'இறப்பு' என்னும் சொல்லாக்க முறையை வகுத்துள்ளதை அறியலாம்.

### 4. தயக்கம் :

இல்லற வாழ்வில் இணைந்து வாழ்ந்து கொண்டிருந்த தலைவனும் தலைவியும் பிரிய வேண்டிய நேரம் வந்தது. ஆதி கால மனித வாழ்வோடு இதைப் பிணைத்து எண்ணிப் பார்த்தால் சில வரலாற்றுக் காட்சிகள் இயங்குவதை நன்றாகப் புரிந்து கொள்ளலாம். பாறைகளின் இடுக்குகளில் ஒரு காட்டு மிராண்டிப் பெண், தங்கி இருந்திருக்கக் கூடும். வேறு ஒரு கொடியவன் அந்த இடத்திற்குத் தற்செயலாக வந்திருக்கக் கூடும். கொட்டும் பனியில் இருந்தும் - தண்மையான ஊதைக் காற்றில் இருந்தும் - உணர்வின் வெடிப்பில் நின்ற உடல் நடுங்கி ஒடுங்கும் போது - அம்மனிதன் நிலை தடுமாறிப் போய் இருப்பான். ஆகையால் அந்தப் பிளவுக்குள் நுழைந்து தற்காப்புக்காகத் தப்பித்துக்

கொள்வதற்காக-தடுமாற்றம் நீங்குவதற்காக - அந்தப் பிளவின் ஓரமாக - மிகமிக ஓரமாக - ஒதுங்கி இருப்பான். அப்போது ஏற்கனவே அந்தப் பொந்தில் ஓரம்பார்த்து நின்று கொண்டிருந்த அந்தப் பெண் தயக்கத்தோடு 'வீல்' என்று கத்தி இன்னும் ஓரமாக ஒதுங்கி நிற்க முயன்றிருப்பாள். எதிர்பாராவிதமாக ஏற்பட்டுவிட்ட இந்தச் சந்திப்பில் அந்த மனிதன் திடீரென்று அசந்துபோய் இருப்பான். அதற்குள் பனியும் காற்றும் அவர்கள் அணிந்திருந்த மரப்பட்டை ஆடைகளைத் தாக்கி அவிழ்த்து விட்டிருக்கக்கூடும். அது ஒரு இனிமை கலந்த - இன்றியமையாத - வரலாற்று முக்கியத்துவமான சந்திப்பு ஆகும். ஆண் பெண்மையின் உரசலை அறிந்து - உண்மையான உணர்ச்சிப் போராட்டத்தைத் தெளிவாகப் புரிந்து - ஒன்றனுள் ஒன்றாகத் துணையாகிவிட்ட தேவையைத் தெரிந்து கொண்டுவிட்ட கணநேரத் தவிப்பின் கூட்டமாக அமைந்திருந்ததல்லவா ? எங்கோ வெறியானதொரு உணர்ச்சிப் பொங்கலில் வீழ்ந்து - ஏதோ அறியாமையில் சிக்கி அளவற்றத் தாப உணர்வில் ஆழ்ந்து - என்றோ சிறிது சிறிதாக விரிந்த உணர்ச்சிக் கொந்தளிப்பில் திண்ணெனப் போழ்ந்து, உடலெல்லாம் மென்மையின் ஆதங்கத்தில் திரண்டு எழும்பிவிட்டபோது - தண்மைப் பொங்கி உடலெல்லாம் தவறாது கொதித்துவிட்டபோது - எழுச்சிமிக்க எண்ணப்போக்கு ஏக்கத்தை விரித்துவிட்டபோது - அவன் தடுமாறினான் ; அவள் தவித்த நிலை பெற்றிருந்தாள். இந்தத் தேவையான கூட்டம் இருவருக்கும் தேவையானதாக இருந்தது.

ஒன்று - ஒன்றிற்காக ; ஒன்று - ஒன்றினுள் புகுவதற்காக ; ஒன்று - ஒன்றினுடைய தேவைக்காக - வளர்ந்த போக்குத் தென்படுகிறது. சூழல்கள் - தட்ப வெட்ப நிலைகள் புரிந்தும் புரியாமலும் இருந்த காட்சிகள் - எதிலும் துடிதுடித்த ஒரு இதமான ஓசைகள் - தொடர்ந்து வளர்ந்து கொண்டிருந்ததால், தேவையான 'பத்திர உணர்ச்சி' அங்கே அற்றுப்போன ஒரு புதுமைத் தோற்றம் எங்கும் காணப்படத் - தென்பட்டுக் கொண்டிருந்த நிலை -மனித வாழ்வின் நீண்ட தொடர் வாழ்வே காட்சியாக அமைந்திருப்பதைக் காணலாம்.

இந்தக் குறிப்பிட்ட இடத்தில் ஆண் - பெண் வாழ்க்கையில் காமம் இன்றியமையாத இடத்தைப் பெறுவதைக் காணலாம். இருண்ட குகைக்குள்ளே ஆண் பெண்ணைக் காண்பதும் - பெண் ஆணைக் காண்பதும் தவிர்க்க முடியாத ஒரு செயல்பாடாக அமைந்துள்ளதை வரலாற்றுப் போக்குத் தெளிவாகக் காட்டுகிறது.

சில்லிட்ட நீரும் - குளிர்ந்த காற்றும் - காம வயப்பட்ட உடலின் பாங்கும் - கூடல் உணர்வை இன்றியமையாத ஒன்றாக அமைந்துவிட்ட நேர்த்தியைக் காட்டுகிறது. இன்னும் சற்று ஆழ்ந்து காணும்போது ஆணின் இழுப்பாற்றலில் (அல்லது) பெண்ணின் இழுப்பாற்றலில் ஏதோ ஒரு தயக்கம் - உணர்ச்சி வேக முயக்கம் - நிலைத்து நிற்கும் இயக்கம் - தோன்றி அமைவது தென்படுகிறது. அது தேவை தானே ? ஆனால் குபீரென்று அந்தப் பாறை இடுக்கில் - மலை முகட்டின் இடுக்கில் - உயர்ந்து நின்ற குன்றிலிருந்து ஆழ்ந்து செல்லும் இடுக்கில் - தோன்றி நின்ற இதமான உணர்வெழுச்சித் தேவைப்பட்டது அன்றோ ? எதிர்விசை ஆற்றலில், முன்னும் - பின்னும் என்றோ ஒருநாள் எங்கோ ஓரிடத்தில்

**'கூடி முயங்கப்பெறின்'** [10]

என்று வள்ளுவர் என்னும் சான்றோர் ஒருவர் விளக்குவது போல் அங்கே இன்றியமையாத தேவை கருதி கூடல் நடைபெறுகிறது அல்லவா? மலை குகையில் - இருண்ட பிளவில் - தண்துளி வீழ்வில் - பழங்கால ஆண் பெண் சேர்ப்பு நடைபெற்றது. அதன்பின்பு இரு உயிர்களும் தயக்கம் நீங்கிய பின்பு ஒருவருக்கொருவர் சேர்ந்தும், சிரித்தும், அணைத்தும், ஆடியும், கூடியும், குவிந்தும் வாழ்வின் எல்லாத் திக்குகளையும் கண்டு வாழ்ந்திருந்த போக்குத் தெளிவாக உள்ளது.

ஏற்றங்கள் தயக்கத்திற்குப் பின்பு மனித வாழ்வில் நுழைந்திருநத பாங்கு நன்கு தென்படுகிறது. நடந்து போகும்போதும் - கடந்து போகும் போதும் - எத்தனை வழுக்கல் பாதைகள் ! கூர்ந்து பார்த்த போதும் - குவியலாய்ச் சுள்ளிகள் ஆனபோதும் - வெட்ட வெளியில் சாய்ந்த போதும் - ஏதோ ஒருவிதமான உணர்வு, வாழ்வின் பின்பக்கத்தில் தேங்கி நிற்பதை மனித வரலாறு தெள்ளத் தெளிய காட்டுவதாய் உள்ளது. பின் நின்றுபோன வரலாற்றுச் சுவடுகள், எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்பு புதியதாக - புரட்சியானதாக முன்னோக்கி மூட்டிவிட்ட தீ போல் கனன்று - கொழுந்து விட்டு எரிந்து நின்ற தன்மை, நெஞ்சில் வடிவம் கொள்கிறது அல்லவா?

## 5. கோபம் - உணர்தலும்

எப்படியோ வாழ்ந்து வந்த பழங்கால மனிதன் சற்றே முன்னோக்கி நடக்கத் தொடங்கினான். இருண்ட இடங்களில் பெண்ணைக் கண்டதும், அவனுள் ஏதோ ஒரு விளக்கத்திற்கு

அப்பால் - அறிவுக்கு அப்பால் - உணர்ச்சி கொந்தளிப்பு எழத் தொடங்கியது. வீசி அடித்த புயல் காற்றில், விம்மி அடிக்கத் தொடங்கிய போது, அவன் அவளுக்கு எத்தனையோ ஆறுதல்களைச் சொல்லி இருப்பான். வெகு தூரத்தில் ஓங்கி வீசிய காற்றோட்டம் - துளிகளின் சாரல் - கல் இடுக்கில் பதுங்கி இருந்த அந்தப் பெண்ணின் உடலில் நடுக்கத்தை ஏற்படுத்தி இருக்கும். அதுகண்ட அந்த ஆதிகால மனிதன், அவளுக்குப் பாதுகாப்பு அளித்துக் காக்கும் பொருட்டு முன்னால் வந்து நின்றிருப்பான். அப்பாது மழைக் காற்றில் இருந்து தப்பிக்க துட்ட மிருகம் ஏதேனும் அந்த குகைக்குள் நுழைந்திருக்கக் கூடும். அந்நிலையில் ஆணின் நெஞ்சில் கோப உணர்ச்சி ஏற்பட்டிருக்கும். அந்தக் கோப உணர்வில் மிருகத்தைத் தாக்கத் தொடங்கிய போது, பெண் அவன் செய்யும் வீர-தீர செயல்பாடுகளைக் கண்டு வியந்துபோய் இருப்பாள். அந்த வியப்பும் - அவனுடைய மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒரு புதிய சக்தியின் எழுச்சியும் - நெஞ்சில் பதிந்து நின்றதை அறிந்திருப்பாள். அந்த மாசக்தி , கோபத்தை அடிப்படையாக வைத்து ஏற்பட்ட ஒன்றுதான். ஆகையால்தான் ஆணின்கோபம் - ஆணின் ஆத்திரம் வளைந்தோடி புதியதொரு திசை மாற்றத்தைத் தொடங்கி வைத்தது. அதுதான் 'இறைமை' பற்றிய கருத்தோட்டம் என்று காட்டு (மிராண்டி) மனிதனிடம் தோன்றி வளர்ந்த கோபத்தின் இன்றியமையாத வெளிப்பாடு- மனித வாழ்வில் ஒரு புதிய திருப்பு முனையைத் தோற்றுவித்து அமைந்தது.

பத்துப்பாட்டில், பட்டினப் பாலையில் பெரிய மிருகமான களிறு பற்றிய குறிப்பு வருகிறது.

**வெளியில் இளக்கும் களிறுபோல**
**தீம்புகார்த்திரை முன்றுறை**
**தூங்கும் நாவால் துவன்று இருக்கை** [11]

இந்தக் களிறு பழங்காலத்து - நாகரிகம் வளராத காலகட்டத்தில் காடுகளிலும், குன்றுகளின் ஓரங்களிலும் வாழ்ந்து வந்த பெரிய மிருகமாகும். இந்தச் சக்திமிக்க மிருகம் அசையாத தறிகளை அசைத்துக்காட்டும். மனிதர்களிடம் ஒருவகையான கோபத்தை ஏற்படுத்தி வந்தது. புகாரிடத்து அலைகளை உடைய தன்மை மிகுந்த இருக்கையோரங்களில் அவை தங்கி இருந்தன. இது அந்தக் காட்டில் வாழ்ந்த பெண்களிடம் பயத்தை உருவாக்கினால், அஞ்சாத ஆண்களிடம் கோபத்தை உருவாக்கி 'வீரம்' என்றும் 'அஞ்சாமை' என்றும் உணர்வைத் தூண்ட அதுவே 'பக்தி'யைத் தோற்றுவிக்கக் காரணமாய் அமைந்தது.

பத்துப்பாட்டில் இன்னொரு பாடலாகிய குறிஞ்சிப் பாட்டில் களிறு காணப்படுகிறது. மலைக் குன்றுகள் ஓங்கி இருந்த இடங்களில் தலைவியும் தோழியும் கூடி, ஒதுக்குப் புறமாய்ப் பாய்ந்தோடிக் கொண்டிருந்த சுனையும் - அச்சுனையில் நிறைந்திருந்த நீரின்கண் - அந்த நீரில் வளர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருந்த மலர்களின் குவிப்பின் கண்- ஆடி இருந்த காலத்தில் களிறு ஒன்று அந்தப் பக்கமாய் வருகிறது.

**இருவி வேய்ந்த குறுகால் குரம்பை**
**பிணைஏர் நோக்கின் மனையோள் மடுப்ப**
**தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து**
**சேமம் மடித்த பொழுதில் வாய்மடுத்து**
**நிழத்தலின் சிறுமை நோனாது....**
**உரவு சினம் செருக்கி கணைவிடு புடையூ**
**கானம் கல்லென மடிவீடு வீளையர்** [12]

தினையால் குடிசை வேயப்பட்டுள்ளது. அங்கு மான் நோக்குடைய தன் மனைவி ஆக்கிக் கொடுத்த கள்ளை உண்டு வாழும் அவன், தினைக் காத்தற் தொழிலைக் களிப்பு மிகுதியால் மறந்தொழிய அவ்வழியே அப்புனத்தின் கண் யானை புகுந்து நின்று பெரிதும் அழித்ததால் இளைஞர் மிகுந்து வில்லை நாணேற்றி சீழ்க்கை விட்டு ஆரபாரம் செய்து அந்த யானையை ஓட்டுகிறார்கள் என்ற வரிகளில் யானை - யானையினுடைய ஆற்றல், இளைஞருடைய கோபம், அவர்கள் கண்ட யானையின் ஆற்றல் - அதைச் சினத்தால் விரட்டி அடித்தல் போன்ற காட்சிகள், 'சினம்'-'கோபம்'-'ஆத்திரம்' முதலிய பண்புகளை-பழங்கால மனிதனுடைய தன்மைகளை நன்கு விளக்கிக் காட்டுவதாய் உள்ளது. அந்தக் கோப உணர்ச்சி, தலைவன் பாற் தோன்றும் போது செய்தற்கரிய செயலை - ஆற்றல் மிக்க செயலை இங்குத் தோற்றுவிக்கிறது.

அதுபோலவே 'களிறுதரு புணர்ச்சி' யொன்று கபிலரால் சுட்டிக் காட்டப்படுகிறது. யானையைக் கண்டு அஞ்சி ஓடும் தலைவி - தோழி ஆகியோர் தலைவனின் அகன்ற மார்பில் பாதுகாப்புத் தேடுவதாக அமைந்துள்ளது. அதன்பின்பு, நெடிய கோலை உடைய தலைவனின் கோப உணர்ச்சியும், யானையின் மேல் அம்பெய்து விரட்டுவதையும், வீரத்தை முதலாகக் கொண்டு எழுந்த சுனைமேல் சென்றுபாய, யானை அச்சம் கொண்டு பின்வாங்கி ஓட்டமாக ஓடி மறைகின்றதல்லவா?

வார்கோல் உடுஉறும் பகழி வாங்கி
கடுவிசை ஏவி அண்ணல் யானை
..........
புண்ணுமிழ் குருதி முகம் பாய்ந்து இழிதா [13]

அதேபோல் உணர்தலும் அமைந்துள்ளமைக் காணத் தகுவதாகும். நிலபுலங்களில் நுழைந்து நெற்கதிர்களை அழித்து வீணாக்குவது போன்ற களிற்றின் காட்சிகள் சங்க இலக்கியத்தில் இருக்கின்றன.

யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே [14]

அக்காலத்தில் களிறுகள் வயல் வெளிகளில் நுழைந்து விளைச்சல் காணும் கதிர்களை, ஒன்றாகச் சேர்ப்பதைவிட, கலக்கி - அழித்துச் சிதைத்து - வதைத்து - தூக்கி எறியும். அது ஒரு பயங்கர அழிவுக் காட்சி ஆகும். அது இயற்கையாய் அமையுமாற்றை உய்த்து உணர வேண்டும். அந்த உணர்வில் மனித ஆற்றலுக்கு 'அதீத சக்தி' ஒன்று உண்டு என்பது தெளிவாகின்றது. அதை எப்படிப் போற்றுவது - அறிவது - உணர்வது என்ற கேள்வி எழும்போது எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டுத் திகழ்கின்ற 'மாசக்தி' வெளிப்பட்டு நிற்கின்றது. அச்சக்தியை 'இறைவன்' என்ற பெயரை அளித்துமனிதன் வாழ்த்தினான். எங்கே மனித சக்தி - மனித ஆற்றல் குலைந்து போகிறதோ, எங்கே உணர்ச்சிப் போக்கு - செயல்திறம் மாய்ந்து போகிறதோ - எங்கே சிந்தனைச் சக்தி சிதைந்து புதைந்து போகிறதோ அங்கே மனிதத் தன்மையை மீறிய அசாதாரண சம்பவங்கள் தோன்றி அமைகின்றன. அதற்குத்தான் 'இறை' என்ற பெயரை அளித்து மனிதன் தணிந்தான்.

ஏதோ ஒரு கற்குன்றின் பிலத்தில் - கற்குன்றின் குகைக்குள் - கற்குன்றின் பிளவில் இரவின் இருண்ட இடத்தில் உறங்கும்போது புலிகள் - சிங்கங்கள் ஆகியவை முழங்கும் அல்லவா? அந்த ஓசையை வேறு ஒரு திக்கில் அதேபோன்ற பாறை வளைவில் தங்கி இருந்த காட்டு மனிதன், பயங்கரமான சூழ்நிலையை எண்ணி அஞ்சியபோது, எல்லாவற்றையும் கடந்த 'கடவுள்' கொள்கையை உய்த்து உணர்ந்து விளங்கிக்கொள்ளத் தொடங்கினான். அதுதான் 'சமய' உணர்ச்சிக்கு வித்திட்ட முதல் சம்பவம்.

கண்டும் காணாமல் - கேட்டும் கேட்காமல் - அறிந்தும் அறியாமல் - வாழ்கின்ற நிலை போய், விரித்துப் பார்த்து - எண்ணிச் சாய்ந்து, பின்னிப் பிணைந்து, தன்முன்னால் அசைந்து

கொண்டிருந்த காட்சிகளை வரிசைபட அமைத்தபோது, தன் நினைவுக்கும் - செயலுக்கும் அப்பாற்பட்ட ஒன்று வாழ்வில் புதுமையைப் படைத்துக் கொண்டிருந்ததை உணர்ந்து, அந்தப் புதுமையில் புரட்சி மணம் கமழ்ந்து வருவதைக் கண்டு வணங்கினான் - வாழ்த்தி அமைதி கொண்டான். அதற்கு 'உய்த்து' உணரும் சக்தியைக் கண்டுபிடித்துக் கொண்டான்.

புறநானூற்றில் 'கடவுள்' என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு உணர்ந்து தெரிந்து கொண்ட 'இறைமை'த் தத்துவத்தைப் பலவகையான துன்பங்கள் -துயரங்கள் ஏற்பட்ட போதிலும் மெல்லிய நுண்மையான அறிவின் வளர்ச்சிப் போக்கு தெளிவாக உள்ளது.

அருவி தாழ்ந்த பெருவனா போல
ஆரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்
கடவுள் சான்ற கற்பிற் சேயிழை [15]

இப்பாட்டில், 'அருவி குதித்து ஓடும் மலையும், ஆரத்தோடு திகழ்ந்த மார்பும், தெய்வத்தன்மை வாய்ந்த கற்பினையும் கொண்ட அரசி என்று புலவர் கூறி இருத்தல் நோக்கத்திற்குரியது. ஒரு காலத்தில் 'கற்பு' என்னும் கொள்கை சமுதாயத்தில் ஆழ்மையாய்ப் பதிந்திருந்தது என்பதை சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய காப்பியங்கள் தெளிவுறுத்துகின்றன. இன்றைக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் பெண்கள் கற்பில் ஓங்கி நின்று வாழ்ந்தார்கள் என்றும், அதனால் 'பத்தினி' என்ற பட்டம் அவர்களுக்கு அளிக்கப்பட்டது என்றும் - நாளடைவில் அப்பத்தினிப் பெண்டிர் 'தெய்வம்' என்றும் 'மாசக்தி' என்றும் போற்றப்பட்டார்கள் என்றும் புலவர்கள் கோடிட்டுக் காட்டிய போக்கு செம்மையுற விளங்குகிறது. ஆகையால்தான்,

உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும் [16]

என்று காவிய ஆசிரியர் சிறப்பித்துப் பாடுகிறார். மணந்து கொண்ட பின்பு வாழ்வு செம்மையுற அமைவதில் தலைவனும் தலைவியும் கருத்துச் செலுத்துதல் வேண்டும். காலப்போக்கில் காட்டு வாழ்வின் - குகை வாழ்வின் போக்கும் நோக்கும் விந்தையான திருப்பு முனைகளைக் கடந்து எத்தனையோ அடக்குமுறைகளை சாடிநின்று புதிய வாழ்வை - மாறிய வாழ்வை வளர்ச்சிப் பாதையில் அமர்த்திக் கொண்ட போக்குத் தெளிவாக அமைந்துள்ளமை காணலாம். இலக்கண புலவர் ஒருவர் கூறியது போல,

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையினானே** [17]

பழங்கால சிந்தனைப் போக்குகளைத் தொகுத்து ஆராய்ந்து இலக்கண நூலார் பலர், மொழியில் தோன்றும் மாற்றங்களைப் பாடி வைத்திருப்பதுபோல் வாழ்வின் நுண்மையினையும் கண்டு வியப்புடன் - நயமுடனும் கருத்துக்களை அடுக்கி வைத்திருக்கும் பாங்கு அழகாய் அமைந்துள்ளது. இவை உணர்ந்த போக்கின் ஒரு திசைமாற்றம் தான்.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | வரதராசன், மு., | தமிழ் இலக்கிய வரலாறு, ப. 96 |
| 2. | சீத்தலை சாத்தனார் | மணிமேகலை, 13, கா. 111-113 |
| 3. | மேலது | கா. 19, வ. 153 |
| 4. | மேலது | கா. 140, வ. 154 |
| 5. | மீனாட்சி சுந்தரனார், டி.பி., | தமிழ்மொழி வரலாறு, ப.1 |
| 6. | சஞ்சீவி, ந. (தொ. ஆ) | தெய்வத் தமிழ், 1975 |
| 7. | திருவள்ளுவர் | திருக்குறள், வான் சிறப்பு,8 ப. 17 |
| 8. | கணியன் பூங்குன்றனார் | புறநானூறு, 192 |
| 9. | நல்வெள்ளியார் | நற்றிணை, 7 |
| 10. | திருவள்ளுவர் | திருக்குறள், ஊடலுவகை, ப.163 |
| 11. | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | பட்டினப்பாலை, பா.172-174 |
| 12. | கபிலர் | குறிஞ்சிப்பாட்டு. பா. 153, வ. 60 |
| 13. | மேலது | பா. 163 - 72 |
| 14. | ....... | புறநானூறு, 284 |
| 15. | மேலது | புறநானூறு, 198 |
| 16. | இளங்கோவடிகள் | சிலப்பதிகாரம், நீதிநெறி ஒன்று |
| 17. | பவணந்தி முனிவர் | நன்னூல், 462, ப. 282 |

# இயல் -2

# சமயத் தோற்றம்

இவ்வாறு பழங்காலந்தொட்டு வழிவழியாக வந்த சமய நம்பிக்கை உருவ வழிபாட்டிற்கு வித்திட்டது. சிவன், விஷ்ணு ஆகியோரை முன்வைத்து வாழ்க்கைப் போக்குகள் நினைக்கப்பட்டன.

புறநானூற்றில்

**''நீல்நிற உருமின் நேமியோனும் என்று**
**இருபெரு தெய்வமும் உடன் நின்று''[1]**

என்று காவிரிபூம்பட்டினத்து காரிக்கண்ணனார் பாடியுள்ளார். இந்த வரிகள் புறநானூற்று காலத்தில் வழக்கில் இருந்த கடவுளர்களைக் காட்டுகிறது.

அதுபோலவே சங்ககால மன்னர்களை ஞாயிறாகப் போற்றி வழிபாடு செய்த பாங்கு தென்படுகிறது. சீத்தலைச் சாத்தனார் பாண்டியல' சித்திரமாடத்து துஞ்சி நன்மாறனைப் பாடும்போது பகைவர்களுக்கு ஞாயிறாகவும், நண்பர்களுக்குத் திங்களாகவும் விளங்குகிறாய் என்று பாடுகிறார்.

**''ஞாயிறு அனைய நின் பகைவர்க்கு**
**திங்கள் அனைய எம்மனோர்க்கே''[2]**

என்று பாடியுள்ளமை நோக்கத்தக்கது.

தண்மையை விளக்கும் பண்பினைக் கூடப் புறநானூற்றிலே அமைந்துள்ள பாங்கு உள்ளது. உறையூர் மருத்துவன் தாமோதரனார் சோழன் குறாப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவன் என்னும் மன்னனைப் பாடும்போது இறைவனுடைய தன்மையை விளக்குவது போல் வெண்காற்றுக்குடை தண்மை அளிக்கிறது என்று கூறுகின்றார். இக்கருத்து உமையொடு பாகன் (அர்த்தநாரீஸ்வரன்) என்று இறைவனை வழிபாடு செய்யும் போக்கு அமைந்துள்ளமை புலப்படுகின்றது.

சமய வாழ்வில் நெருப்பும், நீரும் என்னும் கருத்து இறைமையினுடைய தன்மையை விளக்குவதாக அமைந்துள்ளது. நெருப்பு என்பது ஆண்மை, நீரும் என்பது தண்மை ஆகையால் இறைவன் வெம்மையாகவும், குளிர்ச்சியாகவும் உள்ளான் என்பதை இந்தப் புலவர் விளக்குகின்றார். புலவர் பாடும்போது,

**''வெயின்மறை கொண்ட உருகெழு சிறப்பின்**
**மாலைவெண் குடை ஒக்குமால் எனவே''[3]**

என்று பாடுகின்றார்.

## 1. ஆற்றுப்படை

சங்க இலக்கியங்களில் பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்கள் மற்றெல்லா நூல்களை விட பெருவாரியாக கடவுளைப் பற்றிய செய்திகளைக் கொண்டதாக அமைந்துள்ளமை காண முடிகிறது. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை என்னும் பகுதி இடம்பெற்றுள்ளது. இதனை ஆற்றுப்படை வரிசையில் வைத்து நக்கீரனார் விளக்குகின்றார். சங்க காலத்தில் ஆற்றுவித்தல் என்பது ஒரு இன்றியமையாத வாழ்க்கை மரபாக இருந்தது. பாணர், கூத்தர், விறலியர், பொருநர் ஆகியோர் அரசர்களை நாடி கலைகளை வளர்த்து அரசன் கொடுக்கின்ற பரிசுப் பொருட்களை வைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். பொருள் பெற்று மீளும் அவர்கள் பசியால் வாடும் மற்றொரு கூட்டத்தைக் காணும்போது 'இந்த வழியாகச் சென்றால் இந்த அரசன் பரிசு அளிப்பான், கொடை நலன் நல்குவான் அதைப் பெற்று வாழ்வீர்' என்று வழிப்படுத்துவார்கள். அதற்கு 'ஆற்றுப்படை' என்று பெயர். தொல்காப்பியர் இதனை விளக்குகிறார்.

**''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்**
**சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்''[4]**

என்ற வரிகளில் சங்க காலத்தில் மக்கள் வாழ்க்கையை இன்றியமையாத பகுதியாக விளங்கிய ஒரு மரபு இங்கு விளக்கப்படுகின்றது. இந்த ஒழுகலாறு சங்க காலத்தில் பக்தி நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. பொருள் நாடிச் செல்லும் கலைஞர்களுக்கு எப்படி வழி கூறப்பட்டதோ அதே போல்

இறைவனை நோக்கி சமயத் துறையைக் கண்டு தெய்வ வழிபாட்டு உணர்ச்சிக்கு வித்திடப்பட்டுள்ளது.

**2. தலைமை**

நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையில் தலைமை இடம் இறைவனுக்கே அளிக்கப்பட்டிருக்கின்றது. பக்தி உணர்ச்சி மிகுந்து எழுகின்ற ஒரு இயல்பு திருமுருகாற்றுப்படையில் விளக்கப்படுகிறது. எப்படி அரசரை நோக்கி வழிகூறப்பட்டதோ அதுபோல் கடவுளை நோக்கி திசைமாற்றம் காட்டப்பட்டது.

**'உலகம் உவப்ப வலநேர்வு திரிந்தது'** [5]

இங்கு இறைவனால் படைக்கப்பட்ட உலக உருண்டை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. விண்ணில் திரிகின்ற கோள்கள் இறைவனுடைய அருளினால் சுற்றி வருகின்றது. இறைவன் இல்லாது போனால் வானின் உருப்பொருள்களாக விளங்குகின்ற எல்லா கோள்களும் தங்களுடைய விசையை நிறுத்திக் கொள்ளும். அதைக் காட்டத்தான் உலகம் என்ற சொல் நக்கீரரால் படைக்கப்பட்டது. இதில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவினன்குடி, திருஏரகம், குன்றத்தூர் ஆடல், பழமுதிர்ச்சேலை ஆகிய அறுபடை வீடுகளின் அழகும் சிறப்பும் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

**3. திருமால் (வைணவம்)**

திருமுருகாற்றுப்படையில் திருமாலைப் பற்றி குறிப்புகள் காணப்படுகின்றன. நஞ்சுடனே உறைக்குள்ளே கிடந்த துளையினுடைய வெள்ளிய பல்லையுடையவனும், அச்சம் தோற்றுவிப்பவனுமாகிய கொடிய வலியினையுடைய பாம்புகளும் மாளும்படி அடிக்கும் பல வரிகளையுடைய வளைந்து சிறகையுடைய கருடனை அணிந்த நெடிய கொடியினை உடைய திருமாலும் என்ற குறிப்பு வருகின்றது.

**''கடுவொடொடுங்கிய தூம்புடைவாலெயிற்று**
**அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்**
**பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்**
**புல்லணி நீள்கொடிச் செல்வனும்''** [6]

இவ்வாறு சங்க காலத்தில் திருமால் வைணவர்களுடைய

கடவுளாகப் போற்றப்படுகிறார். சமயம் பற்றிய கருத்தோட்டங்கள் திருமுருகாற்றுப்படையில் இந்த வகையில் அமைந்துள்ளது.

### 4. சிவன் (சைவம்)

அது போலவே சைவ சமயமும் சங்க காலத்தில் மிகப் பரவலாக காணப்பட்டதற்கு திருமுருகாற்றுப்படையில் சான்றுகள் உள்ளன. உருத்திரன் (சிவன்) நக்கீரரால் சிறப்பிக்கப்பட்டிருக்கும் முறை வியப்பாக உள்ளது. வெள்ளிய ஆனேற்றை வெற்றிக் கொடியாக வலப்பக்கத்தே உயர்த்தவனும் பலராமனும் புகழப்படுகின்ற திண்ணிய தோளையுடையவனும் இறைவி ஒரு பாகத்தே பொருந்தி விளக்கும் திருமேனியை உடையவனும், இமைத்தலில்லாத மூன்று கண்களையுடையவனும் முப்புரத்தை எரித்தவனும், மாறுபாடு மிக்கவனும் ஆகிய உருத்திரனும் என்று சிவனுடைய புகழ் விளக்கிக் கூறப்படுகிறது.

''வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்'' [7]

இந்த வகையில் சிவனுடைய வழிபாடு இன்றியமையாத ஒன்றாக அமைந்திருத்தல் காணலாம். சிவனை வழிபடுவோர் சைவம் என்னும் சமயத்தால் சேர்க்கப்பட்டார்கள். உயிர்கள் வாழ்வதும் முக்தி அடைவதும் சிவனுடைய அருளால்தான் என்று படித்தவர்களும், பண்டிதர்களும், சமயவாதிகளும் நம்பினார்கள். சிவனுக்கு மூன்றாவது கண்ணாக நெற்றிக்கண் உண்டு என்றும், அந்த நெற்றிக்கண்ணை பகைவர்களை அழிக்கப் பயன்படுத்தினார் என்றும் சமயக் குரவர்கள் எண்ணினார்கள்.

அதுபோலவே திருமால் அவதாரத்தைப் பத்து விதமாக 'தசாவதாரம்' என்னும் அவதாரங்களுக்காக வைணவர்கள் அமைத்திருக்கின்றார்கள். அரக்கர்களாலும் அசுரர்களாலும் மக்கள் துன்பப்பட்டபோது இறைவன் மனிதனாகத் திருஅவதாரம் செய்து அவர்களைக் காத்தான். எப்பொழுதெல்லாம் மண்ணின் ஒழுக்கம் கெடுகின்றதோ - நீதி அழிகின்றதோ அப்பொழுதெல்லாம் இறைவன் அவதாரம் எடுத்துக் காப்பாற்றுகிறான் என்று சான்றோர்கள் கூறுவார்கள். அந்த

வகையில் கண்டால் மக்களுடைய அறியாமையைப் போக்கத்தான் கடவுள் அவதாரங்கள் எழுப்பப்பட்டன என்பது முடிவாகத் தெரிகின்றது.

திருமுருகாற்றுப்படையில் முருகப் பெருமானின் இறைமைத் தன்மையினை தொடக்கத்தில் வைத்து மாண்பினை நன்கு ஓதி பின்னர் அப்பெருமானுடைய திருஉருவச் சிறப்பினையும் அப்பெருமானை ஏத்தி வானவர் மகளிர் ஆடும் சிறப்பினையும் அப்பெருமான் வெற்றி சிறப்பினையும் திருப்பறங்குன்றத்து மாண்பினையும் பின்னர் திருச்சீரலைவாயின் கண் வீற்றிருக்கும் அம்முருகப் பெருமானுடைய ஆறுமுகங்களும் பன்னிரு கைகளும் இருக்குமாற்றை இருக்கும் முகத்தானே அவர் இயற்றும் ஐந்தொழில் சிறப்பினையும், திருஆவினன் குடியில் அப்பெருமான் காண்பதற்கு வினை நீங்கி விளங்கிய அறிவின் முனிவரும் தத்தம் குறை வேண்டும் பொருட்டு திருமால், இந்திரன், உருத்திரன் அமரர்கள் முதலியோரும் வந்து திரளும் காட்சியினையும் அவையின்கண் நாற்பத்தெட்டு யாண்டு நல்லிளமையைப் பிரமச்சரிய நோன்பில் கழித்த அருமறை நவின்ற இருபிறப்பாளர் முருகப் பெருமானை வழிபடும் சிறப்பும், குன்றுகள் தோறும் அப்பெருமானுக்கு வேன்மகன் ஆடும் விழவும், பின்னர் ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழாமுதல், குறமகள் எடுத்த வெறியயர் களன் இறுதியாக முருகக் கடவுள் விளக்கித் தோன்றும் இடங்களும் நுண்ணிதின் அழகுற காணப்படுகிறது.

## 5. புகழ்

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் முருகபிரானுடைய புகழை விளக்கும் போது

> **''கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்**
> **அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்**
> **குன்றமர்ந் துறைகலும் உரியன், அதா அன்று'' [8]**

விழிகளைப் போன்ற மலர்ந்த சுனைமலர்கள் வண்டின் கூட்டம் சுற்றி ஒலிக்க குன்று அமர்ந்து இருப்பவன் என்று முருக பெருமான் மக்களுக்கு அருள் புரிதலைக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் பத்துப்பாட்டு நூலில் இவ்வாறு சைவ சமயம் ஒரு பக்கமும் வைணவ சமயம் ஒரு பக்கமும் ஆசிரியர்களால் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இவை அக்காலத்து இந்து சமயத்தின் கருத்தோட்டங்கள் சிலவற்றை படம் பிடித்து காட்டவல்லதாக உள்ளன.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | ........ | புறநானூறு, பா.எ.58, ப.151 |
| 2. | மேலது | பா.எ. 59, வ.6-7, ப.155 |
| 3. | மேலது | பா.எ.60, வ.11-12, ப.157 |
| 4. | தொல்காப்பியர் | தொல்காப்பியம், புறத்திணையியல், பா.36 |
| 5. | நக்கீரர் | திருமுருகாற்றுப்படை, பா.1 |
| 6. | மேலது | பா.வ. 148 - 151 |
| 7. | மேலது | பா.வ. 152-154 |
| 8. | மேலது | பா.75-77 |

# இயல் - 3

# வாழ்க்கை அனுபவங்கள்

மனித வாழ்க்கை, அனுபவங்களினால் ஆனவை. இன்பம், துன்பம், தெய்வீகம், உலகியல் என்று அந்த அனுபவங்கள் விரிகின்றன. இறைவனின் படைப்பில் தெய்வீக அனுபவம் மக்களுக்கு அமைந்துள்ளது. குழந்தையாயினும், இளைஞராயினும், மூத்தவராயினும் மேற்கூறிய அனுபவங்களை அடைந்தே ஆக வேண்டும். இந்த அனுபவங்கள் மனிதனின் வாழ்க்கைப் போக்கை மாற்றி அமைக்க வல்லனவாகும். ஐந்து வகையான இறைவனால் அமைக்கப்பட்ட ஐந்து உறுப்புகளின் மூலம் இவை அமைதல் கூடும். குறிப்பாக கண்கள், செவிகள், மூக்கு, நாக்கு, தோல் ஆகிய ஐந்து உறுப்புகள் வாயிலாக அனுபவங்கள் ஏற்பட்டமைகின்றன.

இந்த உறுப்புகளின் மூலமாக வந்து அமையும் அனுபவங்கள் மனித வாழ்க்கையினை ஆய்ந்து அறிய துணை புரிகின்றன. உணர்ச்சிகள் கண்ணின் வழியாகவும், கேள்விச் செல்வம் செவியின் மூலமாகவும், நுகரும் ஆற்றல் மூக்கின் வழியாகவும், சுவையின் தன்மை நாவின் வாயிலாகவும் தொடல் தன்மை தோலின் இயல்பினாலும் வந்து அமைகின்றன.

வாழ்க்கையினுடைய இன்றியமையாத கூறுபாடுகள் உலகியலின் போக்குகளுக்குத் தக்கபடி அமைகின்றன. உலகியல் என்பது வாழ்வின் எல்லா புறங்களிலும் மாறி அமையும் தன்மை உடையதாகும். சமயத் துறையில் இத்தகைய மாற்றங்கள் காலப்போக்கில் வளர்ந்து வந்துள்ள தன்மை நன்கு தென்படுகிறது. இறைமை தத்துவம், மனித இயல்புகள், சமுதாய தோற்றங்கள் ஆகியவை என்றும் ஒரே மாதிரியாக அமைவதில்லை. 'உலகத்தில் தீமைகள் அதிகமாகும்போது நான் பிறப்பெடுத்து அவற்றை மாய்க்கிறேன்' என்று கீதையில் கண்ணன் கூறுகின்றார். இந்தப் போக்கில் 'ஐந்து சுவை'களை அடிப்படையாக வைத்துக் கொண்டு எழும் உணர்ச்சிப் போக்குகள் உண்மையான அனுபவ முத்திரைகளை வாழ்வின் மீது பதிக்கின்றன. சைனம், சமணம், பௌத்தம், சைவம், வைணவம் ஆகிய உலகம் தழுவிய சமய உணர்வுகள் அனுபவச் சுவடுகளை விளக்கிக் கூறுகின்றன.

எல்லா சமயங்களும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளைக் குறித்து விளக்கிக் கூறுவது உண்டு. வாழ்க்கையில் தீமைகளை அகற்றி உண்மைகளை உணர்ந்து நன்மைகளைப் பெற்று தெய்வீக வழியைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்றே எல்லா சமயக் குரவர்களும் கூறுகின்றனர். காமம், மயக்கம், வெகுளி என்னும் மும்மலங்களை வென்று முக்திபேறு அடைய மனிதன் முயற்சி செய்ய வேண்டும் என்பதை அவை பறைசாற்றுகின்றன. ஐம்புலன்களை அடக்கி இறைமை வழிபாட்டில் செலுத்தி காரணகாரிய சம்பந்தங்களை அறிந்து வாழ்க்கை வழியினை வகுத்துச் செல்ல வேண்டும் என்பதே சமயங்களினுடைய தத்துவமாகும். இந்த ஐம்புலன்களை அடக்கி இறைமைத் தன்மையினை அடைய உயிர்கள் ஓயாமல் முயற்சி செய்கின்றன. பொதுவாகக் கூறும் போது,

''சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்'' [1]

என்று அவைகளின் அடிப்படையில் கூறுவதைக் காணலாம்.

இக்கருத்தில் சுவை என்பது நாவைக் குறிக்கின்றது. ஒளி என்பது கண்ணைக் குறிக்கின்றது. ஊறு என்பது உணர்ச்சியைக் குறிக்கின்றது. ஓசை என்பது செவியினைக் குறிக்கின்றது. நாற்றம் என்பது முகர்தலைக் குறிக்கின்றது. இவ்வாறு புலன்களின் வழியே பொங்கிவழியும் இயல்புகள், தன்மைகள் வள்ளுவர் கருத்தில் ஒளிர்கின்றன.

புலன்களின் வழியாக மனிதன் இறைமையை அனுபவிக்க வேண்டுமெனில் புலனடக்கம் மிகவும் இன்றியமையாதது என்பதை உணரலாம். இந்த வழியைப் பின்பற்றி வாழ்க்கைப் பாதையில் நடைபோடும்போது எத்தனையோ வகையான தீமைகள் - இன்ப துன்பங்கள் - அடக்க ஒடுக்கங்கள் ஏற்பட்டு அமைகின்றன. அவை புதிய அனுபவக் கூறுகளை தோற்றுவிக்கின்றன. அவற்றின் வழியாய் 'ஏகன் அநேகன்' என்று மாணிக்கவாசகரால் போற்றப்பட்ட இறைமைத் தத்துவம் வெளிப்பட்டு நிற்கிறது. இந்தப் புலன்கள் இறைவன் அனுபவத்தை கொடுக்குமாற்றை இனிவரும் பகுதிகளில் கூர்ந்து காணலாம்.

### 1. கண்கள்

சமயத் துறையில் ஐம்புலன் அடக்கம் மிகவும் விரிவாக விளக்கப்படுகிறது. மனிதனைப் படைக்கும்போது இறைவன்

அவனுக்கு உலகத்தையும் வாழ்க்கையையும் விளக்கிக் காட்டுவதற்காக ஐம்புலன்கள் அமைத்தார். அதில் கண் என்னும் உறுப்பு முதலாவதாக வைக்கப்பட்டுள்ளது.

இறைவனின் தோற்றம் பல்வேறு வகையாக சிறப்பிக்கப்படுகிறது. உலக உயிர்களை படைக்கும் இறைவன் அந்த உயிர்களின் வாயிலாக பக்தி உணர்ச்சியினையும் உண்டாக்கிக் காட்டுகின்றார். கண் என்றால் 'காட்சி' என்று பொருள். வீதியிலே நடந்து செல்லுகின்ற மனிதன் கண்களை எப்படி பயன்படுத்துகிறான் என்பது ஆராய்வதற்குரியது. வீதியோரங்களில் சிறு சிறு கோயில்கள் கட்டப்பட்டிருக்கின்றது. ஏதோ ஒரு செயலைச் செய்யப்போகும் மனிதன் அங்கே காணப்படுகின்ற காட்சிப் பொருளான இறைவனை வேண்டிக் கொள்வதைப் பார்க்கலாம். சக்தி, சிவன் ஆகிய இரு சொற்களும் இந்து சமயத்தில் இறைமையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. செய்யும் செயலில் வெற்றி காண வேண்டுமானால் எல்லாம் வல்ல இறைவனுடைய அருள் தேவைப்படுகிறது. இந்தக் கண்கள் இறைமையைக் காணும்போது மிகுந்த நம்பிக்கையையும் ஓடியாடி செய்வதற்குரிய வல்லமையையும் பெறுகின்றன.

'கடவுள்' என்றால் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன். மனித அறிவுக்கு அப்பாற்பட்டவன் என்பது போன்ற பொருள்கள் சான்றோர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றன. அத்தகைய உருவமற்ற பெரும் சக்திக்கு உருவத்தை அளித்து அதைக் கண்ணாரக்கண்டு வழிபடத் தொடங்கினான்.

பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையில் 'பன்னிரு கரங்களையுடைய' முருகப் பெருமானின் தோற்றம் நக்கீரரால் விளக்கப்பட்டுள்ளது. அந்தப் பன்னிரு கரங்களும் உலக மக்களுக்கு உணர்ச்சியோடு கண்டு தொழுவதற்குரிய காட்சியாக அமைந்துள்ளது. அந்த உருவத்தைக் காணும் போதெல்லாம் மனிதன் கண்களைப் பெற்றதன் பேற்றை எண்ணி மகிழ்வான். திருஞானசம்பந்தர் பௌத்தரும் சைவரும் துறவறத்தின் பெருமையையே பேசி இல்லறத்தைப் பழித்து வந்த காலத்தில் இறைமையினுடைய சிறப்பினை விளக்குவதாக ஒரு பாடலைப் பாடுகின்றார்.

**''கண்ணில் நல்லதுறும் கழுமலை வளநகர்ப்**
**பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே''** [2]

என்ற பாடல் சைவ சமய பக்தர்களின் திருமணக் கோலங்களை விளக்கப் பாடப்படுகின்றது. இறைவன் ஒரு பெண்ணை இடப்பக்கத்திலே வைத்துக் கொண்டிருக்கிறார் என்ற அழகை விளக்கிக் காட்டி இந்தப் புவியில் சிறந்த வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம் என்ற ஆர்வத்தையும் ஊட்டி எந்தவகையான குறைபாடுகளும் இல்லாமல் நல்ல முறையில் வாழலாம் என்ற நம்பிக்கையை மேற்கண்ட பாடல் ஊட்டுகிறது. காமக்கழிவுகளை காணாமல் ஒளி பொருந்திய இறைவனின் காட்சி சிறப்பையே காண வேண்டும் என்னும் கருத்தை திருஞானசம்பந்தர் பாடல் விளக்குகிறது.

சம்சாரம், சாகரம், துக்கம் என்னும் வேத மொழிகளின் வழியமைந்த மனித வாழ்க்கை இருண்ட வீடுபோல் ஒளியற்று வீழ்ந்து விடுகிறது. அந்த வீட்டில் கண்களால் கண்டு, கரத்தினால் செய்து, வழியினை அமைத்துக் கொள்ள வேண்டிய கடமை மக்களைச் சார்ந்திருக்கிறது. ஆழ்வார்கள் திருமாலை காணாத கண்கள் என்ன கண்களோ? என்று பாடுவது நோக்குதற்குரியது. வாழ்வின் போக்கில் கண்களுக்குப் புலப்படாத குற்றங்கள் பல உண்டு. கோபம் வள்ளுவர் கூறியது போல் கயமை என்பது போன்ற குறைபாடுகள் கண்களில்பட்டு வாழ்வையே சிதைத்து விடுகின்றன. அவற்றிலிருந்து விடுபட வேண்டுமென்றால் மிகுந்த பொறுமையுடனும் அறிந்த அறிவுடனும் தெளிந்த கருத்துடனும் உழைக்க வேண்டும்.

**''காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி''** [3]

என்ற திருநாவுக்கரசரின் கூற்றுப்படி இறைவனை வழிபாடு செய்ய முயன்று பார்க்க வேண்டும். ஆண்டாள் 'மானிடர்க்கு பேச்சுப்படின் வாழகில்லேன்' என்று துணிந்து உரைப்பதைப் பார்க்கலாம். இறைவனையே மணந்து, இறைவனுடைய அழகையே கண்டு காதல் கொண்டு வாழும் வாழ்க்கையினுடைய போக்கை சமய நூல்கள் விளக்குவதை இதன்கண் காணலாம்.

உலகியலுக்கு அப்பாற்பட்டு பக்தி உணர்ச்சியில் மூழ்கி இறைவனையே கணவனாக அடைய வேண்டும் என்ற கொள்கையை ஆண்டாள் பின்பற்றியதைக் காணலாம். இது பக்தித் துறையில் திசைமாறிய ஒரு காட்சியாகும். சுந்தரர் வரலாற்றில் மணமேடையில் வந்து ஓலைகாட்டி ஆட்கொண்டத் தன்மை 'தடுத்தாட்கொண்ட புராணம்' என்று சமயக் குரவர்களால் வழங்கப்படுகிறது. அது சைவ சமயக் கொள்கை. இது வைணவ

சமயக் கொள்கை. இரண்டு சமயங்களும் இருவேறு காட்சிப் பொருளை அடிப்படையாக வைத்துக் கொண்டு வாழ்வியல் போக்கை நிறுவுவதைக் காணலாம். ஆண்டாள் ஆன்மீகத் துறையில் மூழ்கி உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் இறைவனுடைய திருவடிகளிலே இட்டு வணங்குவதைக் காணலாம். இது சமயத் துறையின் சமயக் குறவர்கள் வாழ்வில் புதியதொரு கட்டத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அதேபோல் சமயத்தைச் சார்ந்த சுந்தரர் வாழ்க்கை பக்தி வாழ்விற்கே ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளது.

பக்தர்கள் இறைவனை நோக்கி தானே இயங்கி வழிபாட்டு முறையை வகுப்பது ஒன்று. இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு பக்தி இயக்கத்தில் ஈடுபடுவது மற்றொன்று. இங்கு இறைவன் சுந்தரர் வாழ்வில் குறுக்கிட்டு விழிகளில் பக்தியைத் தேக்கி ஆட்கொள்வது சிறப்புடையதாக விளங்குகிறது.

அதேபோல் கண்ணப்ப நாயனார் புராணத்தில் சைவ சமயம் ஒரு பக்தனுடைய கண்கள் எப்படி இறைவனுடைய அருளுக்கு பாத்திரமாகிறது என்பதை விளக்கிக் காட்டுவதாக உள்ளது. கண்ணப்ப நாயனார் நாள்தோறும் சிவலிங்கத்தை வழிபாடு செய்பவர். மிருகங்களை வேட்டையாடி பச்சை இறைச்சியை இறைவனுக்கு உண்ணக் கொடுத்து வணங்கி வரலானார். இதைக் கண்ட சிவகோச ஆச்சாரியார் என்பவர் இறைச்சியை இந்த வேடன் இறைவனுக்கு அளிக்கிறானே 'இது என்ன வாழ்க்கை, இது என்ன பக்தி, இது என்ன துன்பம்''என்று இறைவனிடம் முறையிட்டார். அதற்கு இறைவன் கண்ணப்ப நாயனார் தூய அன்பினை என்பால் செலுத்துபவர். 'இன்று மாலை ஒருமரத்துக்குப் பின்னால் ஒளிந்திருந்து அவன் செய்வதைப் பார்' என்று விடையளித்தார். அது போலவே சிவகோச ஆச்சாரியார் ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்திருந்து கண்ணப்பர் எப்படி வழிபாடு செய்கிறார் என்று அறிய முற்பட்டார். இங்கு பக்தி பற்றி ஒன்றும் தெரியாத வேடர் குலத்தில் பிறந்த கண்ணப்பர் வழிபாடு முறையினை மாற்றியமைத்த போக்கைக் காணலாம். அவர் வழிபாடு செய்துக் கொண்டிருந்த போது சிவனுடைய கண்களிலிருந்து ரத்தம் கொட்டியது. தன்னுடைய ஒரு கண்ணைத் தோண்டி சிவனுடைய லிங்கத்தில் வைத்தார். அதற்குள் இன்னொரு கண்ணிலிருந்தும் குருதி புறப்பட்டது. அதைக் கண்ட கண்ணப்ப நாயனார் அஞ்சி தன்னுடைய இரண்டாவது கண்ணையும் தோண்டுவதற்கு முயன்றார். அச்சமயத்தில் இறைவன் விழித்து கண்ணப்பரே

உம்முடைய பக்திக்கு யாம் அஞ்சினோம். நீண்டகாலம் நீங்கள் வாழ்வீராக என்று வாழ்த்தி மறைந்தார். இக்காட்சியைக் கண்ட சிவகோச ஆச்சாரியார் தாமும் சேர்ந்து கண்ணப்ப நாயனாரை வாழ்த்தி நீங்கினார். இந்தப் பெரிய புராணக் காட்சி இறைவன் கண்களில் வாழுகின்றான். முக்கியமாக ஐந்து புலன்களில் முதன்மையாக உள்ள கண் ஒரு சிவனடியாரை சோதிக்கப் பயன்பட்ட முறையினை என்னவென்று கூறுவது.

சமய வாழ்வில் சிவனுக்கு - சைவ சமய இறைவனுக்கு 'முக்கண்ணன்' என்ற ஒரு பெயர் அமைந்திருப்பதைக் காணலாம். வலக்கண் சிவனுடைய ஆண்மையைக் குறிக்கும். இடக்கண் உமையாளுடைய கண்ணைக் குறிக்கும். ஆகையால் அர்த்தநாரீஸ்வரர் என்ற பெயர் அவருக்கு அமைந்தது. ஆனால் சிவனுக்கு 'நெற்றிக்கண்' என்ற ஒன்றும் சுட்டிக்காட்டப்படுகிறது. சமய வாழ்வில் நெற்றிக்கண்ணைப் பெற்ற ஒரே தெய்வமாக சிவனார்தான் குறிப்பிடப்படுகின்றார். இது சைவ சமய எழுச்சிக்கு ஒரு ஆதரவாகும்.

நக்கீரர், சிவன் எழுதித் தந்த கவிதையில் குறையுள்ளது என்று வாதாடுகின்றார். அப்போது வெகுண்டு எழும் சிவனார் நெற்றிக் கண்ணைத் திறந்து காட்டி அச்சமுறுத்துகின்றார். ஆயினும் நக்கீரர் நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்று வாதித்ததாக ஒரு புராணக் கதை உண்டு.

சிவனார் தவம் இயற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது மன்மதன் காமக்கணைகளை வீசி அவருடைய தவத்தைக் கலைக்க முயன்றான். கோபம் கொண்ட சிவனார் தம்முடைய நெற்றிக்கண்ணைத் திறந்து அவனை எரித்ததாக புராணக் கதை கூறுகிறது. ஆகையால் இறைவனுடைய நெற்றிக்கண் - மூன்றாவது கண் அறமற்ற செயலில் ஈடுபடுவோரை - இறைவனை இழிவுபடுத்துவோரை - சுட்டெரிக்க பயன்படுத்திய போக்கு இந்த நாட்டில் அறம் வாழ்ந்து வளர்ந்த தன்மையை அறிவதற்குப் பயன்படுத்துவதாக உள்ளது.

தற்காலத்தில் கண் என்னும் உறுப்பு சான்றோர்களாலும், கவிஞர்களாலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**''ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா''** [4]

என்று சுதந்திர இயக்கப் போக்கில் ஈடுபட்ட இளைஞர் சமுதாயத்தை அறைகூவி அழைக்கின்ற தன்மையை பாரதியிடம்

காணலாம். பாரதமாதா தேவியின் மேல் பக்தி பொங்கி எழ சுதந்திர தாகத்தை வளர்ப்பதற்காக பாரதி பயன்படுத்துகின்ற ஒரு சிறந்த உறுப்பாக கண் விளங்குகிறது.

ஆகையால் கண் என்னும் உறுப்பு சமய வாழ்வில் பக்தியை பறைசாற்ற பயன்படுத்தப்பட்ட ஒரு கருவியாக விளங்குவதை அறியலாம்.

## 2. செவிகள்

ஐம்புலன்களில் இரண்டாவதாக உள்ளது செவிகள் ஆகும். வள்ளுவர் செவியினைப் பற்றிக் கூறும்பொழுது

''செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை''[5]

என்று கூறுகின்றார். இக்கருத்தால் கண்ணைப் போலவே செவியும் மிகவும் இன்றியமையாத ஒரு உறுப்பு என்பதை அறியலாம். சமய காலத்தில் அதாவது ''ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் சமயக் குறவர்கள் தோன்றி இறைவனைப் பற்றிய கருத்துக்களை பரப்பினார்கள். சைவம், வைணவம் என்னும் இரண்டு சமயங்களும் எப்போது பார்த்தாலும் தத்தம் சமயக் கருத்துக்களை இழித்துப் பேசுவதை செவிகளில் அறிந்து அனல்வாதம், புனல்வாதம் செய்தார்கள். சைவ சமயத்தைச் சார்ந்த குரவர்கள் தங்களுடைய சமயமே உயர்ந்தது என்று ஓலையில் எழுதி நெருப்பில் இடுவார்கள். இதைச் செவி வழியாகக் கேள்வியுற்று வைணவர்கள் தம்முடைய சமயமே சிறந்தது என்று ஓலையில் எழுதுவார்கள். நெருப்பில் இடுவார்கள். இந்த இரண்டு சமயங்களுடைய உயர்வு அனல்வாதத்தால் நிறுவப்பட்டது. எப்படியெனின் எரிந்து கொண்டிருக்கின்ற தழல் எந்த ஒரு ஓலையை சுட்டெரிக்காமல் விடுகிறதோ அந்தச் சமயமே சிறந்தது என்ற முறை அமைக்கப்பட்டது. இந்தக் கருத்துக்கள் சமய வாழ்வில் செவிவழியாக சென்ற கருத்துக்களாலேயே நிறுவப்பட்டன. புனல்வாதம் என்ற ஒன்றும் நடைபெற்றது. தத்தம் சமயக் கருத்துக்களை ஓலைகளில் எழுதி ஆற்றில் விடுவார்கள். அப்போது அந்த ஆற்றை எதிர்த்து எந்தச் சமயத்தின் ஓலை செல்லுகிறதோ அதுவே உயர்ந்த சமயம் என்று நிறுவப்பட்டது. ஆகையால் இந்த சமயச் சழக்கர்கள் செவி வழியாக கேள்வியுற்று போராட்டத்தில் ஈடுபட்ட பாங்கு தென்படுகிறது.

ஆழ்வார்கள் பாடும் போது

**'இறைவனுடைய புகழை கேட்காத செவியென்ன செவியோ'** [6]

என்று பாடுகிறார்கள். அதே போல் பழங்காலத்தில் தமிழகத்தில் மன்னர்களும் தலைமை இடத்தில் இருந்த வள்ளல்களும் விடியற்காலை நேரத்தில் தூக்கம் கலைந்து எழுவதற்கு முன்னால் அவருடைய காதில் இனிமையான பாடல் கேட்பது நல்லது என்று எண்ணி ஒரு பழக்கத்தை ஏற்படுத்தியிருந்தார்கள். அதற்கு 'திருப்பள்ளியெழுச்சி'[7] என்று பெயர். இசையிலே வல்லமை பெற்ற பாணர்கள் அதிகாலை நேரத்தில் மன்னர்கள் வீற்றிருக்கும் இடங்களுக்குச் சென்று அவர்கள் தூக்கத்திலிருந்து எழும்பொருட்டு இனிமையான இசையைக் கருவிகளின் துணைக் கொண்டு வாசிப்பார்கள். அக்காலக்கட்டங்களில் நாட்டுப்புறப் பாடல்களும் இந்த வழக்கத்திற்குச் சான்றாக உள்ளன. சங்க காலத்தில் அத்தகைய பாடல் அமைக்கும் மரபுக்கு 'துயிலெடை நிலை' என்ற பெயரை புலவர்கள் அளித்திருப்பது தெரிகின்றது.

சைவ சமயக் குறவர்களில் மாணிக்க வாசகரும், ஆழ்வார் வரலாற்றில் தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் திருப்பள்ளியெழுச்சி பாடியிருக்கின்றார்கள். அவை இன்றும் கோயில்களில் காலை நேரத்தில் 'பூபாள ராகம்' ஒன்றை அமைத்து பாடிக் கொண்டு வரப்படுகின்றது. மாணிக்க வாசகர் சிவனை உறக்கத்திலிருந்து எழுப்புவதாகவும், தொண்டரடிப்பொடி ஆழ்வார் மகாவிஷ்ணுவை எழுப்புவதாகவும் பாடியுள்ளனர். இந்த நூற்றாண்டு துவக்கத்தில் புதுமை படைத்த பாரதியார் அனைவரையும் விழித்தெழச் செய்ய 'பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி' பாடியிருப்பது நோக்குதற்குரியது.

முதலில் தொண்டரடிப்பொடி ஆழ்வார் பாடியுள்ளதைக் காணலாம்.

**''எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த**
**இருங்களிற் நீட்டமும் பிடியொரு முரசும்**
**அதிர்கலில் அலைகடல் போற்றுள தெங்கும்**
**அரகத்தம் மாபள்ளி எழுந்தருளாயே''** [8]

என்று பாடியிருப்பதை அறியலாம். அடுத்து சிவபெருமானை துயில் எழுப்புவதாக மாணிக்கவாசகர் பாடியுள்ளதைக் காணலாம்.

**''போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே**
**புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்(டு)**
**ஏற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்**
**எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்''** [9]

என்று விளக்கிப் பாடியிருப்பதை அறியலாம். அடுத்து சுப்பிரமணிய பாரதியார் பாரதமாதா திருப்பள்ளியெழுச்சியில்

**''தொழுதுனை வாழ்த்தி வணங்குதற் கிங்குன்**
**தொண்டர்பல்லாயிரர் சூழ்ந்துநிற் கின்றோம்**
**விழிதுயில் கின்றனை இன்னும்எம் தாயே**
**வியப்பிது காண்பள்ளி எழுந்தருளாயே''** [10]

என்று பாடியுள்ளார். இந்த மூன்று பக்தி நெறியாளர்களும் ஒருமுகச் சிந்தனையாக செவியினை முன்வைத்து திருப்பள்ளியெழுச்சி எழுதியிருப்பதைக் காணலாம்.

இவ்வாறு ஐம்புலன்களில் கண்ணுக்கு அடுத்தபடியாக உள்ள செவி சமயக் கருத்தோட்டங்களை அறிந்தும், அறிந்ததை பறைசாற்றியும் மக்களை விழிப்படையச் செய்ய பயன்படுத்தப்பட்ட போக்கும் நோக்குதற்குரியதாகும்.

### 3. மூக்கு

ஐம்புலன்களில் அடுத்ததாக இருப்பது மூக்கு ஆகும். மூக்கு மணத்தை முகர்வதற்காகவும் சமயங்களின் போக்கினை நுகர்ந்து அறிவதற்காகவும் பயன்படுத்தப்படுகின்றது. மணங்களிலே பல வகை உண்டு. அவை இழிவான மணம், தெய்வீக மணம் என்பது போன்ற நிலையில் விளக்கப்படுகின்றன. மணம் என்ற சொல்லுக்கு 'திருமணம்' என்ற ஒரு சொல்லும் உண்டு. 'திரு' என்ற சொல்லுக்கு 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை' என்று உரையாசிரியர்களில் ஒருவரான பேராசிரியர் உரை எழுதுகிறார். 'மணம்' என்ற சொல்லுக்கு ஆணும் பெண்ணும் இணைந்து இல்லறம் நடத்துகின்ற போக்கினை விளக்குவதற்காக சான்றோர்கள் பயன்படுத்துகின்றனர். இது பக்தித் துறையில் எண்ணும்போது இறைவனுடைய படைப்பில் மணம் நடைபெறுகின்றது.

சமய வாழ்வில் திருமணம் என்றால் எல்லோராலும் விரும்பப்படுகின்ற 'பக்திமணம்' என்ற பொருளைக் கருதலாம். ஆண்டாள் பாடும்போது,

''கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ'' [11]

என்று மணத்தினை முன்வைத்து இறைவனைப் பாடும் நிலையை உணரலாம். மாதவனுடைய வாயின் சுவையும், நாற்றமும் நீ அறிவாய், நான் விருப்பமாய் கேட்கிறேன் சொல். மாதவனுடைய வாய் கற்பூர மணம் கமழுமோ, தாமரைப் பூவின் மணம் கமழுமோ என்று கூறுகின்றாள்.

இறைவன் வாழுகின்ற புண்ணியத்தலங்களுக்குச் செல்லும்போது ஆங்கே இறைவனுக்குப் படைக்கப்படுகின்ற 'பிரசாதம்' முதலியவை நல்ல மணம் மிக்கவாக அமைகின்றன. அவற்றை நாவால் மட்டும் சுவைக்காமல் நுகர்தலிலேயும் கூட இன்பமளிக்கக் கூடியதாக விளங்குகிறது. ஆகையால் மூக்கு ஐம்புலன்களின் திறமையை அழகாய் எடுத்துக் காட்டுகிறது.

தவம் இயற்றுகின்ற முனிவர்கள் தவத்திற்குரியதாக மூச்சுக் காற்றினை விளக்குகிறார்கள். இயற்கையாக ஐம்புலன்களில் இதுவும் ஒன்றாக இருப்பதால் நன்மை தீமைகளை ஆராய உதவுகிறது. தவயோகிகள் 'பிராணாயாமம்' என ஒன்றினைப் பின்பற்றுவது கண்கூடாக உள்ளது. இதன் பொருள் மூச்சுக் காற்றினை மேலும் கீழும் குறிப்பிட்ட கணித சம்பிரதாயங்களோடு செய்வது எதுவோ அதுவே 'தியானம்' அல்லது 'தவம்' ஆகும். இந்தக் காற்று மூக்கின் வழியாகச் சென்று குரல்வளையில் இறங்கி உணவுக் குழல் வழியாகச் சென்று உந்தியில் நிலைத்து பயனை அளிக்கக் கூடியதாக விளங்குகிறது என்று முனிவர்கள் கூறுவார்கள்.

இத்தகைய தவம் இயற்றும்போது இயல்பாக உடலில் தோன்றுகின்ற பல்வேறு வகையான குற்றங்கள் குறைகள் ஆகியவை நீக்கப்படுகின்றன. இதனை வள்ளுவர் தவம் [12] என்னும் அதிகாரத்தில் சிறப்பாக விளக்குகிறார்.

## 4. நாக்கு

மிக விரிவாக விளக்கப் போனால் நாக்கின் ஆற்றல் சிறப்புடையதாக விளங்குகிறது. சமயக் குரவர்கள் இந்த நாக்கினை இறைவனுடைய திருநாளத்தை அடையாமற் போனால் நாவே அதற்குக் காரணம் என்று கூறுகின்றார்கள். அதற்குக் காரணம் 'நா' ருசியைக் காட்டும். ருசி உடல் 'தசையைக்' காட்டும். அப்போது வெளிப்படையாகத் தோன்றி விளங்குகின்ற காமமானது நாவின் வழியாக இறங்கி உடலுறுப்புகளைச் சார்வதாய்ச் சான்றோர்கள்

கூறுவார்கள். அதே போல் வள்ளுவர் நாவினை மிக வன்மையாக ஒரு சொல்திறனுக்கு சுட்டிக் காட்டுகின்றார்.

''யாகாவராயினும் நாகாக்க'' [13] என்று ஓரிடத்தில் சுட்டுகிறார். இதன் பொருள் வாழ்க்கைப் பாதையில் நடந்து செல்லும்போது எத்தனையோ வகையான அனுபவங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. இன்னும் சில சான்றோர்கள் நாவினை எல்லா அவயவங்களிலும் சிறப்புடையதாகக் கருதுகிறார்கள். இராமாயணக் காவியத்தில் சொல்லுக்கு எடுத்துக்காட்டாய் சில சான்றுகள் உள்ளன. கிஷ்கிந்தா காண்டத்தில் அனுமன் ஒரு மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டு வழி நெடுக பார்த்துக் கொண்டே இருந்தான். அப்போது தூரத்தில் இராம, இலஷ்மணர், சீதை ஆகியோர் நடந்து வருவதைக் கண்டான். அவர்களை வணங்கி ஆசி பெற வேண்டும் என்ற எண்ணத்தில் மராமரத்தின் வாயிலாய் இறங்கி கீழே வருகிறான். தன்னை அவர்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளும்போது 'வாயு பகவானுடைய மகன் நான்' என்று மிகச் சாதுர்யமாகப் பொறுமையுடனும், அடக்கத்துடனும் திருவடிகளைத் தொட்டு வணங்கி அறிமுகப்படுத்திக் கொள்ளுகிறான். இராமர் அவனுடைய சொல் நயத்தையும் சொல்லை ஆளும் தன்மையையும் எண்ணிப் பார்த்து வியக்கிறார். அப்போது 'யார் சொல் இச்சொல்லின் செல்வன்' என்ற அடைமொழியோடு அனுமனை வாழ்த்துகிறார். இந்தக் குறிப்பிட்ட இடத்தில் சொல்லின் சிறப்பை அனுமன் வழியில் நின்று ஆட்கொள்ள விரும்புகின்ற இராமருடைய புகழ் தென்படுகிறது.

வைணவ சமயத்தில் ஆண்டாளின் திருப்பாவை ஒரு சிறந்த படைப்பாக உள்ளது. ''ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி'' என்னும் வரியில் நாவினுடைய உயர்வும், பயனும் காட்டப்படுகிறது. இந்த நிலையில் பக்தி மோகம் வெளிப்படையாக ஆகும் போது உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகள் சமயக் குரவர்கள் பாடுவது போல் ''நெக்கு நெக்கு உருகி உருகி'' என்று அடைமொழியிட்டு வாழ்த்துகிறார்கள்.

அடுத்துப் புறநானூற்றைச் சிறந்த நூலாக உற்றுக் காணுகின்ற பெருந்தேவனார் சிவனை 'அருந்தவத்தோன்' என்று பாடுகின்றார். தொடர்ந்து கூறும்போது

**''கறைமிடறணியலு மணிந்தன் றக்கறை**
**மறைநவி லந்தணர் நுவலவும் படுமே''** [14]

அக்கறுப்புத்தான் மாவாயும் வானோரை உய்யங் கொண்டமையின் வேதத்தைப் பயிலும் அந்தணரால் புகழவும்படும் என்ற பொருளில் இது அமைந்துள்ளது.

அடுத்ததாக சொல்வன்மை என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் சொல்லின் உயர்வினைக் கூறுகிறார்.

**''சொல்லுக சொல்லை பிரிதோர்சொல் அச்சொல்லை**
**வெல்லும் இன்மையை அரிது''** [15]

இந்த உலகத்தின்கண் வாழும் மக்கள் மிகுந்த சொல்லாற்றல் மிக்கவர்களாயிருந்தால் அவர்களுடைய சொல்லை தோல்வி அடையும்படி விடாது கொள்கின்ற தன்மையினைக் குறிக்கின்றது. இவ்வாறு 'நா' என்பது பல்வேறு வகைகளில் சமய இலக்கியத்திலும் நீதி இயக்கத்திலும் உயர்வாக அமைக்கப்பட்டுள்ளது.

## 5. தோல்

சமய இலக்கியங்களில் 'தோல்' என்னும் சொல் உயர்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. உடலின்கண் தோன்றுகின்ற தோலில் பல்லாயிரக்கணக்கான சின்னஞ்சிறு துவாரங்கள் இருக்கின்றன என்று அறிவியலாளர்கள் கண்டுள்ளனர். உடலில் எப்பகுதியில் அடித்தாலும் உடலைப் போர்த்தியிருக்கின்ற இத்தோல் வாட்டமிழந்து அழிந்து போகிறது.

திருமணம் நடைபெறுகின்ற காலங்களில் தோலினை ஸ்பரிச உணர்ச்சிக்கு பயன்படுத்துகின்றார்கள். ஆயினும் காமத்தை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகத்தான் இந்தத் தோல் பயன்படுத்தப்படுகிறது. இறைவனின் படைப்பில் மேற்கூறியவாறு தோலானது உயர்வான இடத்தைப் பெற்று திகழ்கிறது. தோலாடைகள் பல முனிவர்களின் உடலில் பயன்படும் கருவியாக அமைக்கப்பட்டுள்ளது. மான் தோலில் அமர்ந்து தவம் இயற்றும்போது மண்ணின் ஈரம், மண்ணில் தென்படும் குற்றங்கள், மண்ணில் பாயும் அசுத்தங்கள் ஆகியவை தவிர்க்கப்படுகின்றது.

காட்டில் வாழுகின்ற வேட்டைக்காரர்கள் புலித்தோலைக் கொண்டு வந்து நன்றாக சுத்தப்படுத்தி சீவி, அழகுமிக்க தோலாக மாற்றி வெம்மை உடலில் ஏறும்படியாக காலையும் மாலையும் அதன்மேல் அமர்ந்து வழிபடுவதைக் காணலாம்.

சமய இலக்கியத்தில் 'நசை' என்ற ஒரு சொல் உண்டு. இயற்கையாகக் காமவேட்கை மிகுந்த காமுகர்கள் அதை நல்ல முறையில் திட்டம் போட்டு செயல்படுகிறார்கள். மணிமேகலை காவியத்தில் காமுகன் ஒருவன் மணிமேகலையைத் தொட வருகிறான். அவனுக்கு உடல்நசை மிக அதிகம் போலும். ஆனால், மணிமேகலையோ 'உருமறை மந்திரம்' ஒன்றைப் பயன்படுத்தி பெண்ணுருவத்தை மாற்றி ஆண் உருவத்தைத் தாங்கி நிற்கிறாள். அவனால் அவளைத் தொட முடியாமலேயே போய்விட்டது.

உடலில் தோன்றுகின்ற ஐந்தாவது உறுப்பான நசையால் காமம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அப்போது அந்தக் காமவெள்ளத்தை அடக்க இயலாதபோது எந்த வகையான சிறப்பும் இல்லாமல் அமைந்து விடுகிறது. அதே போல் இறைவன் வழிபாட்டில் இன்றியமையாத ஒரு ஆசனமாக இந்தத் தோல் விளங்குகிறது. புலி, சிங்கம், கரடி, மான் ஆகியவற்றின் தோலில் முனிவர்கள் அமர்ந்து தவம் இயற்றி இறைவனை அடைந்துள்ளமை கண்கூடாக உள்ளது.

''பொன்னார் மேனியனே
புலித்தோலை அரைக்கச் செய்து''

என்று சைவசமயக் குரவர்கள் சிவனைப் பாடுகிறார்கள். மேலும் ஆழ்வார்கள் பாடும்போது

''பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா அமரரேறே ஆய்இழை
கொழுந்தே வாழி''

என்று திருமாலினுடைய மேனியழகை ஆழ்வார்கள் சித்தரித்துள்ளமை தென்படுகிறது.

எத்தனையோ சமயக் குரவர்கள் தோன்றி தோலைப் பற்றிக் கூறி காமம் பற்றி பறைசாற்றி உண்மையை அறிந்து உலகை நீத்துச் சென்றிருக்கிறார்கள். எல்லாவற்றிலும் மனிதனுடைய தோல் எளிதில் உணர்ச்சியினைப் பெறவும் வெளிப்படுத்த வல்லனவாகும். எனவே உணர்ச்சிகளை ஒடுக்கி இறைமை அடைவதற்குரிய உணர்வுகளைப் பெருக்கி வாழ்தல் பக்திக்கு வித்தாக அமையும் என்ற பாங்கு இதன்மூலம் அறியப்படும் செய்தியாகும்.

இதுவரை கண்ட ஐம்புலன்களின் சீரும் சிறப்பும் உயர்வான எண்ணமும் இங்கு காணுதற்குரியது. மாணிக்கவாசகர் பாடும்போது ''ஐம்புலன் ஆற்றங்கரை மரம்'' என்று விளக்குகிறார். கரையோர மரங்கள் வெள்ளத்தில் எப்படி அடித்துக் கொண்டு ஓடுகிறதோ அது போல காமம் என்னும் உணர்ச்சியில் இவையெல்லாம் பெரிதும் இடர்பாட்டினை அளிக்கும் என்று மாணிக்கவாசகர் கூறுகின்றார்.

ஆகையால் இறைவனிடத்தில் - மெய்ப்பொருளை அடைய வேண்டுமாயின் ஐம்புலன் அடக்கம் மிகவும் இன்றியமையாதது என்பதை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | திருவள்ளுவர் | திருக்குறள், நீத்தார் பெருமை, ப.24 |
| 2. | திருஞானசம்பந்தர் | தேவாரம், பா. |
| 3. | திருநாவுக்கரசர் | தேவாரம், பா. |
| 4. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப.92 |
| 5. | திருவள்ளுவர் | திருக்குறள், கேள்வி, ப.34 |
| 6. | ஆழ்வார் | |
| 7. | வரதராசன், மு., | தமிழ் இலக்கிய வரலாறு பல்வகைப் பாடல்கள், ப.137 |
| 8. | தொண்டரடிப் பொடிஆழ்வார் | |
| 9. | மாணிக்கவாசகர் | திருவாசகம் |
| 10. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப.20 |
| 11. | ஆண்டாள் | திருப்பாவை |
| 12. | திருவள்ளுவர் | திருக்குறள், தவம், ப.186 |
| 13. | மேலது | ப.187 |
| 14. | பெருந்தேவனார் | புறநானூறு, கடவுள் வாழ்த்து, ப.1 |
| 15. | திருவள்ளுவர் | திருக்குறள், சொல்வன்மை, ப.235 |

## இயல் - 4

# இன்ப நுகர்ச்சி

மனிதனுடைய வாழ்க்கை இருபெரும் முனைகளினால் அமைந்துள்ளமையைக் காணலாம். ஒரு புறம் அறம், பொருள், இன்பம் எனச் சொல்லத்தக்க முறையில் அமைந்துள்ளது. மற்றொருபுறம் இறைவழிபாட்டில் மூழ்கி பேருண்மையை அறிந்து பேரின்பத்தில் திளைத்தல். ஆகையால், இல்வாழ்க்கை அளிக்கின்ற துன்பங்களும், துயரங்களும் மனிதனுடைய பிறவிகள்தோறும் தொடர்ந்து வருவதைக் காணலாம்.

இயற்கையாக மனித நிலையில் பிறவிகளை ஆய்ந்து சுருக்கமாக இருவரிகளில் வள்ளுவர் தருகிறார்.

> **''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
> **இறைவனடி சேரா தவர்''** [1]

இந்தக் குறிப்பிட்ட இடத்தில் உயிர்களுக்கு அழிவு நேர்ந்த போதிலும் அழியாத ஆத்மாவின் நிலையில் அமைந்துள்ளமை எண்ணி போற்றுதற்குரியது.

**''பெரும பிறவிப் பௌவம்''** [2] என்று மாணிக்கவாசகர் கூறியிருப்பது நோக்குதற்குரியது. இவ்வுண்மை 'நீத்தார் பெருமை' என்று வள்ளுவரால் குறிக்கப்படுகிறது. பெருவெள்ளத்தில் நீந்தி உள்ளம் குளிர அருந்தி கரையேறி உய்வதனையே நீந்துதல் என்பர். அந்நீந்துதல் புணைபற்றி நீந்துதலும் தம் கையால் நீந்துதலும் என இருவகைப்படும். எனவே, நீத்தல் விண்ணப்பம் திருவடியால் ஆளுவதாகும். 'நீத்தல்' என்றால் 'விடுதல்' என்று பொருள். வாழ்க்கையின் இருவேறு புறங்களைத் தெளிவடையாத நிழலோட்டங்களை - மறைந்துபோகும் அழிவுகளை - எடுத்துக்காட்டி உண்மையை அறிய முற்படவேண்டும் என்ற கருத்தில் இங்கு இது நிறுவப்பட்டுள்ளது. சுப்பிரமணிய பாரதியாரும்

> **''நல்லதோர் வீணை செய்தே - அதை**
> **நலங்கெட புழுதியில் எறிவதுண்டோ?''** [3]

என்று பாடுகிறார்; இந்த இடத்தில் வீணை என்னும் சொல் 'பிறவி' என்ற பொருளில் கொண்டதால் தவறேதும் இல்லை அல்லவா? தொடர்ந்து பாடும் பாரதி

**"வல்லமை தாராயோ இந்த**
**மாநிலம் பயனுற வாழ்வதற்கே"** [4]

என்ற வரிகளில் 'சக்தி'யின் முழுத்தோற்றம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. வாழ்வெனும் அலைகள், மணல் என்னும் உடலில் வந்து மோதும்போது, கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறதல்லவா? வாழ்க்கை கயிற்றை அறுத்தெறிந்து 'சிட்டுக் குருவி' போல விடுதலை அடைந்து, நீண்டு கிடக்கும் வானத்தின் எல்லாப் பக்கங்களிலும் சுழன்று வீசுவதை மனிதன் உணர்ந்தே ஆகவேண்டும்.

**1. செல்வம் :**

வாழ்வின் போக்குகளில் 'செல்வம்' இன்றியமையாத இடத்தை அடைந்துள்ளது. செல்வம் திரட்ட முயன்ற மனிதன் அதன் பயனையும் அறிய முற்பட்டான். அதன் இன்றியமையாமை -யை உணர்ந்தான். ஆகையால் அவனுடைய 'எதிர்' உணர்வு - செல்வம் அளவில் - மிகுந்து காணப்பட்டது. எங்கு 'எதிர்வு' இருக்கிறதோ - எங்கு எதிர்வின் ஆற்றல் மிக்கு விளங்குகிறதோ - அங்கே - அந்த இடத்தில் - ஓசை ஏற்படுகிறது. அதனால்தான் மனிதனின் திறமை உயர்ந்தோங்கி வானளவு நின்று அமைவதைக் காணலாம். வள்ளுவர் செல்வம் பற்றிக் கூறும்போது;

**"செல்வத்துப் பயனே ஈதல்"** [5]

என்று கூறியிருப்பதை அறியலாம். செல்வம் சேர்ப்பது தவறில்லை. குடும்பம் வாழ - சிற்றூர் வாழ - நாடு வாழ - உலகம் முழுவதும் வாழ - ஒவ்வொரு படியின் முன்னேற்றத்தில் செல்வம் துணை நிற்பதோடு அன்றி பயனையும் பெற்று விளங்குகிறது.

இன்னொரு குறளில் 'செல்வம் சேர்வது என்பது ஒவ்வொருவராகத் திரைப்படக் கொட்டகையில் மனிதர்கள் ஒன்றாகக் கூடுவது போலாகும். அதேபோல், செல்வம் சென்று கழிவது எல்லோரும் குபீரென்று, கொட்டகையில் இருந்து வெளியே வருவது போலாகும். இந்த இரண்டு குறட்பாக்களில் பக்திநெறி வழிநிற்க மனிதன் முயல்வதைப் பார்க்கலாம். இடைக்கால பக்தி இலக்கியத்தில் செல்வத்தால் ஓங்கி வளர்ந்திருந்த 'பக்தி நிலை' தெற்றென விளங்குவதைக் காணலாம்.

'செல்' என்னும் சொல்லின் அடிப்படையில் 'செல்வம்' என்ற புதுச்சொல் வளர்ந்திருக்கக் காணலாம். எடுத்துக்காட்டாகச் செல்லுமிடமெல்லாம் ஆற்றுநீர் ஓடுவது போல, செல்வக் களியாட்டங்களிலே சிக்கி அழிந்து படுவோர் பலராக இருப்பது கண்கூடாகத் தென்படுகிறது.

பட்டினத்தார் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோது அவரது துணைவியார் ஒரு சிறு பெட்டியை அவர்முன் கொண்டுவந்து வைத்து இதனைத் தாங்கள் வந்ததும் அளித்துவிட்டு வரும்படி நம் புதல்வன் தந்துபோயினன்''[6] என்று கூற, அதற்கேற்ப பட்டினத்தார் அப்பெட்டியைத் திறந்தவுடன் அதனுள் 'காதற்ற ஊசியும் வாராது காண்கடைவழிக்கே' என்று எழுதப்பட்டுள்ள வாசகத்தைக் கண்டு ஞானம் பெற்றுத் துறவு பூண்டார் என்ற அவருடைய மாற்றத்திற்குக் காரணம் கூறவேண்டுமல்லவா ?

செல்வம் பொங்க நீள் வாழ்க்கையை அமைத்துக் கொடுத்ததால், அவனை ஆதரித்து அரும் இடர் நீக்கப் பெற்றாராயினர். பட்டினத்தார் பல ஆண்டுகளாக வாழ்வைப்பற்றி எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். கடைக் கண்ணில் பொருள்களின் உருவைக் கண்டு அப்படிச் சொல்ல சொல்ல - ஓர் அழகான சிவனின் தோற்றம் நெஞ்சில் பதியும். அதுவே உண்மை உணர்ந்த தன்மைக்குச் சான்றாகும்.

## 2. பெண்ணும் மண்ணும்

பக்தி இலக்கியத்தில் 'பெண்' என்னும் சொல் இருவகை விளக்கமுடன் அமைந்திருப்பதைக் காணலாம். முதலில் பெண் என்னும் சொல்லின் அடிப்படையில் 'சக்தியைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம். சைவ சமயக் குரவர்களைப் பற்றிக் கூறும்போது திருஞானசம்பந்தர் குழந்தமை தன்மையில் இருந்தபோது, அன்னை உருவில் வந்து பாலூட்டி வளர்த்தாள் என்ற கருத்து காணப்படுகிறது.

மாணிக்கவாசகரும் கூட 'பால் அளிக்கும் அன்னையைப் பற்றிக் கூறுவதைக் காணலாம்.

''பால்நினைந்து ஊட்டும் தாயினும் சால
பரிந்துநீ பாவியேனுடைய''[7]

என்று பாடி இருப்பதைக் காணலாம். 'ஞானப்பால்' என்று சைவசமய நாயன்மார்கள் கூறுகிறார்கள்.

சக்தியை வழிபாடு செய்யும்போது மகாகவி பாரதியாரும்கூட தற்காலக் கருத்துக்களுக்கு ஏற்ப பாடல் புனைந்திருப்பதை அறியலாம்.

**'வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொருள்**
**ஆக விளங்கிடுவாய்**
**தெள்ளு கலைத்தமிழ் வாணி உனக்கொரு**
**விண்ணப்பம் செய்திடு வேன்**
**எள்ளத் தனைப் பொழுதும் இராது**
**என்றன் நாவினிலே**
**வெள்ள மெனப்பொழி வாய்ச் சக்தி**
**ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்''** [8]

என்று தற்கால பக்தி வழிக்கு வழிகாட்டுகிறார் பாரதி. நாவில் புகுந்து உணர்ச்சிமயமாக ஆகி பெருக்கெடுத்து ஓடும் வெள்ளம்போல் கவிதை நாவில் வழியவேண்டும் என்று வேண்டுகிறார் அவர்.

முன்னோர்கள் சக்தியை வழிபாட்டுக் கடவுளாக மதித்து வாழ்ந்தார்கள். ஆவதும் பெண்ணாலே - அழிவதும் பெண்ணாலே என்ற பழமொழி நோக்குதற்குரியது. சிந்தித்துப் பார்க்கும்போது சக்திக்குக் கனிவான உணர்ச்சியில் பெரும் பங்கு உண்டு என்று தெளியலாம். புராண காலத்தில் பெண்மை - சக்தி எவ்வளவு சிறப்பினைப் பெற்றுத் திகழ்ந்தது என்பதை அறிய ஒரு கதை அமைக்கப்பட்டுள்ளது. அதனைக் காணலாமா?

### 3. புணர்ச்சி

ஒரு முறை 'பத்மாசுரன்' என்னும் அசுரன் ஒருவன் கங்கைக் கரையில் அமர்ந்து சிவனை நோக்கித் தியானம் செய்து கொண்டிருந்தான். ஆண்டுகள் பல உருண்டோடின. இனியும் இந்த அசுரனைக் காக்க வைக்கக் கூடாது என்று எண்ணிய சிவன், கங்கைக் கரையில் வந்து காட்சி அளித்தான். 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்று மெல்லக் கேட்டான். 'நான் கேட்கும் வரத்தைக் கொடுப்பீர்களா ?' என்று அச்சத்துடன் கேட்டான் பத்மாசுரன். 'நான் யாருடைய தலையில் கரம் வைத்துக் தொடுகிறேனோ, அவர்கள் எல்லாம், தீயில் சிக்கித் தடுமாறி அழிய வேண்டும்' அருள் கூர்ந்து இந்த வரத்தைத் தந்தருள வேண்டுகிறேன்.' என்று குழைந்து குழைந்து பேசத் தொடங்கினான்.

சிவனுக்கு இது மிக வேடிக்கையானதாக - விசித்திரமானதாக - விளையாட்டுத்தனமாகத் தோன்றியது. ஆயினும் அசுரனின்

தவத்தை மெச்சி 'உனக்கு வரமளித்தேன்' என்று கூறினான். அவன் ஓர அசுரனல்லவா ? ஏனோ அவனுக்கு சிவனின்மேல் ஐயம் ஏற்பட்டுவிட்டது. அவன் 'சிவனே! மிக்க நன்றி. இந்த வரத்தின் திண்மையை இப்போதே - இங்கேயே - அளந்து பார்க்க விரும்புகிறேன். அருள்கூர்ந்து தங்களுடைய தலையைக் காட்டுங்கள்' என்று வேண்டினான். உயிர் தப்பித்தால் போதுமென்று சிவன் ஓட்டமாய் ஓடத் தொடங்கினான். அந்தப் பத்மாசுரனும் சிவனை விடுவதாக இல்லை. ஓடிக்கொண்டிருந்த சிவன் முன், மகாவிஷ்ணு தோன்றினார். என்ன இது என்று விஷ்ணு கேட்டபோது, பத்மாசுரனுக்கு வரம் அளித்ததைப் பற்றியும், தன் கரத்தை அவன் சிவனின் தலையில் வைத்துச் சோதித்துப் பார்க்க எண்ணிக் கொண்டதையும் கூறி, எப்படியாவது அவன் கரத்தினின்றும் காக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

மகாவிஷ்ணு சிவனுடைய வேண்டுகோளை ஏற்று அவரைப்போகச் செய்து - அழகிய மோகினி உருவை ஏற்று - வழியில் நின்று கொண்டிருந்தார். பத்மாசுரன் அங்கு வந்தபோது அவனுள் காம உணர்வினை ஏற்படுத்திய மோகினியைக் கண்டான். மிகுந்த ஆவல் கொண்டு அவளைத் தழுவ நினைத்தான். அப்போது அவனுக்கு இன்னும் காம உணர்வினை ஊட்டுவதற்காக நாட்டியம் ஆடலானான். பத்மாசுரன் மிகுந்த காமம் உடல் எல்லாம் பூரிக்க அவனைக் கண்டு இன்பம் அனுபவிக்க நினைத்தான். அப்போது விஷ்ணு அவனுடைய தலையில் இருக்கும் அழுக்கைத் துடைத்துக் கொண்டு புதிய தோற்றத்தோடு வரும்படிக் கூறுகிறார். அவனுக்கு மோகம் மிகவும் அதிகமாக ஏறிவிட்டதால், தலையில் கரம் வைத்தால் 'அழிவு' என்பதையே மறந்துவிட்டான். 'கங்கை நதியின் ஓரம் சென்று தலையில் புண்ணிய நீரால் கழுவிக் கொண்டு வா' என்று காமவயப்பட்ட அசுரனிடம் கூறுகிறார் விஷ்ணு. அவனும் வரத்தைப் பெற்ற நிகழ்ச்சியை விட்டுவிட்டு, மோகினியைச் சுவைக்க காலம் பார்த்திருந்தான். ஆகையால் ஓட்டமாகச் சென்று கங்கை நதியை அடைந்து படிகளில் இறங்கி நின்றான். அவனுக்கு மண்ணும் மறந்துபோயிற்று ; விண்ணும் மறந்து போயிற்று. மோகினியை அடைந்து சுகம் பெறுவதிலேயே கவனமாக இருந்ததால் வரம்பற்றி மறந்துபோனான். கங்கை படித்துறையில் இறங்கி, நீரைக் கரத்தில் அள்ளித் தன்னுடைய தலையில் தெளித்துக் கொண்டான். அப்போது கரம் தலைமீது படிந்தது. அடுத்த கணம் அங்கே பெரு நெருப்பும், நெருப்பினால் தழலும்,

தழலினால் ஒளியும் தோன்றி மறைந்தது. சிவன் வரமளிக்க, விஷ்ணு காத்து அருளிய பாங்கு இங்கு நோக்குதற்குரியது.

இந்தப் புராணக் கதையில் பெண்மை மயக்கத்தை அளிக்கக் கூடிய ஒன்று என்ற உண்மை வெளிப்பட்டு நிற்கிறது. காமத்தால் எண்ணங்களில் அழுக்கேறி அதே ஆணவத்தால் அழிவுள்ள பத்மாசுரனுடைய கதை எச்சரிக்கையாக இருக்கக் காணலாம். பெண்மையின் நளினம் ஒரு பக்கம்; பெண்மையால் அழிவு ஒரு பக்கம் - பெண்மையின் அழகு ஒரு பக்கம்; பெண்மையால் ஏக்கம் ஒரு பக்கம்.

பாரதியார் 'ஓம் சக்தி' என்று பெண்மையைத் தெய்வீக உருவம் அளித்து வழிபடுவதைக் காணலாம்.

''மாகாளி கடைக்கண் வைத்தாள்
ஆகாவென்று எழுந்தது பார் யுகப் புரட்சி'' [9]

இதில் காணப்படும் கருத்து தற்கால 'உணர்வியல்' (emotion) கருத்துக்கு ஏற்புடையதாக அமைந்திருப்பது கண்கூடு. எங்கோ பல ஆயிரம் கிலோமீட்டர் தூரத்தில் நடைபெற்ற 'அக்டோபர் புரட்சி' (Russia) ஒரு புதிய தத்துவத்தையே உலகிற்கு அளித்திருப்பதைக் காணலாம். சக்தி 'அன்னை' காளிதேவியின் அருள் பழமையானதுதான். ஆனாலும் பாரதியார் புதுமை விரும்பியாக இருந்ததால் புரட்சிக்குத் தெய்வீக வடிவம் அளித்துக்களிக்கின்றார்.

ஆனால் பட்டினத்தார், பெண்மையின் இழிவைச் சுட்டிக்காட்டுகிறார். பட்டினத்தடிகள் இல்வாழ்க்கையில் இருந்தவர்தான். ஆயினும் இறைவன்பாற் பக்தி மிகுந்து வாழ்வது பெற்று அன்பு செலுத்துவாராயினர். பட்டினத்தார் பாடும்போது

''வாய்நாறும் ஊழல், மயிர்ச்சிக்கு நாறிடும், மையிடுங்கண்
பீநாறும், அங்கம் பிணவெடி நாறும், பெருங்குழிவாய்ச்
சீநாறும், யோனி அழனாறும், இந்திரியச் சேறுசிந்திப்
பாய்நாறு, மங்கையர்க் கோவிங்ஙனே மணம் பற்றியதே'' [10]

செயற்கையான அழகு அழிந்துபடும் என்றும், அங்கங்கள் எல்லாம் திறமையற்ற - வலிமையற்ற போக்கில் போகுமென்றும், இந்திரியங்கள் மண்ணில் சிந்தும் என்றும் பெண்ணைக் கூடினால் காமத்தில் சிக்கிக் கடைசி படிகளில் போய் நிற்க வேண்டிய நிலை ஏற்படும் என்பதைத் தெளிவாக விளக்கிக் காட்டுகிறார்.

இங்கு பட்டினத்தார் 'பெண்மை'யின் அழகு அழிந்துபடும் என்று பாடினாலும், மற்றொரு இடத்தில் அது விலைமாதர்-

களினால் ஏற்படும் கூட்டத்தை - நினைவில் வைத்துப் பாடப்பட்டது என்பதை உணரவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. பிற்காலத்தில் பெண்மையின் அழகோவியத்தைச் சிறப்பாக வருணித்திருக்கும் போக்கும் உள்ளது.

'மனோன்மணீயம்' நாடகத்தில் மனோண்மணி தலைவி, அவளுடைய தோழி வாணி. இந்த இருவரும் தங்களுடைய வாழ்வின் திசைமாறிய தன்மையைச் சொல்லாடலில் விளக்கிக் காட்டுகிறார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை.

**'பிறை நுதல்'**
**'காதள ஓடிய கண்ணாய்'**
**'மெல்லிய இடை'**
**'வள்ளை இலைபோல் செவி'**

என்றெல்லாம் கேசாதிபாத வருணனையாக வாணியைப் புகழ்வது காணப்படுகிறது.

ஆனால் பட்டினத்தார், அழியும் அழகைச் சுட்டிக்காட்டி 'நெஞ்சமே' எல்லாம் அழிவில் முடியும் என்று கூறி எச்சரிக்கை விடுவதுபோல் சாயல் தென்படுகிறது.

''பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மயலாகிப்புன் மாதருக்குப்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் தேடிஅப் பாவையர்க்கீந்(து)
இறந்திட‌வோபணித் தாயிறைவா! கச்சி ஏகம்பனே!'' [11]

இந்த உலகத்தின்கண் பிறப்பெடுத்து, பிணியால் பாதிக்கப்பட்டு பேரின்பத்தை மறந்து, சிற்றின்பத்தில் மூழ்கி புன்மாதருக்கு எல்லாப் பணிவிடைகளும் செய்து இறந்துபோக வேண்டுமா ? என்று கசிந்து உருகிறார்.

ஆழ்வார்கள் - வைணவர்களின் - குருமார்கள், நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தை அளித்தார்கள். அவர்கள் பன்னிருவர் என்று நூல்கள் கூறும். அவர்களுள் திருமழிசை ஆழ்வார் சிற்றின்பம் அநுபவிக்கும் மக்களைப் பார்த்து வருந்தி கூறுவது போல் ஒரு பாடலைப் பாடியுள்ளார். உயிர்கள் உலகத்தில் தோன்றி மறைவதை அனைவரும் கண்டு அறிந்துள்ளனர். ஆகையால் சில்லறை இன்பங்களில் தோய்ந்து வாழ்வின் நெறிகளை உடைத்துக் - கண்களில் நீர் தேங்கி - மாதரார் பலருடன் கூடி வாழ்வை நீக்கி வளமளிக்கும் வாழ்வு அமைய வேண்டியதன் இன்றியமையாததனை உணர்த்தும் பாங்கு இதில் உள்ளது.

''சூதனாய்க் கள்வ னாகித்
தூர்த்தரோ (டு) இசைந்த காலம்
மாதரார் கயற்கண் என்னும்
வலையில்பட் டழுந்து வோனைப்
போதரே என்று சொல்லிப்
புந்தியிற் புகுந்த தன்பால்
ஆதரம் பெருக வைத்த
அழகனூ ரங்க மன்றே'' [12]

இந்தக் கருத்தை வேறொரு பாடலிலும் அமைத்துக் கூறியுள்ளமை எண்ணுதற்குரியதாகக் காணப்படுகிறது.

''மெய்யெல்லாம் போக விட்டு
விரிகுழ லாரில் பட்டு
பொய்யெலாம் பொதிந்து கொண்ட
போட்கனேன் வந்து நின்றேன்'' [13]

பெண் சேர்க்கையால் எத்தனையோ புலவர்களும் - அரசர்களும் - வாழ்வியல் திசை தெரியாமல் வாடி வதங்கி அழிந்துபடுகிறார்கள். செயல்களிலே தடுமாற்றம் கொண்டு சரிந்து விழுவது உலகியல் போக்கில் சாதாரணமாகத் தென்படும் ஒரு நிகழ்ச்சியாகும்.

பொய்யான வாழ்வின் இரு தோற்றங்களும் இங்கு சமயக் குரவர்களால் விளக்கப்பட்டுள்ளமைக் காணலாம். ஒருபுறம் செம்மை, மறுபுறம் வளமை, இது வாழ்வின் நியதியாகும். பெண்மையினை வாழ்த்தி சிறந்த 'சக்தி' உருவைக் கண்டு வாழும் நீண்ட வாழ்வுக்குப் பெண்ணின் ஆதரவு தேவைப்படுவதைக் காணலாம். ஆகையால் தான் சமயக் குரவர்களில் சிலர் பெண் சேர்க்கையை வெறுத்தாலும் அச்சக்தியின் பெருமிதத்தை சீர்மையுடன் சித்தரித்துக் காட்டுகிறார்கள் என்பதுதான் இங்கே உண்மை. அதை மனதில் கொண்டுதான். '''பெண்மை வாழ்க வென்று கூத்திடுவோமடா'' [14] என்று தற்காலத்தில் - இருபதாம் நூற்றாண்டில் பாரதியார் போன்ற புலவர்கள் பெண்மையில் இறைமையைக் கண்டு பாடிய போக்குத் தெற்றென விளங்குகிறது.

## 4. கோபம்:

கோபம் என்பது ஒரு பண்பாகும். குணம் உள்ள இடத்தில் கோபம் இருக்கும் என்னும் வழக்காறு தொன்றுதொட்டு மக்கள் வாழ்வில் பயின்று வருவதைக் காணலாம். சமய வாழ்வில் இக்கருத்துச் செறிவாக அமைந்திருப்பதுதான் வியப்பிற்குரியதாக அமைந்துள்ளது. 'கண்களில் நெருப்புப் பொறி பறக்க' என

சாதாரண போக்கு ஒன்று வாழ்வின் எல்லா திக்குகளிலும் பரவி இருப்பது தெரிகிறது. உணர்வில் ஏற்படும் இந்த 'முறுக்கேறிய' காட்சி பக்தி இலக்கியத்தில் தெற்றென காணப்படுவதை அறியலாம்.

சமயக் குரவர்களில் ஒருவரான திருமூலர் மனித வாழ்வின் 'அழியும் போக்கை எண்ணிப் பார்த்திருக்கிறார். அப்போது உடலின் 'தற்காலிக' தன்மையை உணர்ந்து பாடியிருப்பதைக் காணலாம். அவருடைய நோக்கு முற்றும் துறந்த - என்றும் சிறந்த - ஒரு நோக்காக உள்ளது. அவர் இந்த மனிதனின் நிலைநிற்கா போக்கினை அறிந்து கூறி இருக்கும் தன்மை ஆழ்மையாய் - அளவோடு இருப்பதை அறியலாம். இந்த உலகத்தில் வாழ்நாள் மிகக் குறைவாய் உள்ளது' என்றும், அந்த வழியில் சென்றால் 'பிரிந்து' செல்லும் உடலின் தன்மையை உணரலாம் என்றும், 'மூக்கினில் கைவைத்தால் மூச்சு நின்றுவிடும்' தன்மையைப் பெரிய சான்றுகளுடன் தெரிந்து கொள்ளலாம்' என்றும் திருமூலர் கூறுகின்றார்.

> **''சீழ்க்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற**
> **ஆக்கைப் பிரிந்தது அலகு பழுத்தது**
> **மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்**
> **காக்கைக்குப் பலிகாட்டிய வாறே''** [15]

இந்தப் பாடலில் திருமூலரின் கோபம் நன்கு வெளிப்பட்டு நிற்பதைக் காணலாம். எல்லாம் முடிந்து சங்கு ஊதி சுடுகாட்டிற்குப் போகும்போது, உடல் - உயிர் - ஆன்மாவின் தன்மையை இம்மனிதன் உணர்ந்த பாடு இல்லையே என்று கூறும் திருமூலர் 'காக்கைக்குப் பலிகாட்டிய... என்ற சொற்சித்திரம் ஒன்றை உருவாக்கிக்காட்டி அமைத்துள்ள தன்மை 'பக்குவப்பட்ட நெஞ்சின் போக்கை' வெளிப்படுத்தி விளக்கமுறச் செய்கிறது.

மாணிக்கவாசகர் மனிதனுடைய நெஞ்சைப்பற்றிப் பாடும்போது

**'மதியிலி மடநெஞ்சே'** [16]

**'மூட நெஞ்சே'** [17]

என்றெல்லாம் இடித்துக் கூறுகின்றார். மனிதன் கோபப்படும்போது தன்வயம் இழக்கிறான். 'கோபம் சண்டாளம்' என்று அறிந்திருந்த போதும் அந்த எரிக்கும் கோபத்தின் மீதே சார்ந்து நிற்கிறான். 'இறைவனுடைய எல்லாப் பகுதியினையும் அறிய முடியாமல் போகும்போது, மனிதனுக்குக் கோபம்

வருகிறது. இது இயற்கை அல்லவா ? 'அறிதல்' என்பது அறியாமையினின்றும் விடுபடுதல் ஆகும் என்ற கூற்றின் தன்மையில் இறைவனை அடைதல் மிகச் சிறந்த கூறுபாடே ஆகும். மாணிக்கவாசகரின் கோபம் இங்கு வெளிப்பட்டு நிற்பதைக் காணலாம். அதேபோல் வீழ்ந்து மறையும் இந்த யாக்கையை நிலையாக வைத்திருக்கக் கூடுமா? என்ற கேள்வி எழும்போது 'முடியாது' என்ற பதில் தான் விடையாக விளங்குகிறது.

இந்தப் போக்கில் பாம்பாட்டிச் சித்தர் ஒருவரின் பாடல் கருத்தாழத்துடனும், வேறு கோணத்தில் தன்மையிலும் சிறந்துள்ளதைக் காணலாம்.

'சீயும் மலமும் செறிசெந் நீரும் நிணமும்
சேர்ந்திடு துர்நாற்ற முடைக்குடம் ஈதுடைந்தால்
நாயும் நரியும் பெரிய பேயும் கழுகும்
நமதென்றே தின்றிடும்என் றாடு பாம்பே' [18]

வெறும் சீழும், மலமும், குருதியும், நிணமுமாக மாறி, நாறும் உடலின் தன்மையையும் அறிந்தால் பிணமான உடலினை நாயும், நரியும், பேயும், கழுகும் உணவாக உண்டு வாழும் நிலை கழிவிரக்கத்தைத் தோற்றுவிப்பதாக இருந்தாலும், சமயக் குரவர்களின் நியாயமான கோபத்தின் விரிவும் நேர்மையான ஆத்திரத்தின் விளைவும் - வெளிப்பட்டு நிற்குமாறு உள்ளது. இந்த ஞானம், கோபம் என்னும் கோபுரத்தின் உச்சியில் நின்று 'தெளிவு' என்னும் தங்கக் கலசங்களின் ஒளிர்வு - ஆகிய இந்த இரண்டின் போக்கில் அமையுமாறு காணலாம்.

## 5. குழப்பம்

வாழ்வின் நிலைகளில் குழப்பங்கள் ஏற்படுவது இயற்கையாக உள்ளது. ஒரு சுனையில் நீர் தேங்கியிருக்கும்போது சிறுகல்லை எடுத்து வீசியெறிந்தால் அங்கே சேறும் சகதியுமாக இருக்கின்ற குழம்பிய நீர் தெரிக்கின்றது. குட்டையைக் கலக்கினால் பெரிய மீன்கள் வெளியே வருமென்றும் அப்பொழுது அவற்றைப் பிடித்துக் கொள்ளலாம் என்றும் சான்றோர் கூறுவர்.

இந்த உலகில் மனித வாழ்வு இறைவனால் ஆக்கப்பட்டதாகும். அந்தப் புனிதமான தொழிலைச் செய்ய - துணிகரமான செயலைச் செய்ய - எத்தனைக் கோடி ஆண்டுகள் இறைவனுக்குப் பிடித்ததோ ! எல்லா நிலைகளிலும், ஏற்ற மிக்க எழிலான - நிலைகளிலும் இறைமைத் தத்துவத்தைப் பரப்ப முயன்ற நிகழ்ச்சி போற்றுதற்குரியதாக உள்ளது.

வாழ்க்கையின் எல்லா பக்கங்களிலேயும் குழப்பங்களும், வழக்குகளும் இடைக்கால இலக்கியத்தில் மிகுந்து காணப்படுகின்றன. இறைவன் பூரணமான பண்புள்ளவன்.

**'பரிபூரண ஆனந்தமாமே'**

என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுகின்றார். குழப்பங்கள் நேர்ந்த போது பூரணமான நிலையில் இறைவனைக் காண்பது சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது. ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருமூலர், தாயுமானவர், காரைக்கால் அம்மையார் போன்றோர் இடைக் காலத்தில் தோன்றி பக்தி வாழ்க்கைப் பாதையில் மனிதனுக்கு ஏற்படும் குழப்பங்களை விளக்க முயன்றிருக்கின்றார்கள்.

சமய இலக்கியங்கள் பல்வேறு வகையான பழக்க வழக்கங்களையும் தெய்வீகப் பண்புகளையும் வளர்த் திருக்கின்றன. எங்கோ ஏதோ சில சமயப் போராட்டங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தபோதும் சமயக் குரவர்கள் தங்கள் தங்கள் சமயத்தை நிறுவுவதில் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள்.

**'அழுதால் உன்னைப் பெறலாமே'** [19]

என்று மாணிக்கவாசகர் கூறுகின்றார். திருநாவுக்கரசரோ

**'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'** [20]

என்று பாடுகின்றார். இந்தக் கருத்துக்கள் இடைக்கால இலக்கியத்தில் மிகக் குழப்பங்களைத் தீர்க்கவல்ல கொந்தளிப்பை ஏற்படுத்துவதாக இருந்தது.

சில சமயக் குரவர்கள் 'ஏக இறைவனை வழிபட்ட போது வேறுசிலர் பல வகையான தெய்வ வழிபாட்டு முறையை மக்களுக்குக் காட்டியிருக்கின்றார்கள். இந்தக் குழப்பங்கள் எல்லாம் மிகுதியாக வளர்ந்தபோதும் கடைசியில் 'தெய்வம் பல வடிவம்' என்றும், 'உண்மையே கடவுள்' என்றும் கூறுகின்ற பாங்கு இலக்கிய வரலாற்றில் தென்படுகிறது.

ஐரோப்பியர் காலத்துக்குப் பிறகு சமயச் சடங்குகள் பல அழிந்துபோகத் தொடங்கின. நாகரிகம், பண்பாடு பழக்க வழக்கங்கள் ஆகியவை தோன்றி வளரத் தொடங்கின. ''கண்மூடி பழக்கமெல்லாம் மண்மூடி போக'' என்று இராமலிங்க அடிகள் பாடுகின்றார். தொடர்ந்து பாடும்போது,

**''பொங்கு பல சமயம் எனும் நதிகளெல்லாம்**
**புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும்**
**கந்துகரைக் காணாத கடலே''** - என்று பாடுகிறார்.

இத்தகைய சலசலப்புமிக்க சூழ்நிலைகள் தமிழகத்தில் தோன்றியபோதும் கூட சமயக் குரவர்களின் தாக்கம் அமைதியையும், சமாதானத்தையும் தோற்றுவித்திருப்பது கண்கூடான காட்சியாகும். சமயப் பொறுமையை இவர்கள் வற்புறுத்தினார்கள். மக்களின் பக்தி வழிபாட்டிற்கு இந்தக் குரவர்கள் சாதி, சமய வேறுபாடுகளை நீக்கி அனைவரும் இறைவனுடைய ஆசியைப் பெறவேண்டும் என்று கூறியபோக்கு இடைக்கால பக்தி இலக்கியத்தில் தெளிவாக உள்ளதை உணரலாம்.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | திருவள்ளுவர் | திருக்குறள், கடவுள் வாழ்த்து, பா.10, பக். 14-15 |
| 2. | மாணிக்க வாசகர் | திருவாசகம், நீத்தல் விண்ணப்பம், ப. |
| 3. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப.173 |
| 4. | மேலது | ப. 173 |
| 5. | திருவள்ளுவர் | திருக்குறள், செல்வம் நிலையாமை, ப.249 |
| 6. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல், மூலமும் உரையும், ப.21 |
| 7. | மாணிக்கவாசகர் | திருவாகம், பா.11:10 |
| 8. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப.179 |
| 9. | மேலது | ப. |
| 10. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள் 30, ப. 203 |
| 11. | மேலது | ப.124 |
| 12. | திருமழிசை ஆழ்வார் | திருமாலை, 36 |
| 13. | மேலது | திருமாலை, 33 |
| 14. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப. 357 |
| 15. | திருமூலர் | திருமந்திரம், ப. 147 |
| 16. | மாணிக்கவாசகர் | திருவாசகம், நீத்தல் விண்ணப்பம் |
| 17. | மேலது | |
| 18. | பாம்பாட்டிச் சித்தர் பாடல் | |
| 19. | மாணிக்கவாசகர் | திருவாசகம் |
| 20. | திருநாவுக்கரசர் | தேவாரம், ஐந்தாம் திருமுறை |

# இயல் - 5

# மன உளைச்சல்

சுற்றுச் சுவர்களுக்குள் முடங்கிக் கிடந்த பக்தி, இடைக்காலத்தில் சுவர்களை இடித்துக்கொண்டு வெளியே வந்து ஆரவாரத்தையும் - மன உளைச்சலையும் ஏற்படுத்தத் தொடங்கியது. சங்ககால வழிபாட்டு முறைகள் சரிந்துபோய் உளைச்சலுக்கு ஏற்ற மருந்தாக பக்தி இலக்கியம் வளரத் தொடங்கியது. சங்கம் மருவிய காலத்தில் காவியக் கதையோடு இரண்டறக் கூடி வளர்ந்த சமயம், இடைக்கால இலக்கியத்தில் முழுமையான ஒரு தோற்றத்தைத் தாங்கி - பக்தியின் முழக்கம்போல் - எல்லா இடங்களிலும் வேகமாகப் பரவத் தொடங்கியப் போக்கை காண முடிகிறது. 'மும்மைசால் உலகுக்கெல்லாம் மூல மந்திரமாகத் திகழ்பவன்' என்று இறைமை தத்துவம் இராமாயணத்தில் கம்பரால் வரையப்பட்டுள்ளதை அறியலாம். 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி' என்று ஆழ்வார்கள் பாடி இருப்பது, இறைவனின் ஓங்கிய தோற்றத்தைக் காட்டுவதாக உள்ளது.

சங்க கால இலக்கியத்தில், சமயத்திற்கு என்று தனியான ஓர் இடம் அளிக்கப்படாமல், மன்னர் செயல் முறைக்கு - மன்னர் அரசாட்சி முறைக்கு - மன்னருடைய வீரத்திற்கு உருவத்தைக் கொடுத்து அரசனின் நிழலாகக் காட்டப்பட்டுள்ளது. உயரமான மலைச்சாரல் பகுதிகளில் - தண்மை மிகுந்த காட்டுச் சூழல்களில் - வறண்ட பாலைவனப் பகுதிகளின் ஓரம் - வயற் வரப்புகளின் வழவழப்பான சதுப்பு நில அமைப்புகளில் - மணல் சூழ்ந்த கடற்கரைப் பகுதிகளில் - வாழ்ந்திருந்த தமிழர்கள், அங்கங்கே தொட்டும் தொடாமலும்-காட்டியும் காட்டாமலும், வாழ்ந்த வாழ்வு தென்படுகிறது. ஆனால் அதற்கு அடுத்த நிலையில் காவியங்கள் தோன்றும் காலகட்டத்தில் சிற்சில புள்ளிகள் போல் சமயத்தின் சாயல் அமைந்துள்ளதைக் காணலாம். ஆனால் இடைக்காலத்தில் - சமய காலத்தில் முழுமை அடைந்த

வட்டம்போல் சமயத்திற்கு என்றே.ஒரு அமைப்பு தோன்றிய தன்மை அமைந்துள்ளது.

சிவனை வழிபட்டவர்கள் 'சைவம்' என்ற சமயத்தைத் தோற்றுவித்து வளர்க்கத் தொடங்கினார்கள். திருமாலை வழிபட்டவர்கள் வைணவம் என்னும் சமயத்தைத் தொடங்கி வளர்க்க ஆரம்பித்தார்கள். இவை இரண்டும் மன உளைச்சல்களில் சிக்கி ஓயாமல் வாதங்களையும்-சச்சரவு-களையும் போராட்டங்-களையும் செய்ய தலைப்பட்டது. 'பட்டி மன்றங்கள் அமைத்துத் தங்கள் தங்கள் சமயங்களின் உயர்வையும், தங்கள் தங்கள் சமய வளர்ச்சிக்கு ஏற்புடையதாக அமைத்துக் கொண்ட பல உருவான கடவுளர்களையும் ஆக்கிக்கொண்டு 'நாவலோ நாவல்' என்று அரண்மனை ஓரங்களில் - விரிந்த சாலையோரங்களில் - தேர் ஓடும் வீதிகளில் - சமயப் பூசல்களில் இறங்கி இருந்த தன்மை காணப்படுகிறது.

எல்லா சமயங்களும் உள்ளத்தில் இருந்து பொங்கிவரும் ஆசை - பாசம் - அன்பு என்னும் மூன்று பண்புகளை வற்புறுத்துகின்ற நிலை சமய இலக்கியங்களில் இருக்கிறது.

**'ஆசையே துன்பத்துக்குக் காரணம்'**

**என்று புத்தபிரானும்,**

**'ஆசை அறுமின்கள்'**

என்று திருமூலரும் ஆசையை ஒரு குற்றமாக்கி உலகத்திற்கு அந்தப் பண்பால் என்ன தீமைகள் வளர்ந்து வருகிறது என்பதைச் சுட்டிக்காட்டிக் கூறிய தன்மை 'உள்ளங்கை நெல்லிக்கனி' போல தெளிவாக உள்ளது. உள்மனதில் புறவாழ்வு பற்றிய கருத்தோட்டங்கள் எப்பொழுதெல்லாம் எழுகிறதோ, அப்போதெல்லாம் மனதின் ஆழத்தில் ஒரு குரல் வேகமாக - சத்தமாக ஓசையிட்டுக்கொண்டு வெளிப்பட்டு நிற்கும். புறத்தின் அதிர்வு, புறத்தின் முதிர்வு, புதுவழிகாட்டக் கூடியதாக அமைந்துள்ளது. இத்தகைய மன உளைச்சல் ஒரு முழுமையான இறைவனைக் காணத் துணை நிற்கிறது. 'முழுமையான வட்டம் போன்றது இறைமை' என்னும் கருத்து இங்கு அழகாய் உருண்டோடி நிற்பதைக் காணலாம்.

## 1. தொல்லை

எங்கு உணர்ச்சிகளில் பேதைமை ஏற்படுகிறதோ - எங்கு அறிவினில் தீ மோதுகிறதோ - அங்குத் தொல்லைகள் ஏற்படுகிறது. ஒரு குழந்தைக்குத் தொல்லை உறக்கமின்மை.

குழந்தையும் தெய்வமும் ஒன்றேயாகும் என்பது சான்றோர் வாக்கு. குழந்தையினுடைய சிரிப்பு உறவினர் இடத்தில் மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கும். நண்பர்களிடத்தில் நல்ல வாக்கினை வாங்கி அளிக்கும். 'கன்னங்கரிய களா பழத்தின் கண்ணிரண்டும்' என்று பாவேந்தர் பாரதிதாசன் குழந்தைமையின் கருவட்டம் போன்றுள்ள கண்களை உவமையாகப் பாடியுள்ளமையைக் காணலாம்.

ஆகையால் வளர்ச்சி நோக்கிச் செல்லும் குழந்தைக்கு எத்தனையோ இடர்பாடுகள் தோன்றக் கூடும் - எத்தனையோ அச்சுறுத்தல்கள் இடையில் தடைபோடக் கூடும் - எத்தனையோ ஏமாற்றங்கள் வழியில் உண்டாகக்கூடும். ஆயினும் இறைமையை வழிபட்டு - முதிர்ந்த ஞானியரோடு பழகி அமைந்து ஒரு சீர்மையைப் பெறவேண்டும்.

காலையில் விழிப்பதில் இருந்து, இரவில் படுக்கப்போகும் வரையில் எத்தனை வகையான பக்தி கண்ணோட்டங்கள்? எத்தனை வகையான இறையருள் தத்துவங்கள் ? எத்தனை வகையான உடலுறவு தொல்லைகள்? அத்தனையும் கடந்து முன்னோக்கிப் போக வேண்டாமா? அறிவுடைமையோடு வாழ்வினைப் படம்பிடித்துக் காட்ட வேண்டாமா? அழியும் இந்த உடல் - காயும் இந்த உடல் - சாம்பலாகும் இந்த உடல் தொல்லை கொடுக்கக் கூடிய ஒன்று என்பதைச் சுட்டிக்காட்டிய வாழ்வின் வழுக்கல் பாதையில் கால் வைத்துச் சறுக்கி விழாமல் காம இழிவுகளில் இருந்து விடுதலைப் பெற்று ஓங்கி நிற்க வேண்டாமா?

பெண்ணில் காணப்படும் 'காம' உணர்வினைச் சுவைக்க ஆண் விரும்புகிறான். ஆனால் 'நிலையாமை' யை முற்றிலும் அறிந்த துறவி 'காம - மோகக்' கிறுக்கல்களில் இருந்து பிரிந்து நீண்ட தூரம் செல்ல விழைகிறான். இதனைத் தொல்லை மிகுந்த காமத்தைப் பற்றி சிறப்பாகப் பாடி இருக்கும் தன்மை பட்டினத்தார் பாடலில் காணப்படுவதை அறியலாம்.

**''சூதுற்ற கொங்கையும் மானார் கலவியும், சூழ்பொருளும்**
**போதுற்ற பூசலுக்கு என் செயலாம்? செய்த புண்ணியத்தால்**
**தீதற்ற மன்னவன் சிந்தையினின்று தெளிவதற்கோ ?**
**காதற்ற ஊசியைத் தந்துவிட்டான் என்றன் கைதனிலே''** [1]

காமச் சூதினை விளையாட வரும் காமக் கிழத்தியரின் பூசல்களும், சூழ்ந்துள்ள பொன், நிலம், பசு, மாளிகை முதலிய

பொருட்களும், உடலை விடுத்துச் செல்லுகின்ற - காலத்தில் உண்டாகின்ற இந்திரியங்களின் சண்டையை விலக்குவதற்கு என்ன செய்யக்கூடும்? முன்னர் செய்த புண்ணியங்கள் கொடுஞ் செயலற்ற எமதிறைவன் உள்ளினின்று தெளியத்தானோ ? காதில்லாத ஊசியை என்னுடைய கையில் கொடுத்துவிட்டான்.

காமக் களியாட்டங்களை நீக்கி - கடவுள் அருள்பெற்று சீர்மை மிக்க வாழ்வின் நோக்குகளில் வந்துசேரும் பிசிறு (குற்றங்கள்)களை நீக்கி - வழிந்தோடும் நிலையான ஆறு போன்ற வாழ்வைப் பெற்று நிமிர்ந்து வாழ வேண்டும் என்பதைத்தான் பட்டினத்தார் அழகாகக் கூறியுள்ளார். நதியோரங்களில் முதலைகள் இருக்கும் இடத்தை அறியாமல் களிறுகள் இறங்கி நீர் குடிக்க முயலும். அப்போது முதலைகள் அவற்றின் கால்களைப் பற்றி இழுக்கும். அத்தகைய கொடுமையான 'காமமுதலை' களிடம் இருந்து வெகு எச்சரிக்கையாக உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று சான்றோர் கூறுவதை அறியலாம்.

## 2. துன்பம்

துன்பம் என்பது புண்ணுமிழ் குருதியில் தேங்கும்போது ஏற்படும் ஒன்று ஆகும். அக்காலத்தில் வீரர்கள் போரிட்டு வெல்ல வாகைசூடி மீள - களத்திற்குச் செல்வதுண்டு. அப்போது மார்பில் புண்பட்டு மாயும்போது, புண் ஏற்பட்டுக் குருதி கசியும் நிலையில் - மிக்க துன்பம் அடைவார்கள். உடல் புண்ணால் தோன்றுவது துன்பம். ஆனால் தொல்லை என்பது கழனிகளின் ஓரமாக எருதுகளை ஓட்டிச் சென்று வரப்பில் வளர்ந்திருக்கும் பசும்புல்லை மேய்ப்பதுபோல் - நெற்கதிர்கள் பாழாக்குவது ஆகும். சிற்றூர்களில் இத்தகைய வேற்றுமை பட்ட பொருளோடு இந்தச் சொற்கள் மக்களால் பயன்படுத்தப்பட்டுள்ள தன்மையைப் பார்க்கலாம். வெள்ளம் வரும்போது ஊரே நீரில் அடித்துச் செல்லும், அப்போது மக்கள் அவதிப்படுவார்கள். அந்த அவதிக்குத்தான் துன்பம் என்று பெயர். ஒரு குழந்தை அன்னையிடம் பால்கேட்டுத் தவிக்கும். அன்னையோ சிறிது நேரம் கழித்துத் தரலாம் என்று நினைக்கிறார். ஆனால் குழந்தையோ அவசரப்படுகிறது. அத்தகைய சூழ்நிலையில் அவள் குழந்தையின் 'தொல்லை' யைப் பொறுக்க மாட்டாமல் புன்னகை பூத்து நிற்பாள்.

ஆகையால், துன்பம் என்பதற்கும் தொல்லை என்பதற்கும் பொருள் வேறுபாட்டை அறிய முயலவேண்டும். அன்னை

'தெய்வம்' என்னும் சிறுகுழந்தைக்கு நினைவில் ஓரிடம் அளித்து - எண்ணி எண்ணி - அதனால் வரும் குழப்பத்தையும் - துன்பத்தையும் நீக்கி - சிறுசிறு தொல்லைகளினின்றும் வெளிப்பட்டுக் காக்க வேண்டிய கடமையை அறிய வேண்டி தன்மையில் அறிந்து வாழ்க்கையின் ஓரத்தில் நிற்க வேண்டும்.

மனித பிறவியில் காணப்படும் துன்பங்கள் பல. எல்லா சமயக் குரவர்களும் காம சழக்கினைத் துன்பத்திற்குக் காரணமாக நிறுத்துவது தென்படுகிறது. அதற்குச் சில சான்றுகளைக் காணலாம்.

பட்டினத்தார் சைவ சமய இறைவனாகிய சிவனை முன்வைத்து உடலின் வாயிலாக வந்துசேரும் துன்பத்தைப் பாடுகிறார். அதனை விதியால் ஏற்பட்டது என்றும் சிவனை வழிபட்டாலும் மீதூர்ந்து எழும் என்றும் கூறுகிறார். மின்னலையொத்த அழகினையுடைய - கூந்தலை சீவி முடித்து இருக்கும் எழிலினை உடைய - பெண்களை வலம் வந்து கெட்ட வாழ்வே அகப்பட்டது என்றும் சீரான நெறியுடைய சிவபிரானை வணங்காது பாழ்ப்பட்டதோர் வாழ்வே எஞ்சி நின்றது என்றும் கூறி விதியே மனிதனின் உயர்வு தாழ்வை அமைக்கிறது என்றும் கூறி இருப்பதைக் காணலாம்.

> ''அழலுக்குள் வெண்ணெய் எனவே உருகிப் பொன்னம்பலத்தார்
> நிழலுக்குள் நின்று தவமுஞற்றாமனிட்(டு) உரமின்னார்
> குழலுக் கிசைந்து வகைமாலை கொண்டுகுற் றேவல்செய்து
> விழலுக்கு முத்துலை யிட்டிறைத் தெனென் விதிவசமே''[2]

விளக்கு ஒளியில் நடக்கும்போது, உருவ நிழல் தொடர்ந்து வருவதுபோல், குழலழகைப் பார்க்கும் போதெல்லாம் 'காமக் கசடு' பொங்கிவரும் என்றும் கூறும் பட்டினத்தார் 'எல்லாம் விதி வசத்தாற் ஆகும்' என்று நினைவுக்கும் உணர்வுக்கும் அப்பாற்பட்ட சக்தியொன்றைக் காட்டி, அதற்கு 'விதி' என்ற பெயரைச் சூட்டி, எல்லாம் அவன் செயல் என்று இயலாமைக்காட்டி, இறுதியில் 'இறைவன் எல்லாம் தெரிந்தவன்' என்றும் 'மனிதன் ஒன்றுமறியாதவன்' என்றும் பறைசாற்றி இருக்கும்போக்கு சிந்தனைக்கு 'செம்பொருள்' கிடைத்தாற்போல் உள்ளதைக் காணலாம்.

உடலில் 'வெப்பம்' ஏறி விலைமாதரைக் கூடி அழியும் போக்கு உடனடியாக அழிக்கப்பட வேண்டும் என்றும், அதற்குச் சிவனுடைய அருள் நிச்சயம் வேண்டுமென்றும் பட்டினத்தார் கூறி அமைவதைக் காணலாம்.

காமவழித்துன்பம் ஒருபுறம் இருப்பினும் - அடுத்த நிலையில் 'கள்' உண்டலால் உருவாக்கி நிற்கும் துன்பத்தையும் சுட்டிக்காட்டுகின்றன சமய நூல்கள். சீவக சிந்தாமணியை இயற்றிய திருத்தக்கதேவர் கள்ளால் உணர்வு முருக்கேறி இறைவனின் அருட்பார்வைக்கு அகப்படாமல் தூரத்தில் நின்று அழியும் மனிதர்களைச் சாடிய போக்குக் காணப்படுகிறது.

**....பருகிய தேறல் தேங்குழிக்**
**களிப்புண் (டு) இளவனும் கன்னி நாரையைத்**
**திளைத்தலிற் பெடைமயிற் றெருட்டுஞ் செம்மற்றே''[3]**

சமண சமயக் கருத்துத் துன்பம் என்னும் பண்பை விளக்கிக் கூறுவதுபோல, பட்டினத்தடிகள் மீண்டும் 'வாழ்வு' என்னும் துன்பத்தைப் பற்றிப் பாடுகிறார். பொய்மை மிக்க தேகத்தை உண்மை என்று நம்பி அதைக் காக்கத் தேடும் அன்னத்தின் துன்பம், அதுவே பெரிய துன்பமாகும். ஒருவேளை அத்துன்பம் நீங்கின் பொருள் தேடி வாழ்வதற்குரிய துன்பம் வந்து சேர்ந்து விடுகிறது. அதுவும் நீங்கினால் அழகு வாய்ந்த மயில்போலும் சாயலை உடைய பெண்களைப் புகழ்ந்து பேசி, அதனால் வந்து சேரும் துன்பம் ஒருபக்கம் வந்து போகிறது. இக்கருத்து கீழ்க்கண்ட பாடலில் காணப்படுகிறது.

''அன்ன விசார மதுவே விசார மதுமொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரநல் தோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரம்இப் பாவி நெஞ்சுக்(கு)
என்ன விசாரம்வைத் தாய் இறைவா கத்தி ஏகம்பனே''[4]

துன்புற்று வாடும் நெஞ்சங்களுக்கு ஆறுதல் அளித்த ஆட்கொள்ளும் சிறப்பு இறைவனுக்கு உரித்தாகும். மனித நெஞ்சைப் பற்றிக் கூறும்போது 'பாவி நெஞ்சம்' என்று பட்டினத்தார் பாடியிருப்பது நோக்குதற்குரியதாக இருக்கிறது.

ஆழ்வார்கள்கூட இறைவனை அடையும் போக்கை ஒரு பசு - கன்று உவமை வழியாக அமைத்திருக்கும் பாங்கு சிறப்பாக உள்ளது. காலையில் மேய்ச்சல் நிலம் நோக்கிச் செல்லும் மாட்டுமந்தை -பசுக்களின் கூட்டம் மலைச்சாரல் ஓரமாய் மேய்ந்துவிட்டு - பசியாறி வீடுதேடி ஓடிவரும். அப்போது வீட்டிற்குப் பத்துப் பதினைந்து அடிதூரம் இருக்கும்போது 'அம்மா' என்று கன்றுக்குத் தெரிவிக்க ஓசையிடும். அந்த ஓசையைக் கேட்கும் கன்று மாட்டுக் கொட்டகையில் எம்பி குதித்து - அசைந்து ஆடி ஓடத் தொடங்கும். அந்தப்

பசுவுக்குத்தான் எத்தனை மகிழ்ச்சி ! அந்தக் கன்றுக்குத்தான் எத்தனை நிம்மதி/ அதுபோல் மக்கள் இறைவனை எண்ணி மகிழ்ந்து வழிபாடுகளில் ஈடுபடுகிறார்கள்.

''கறவா மடநாடுதன் கன்றுள் ளாற்போல்
மறவாது(அ)டியேன் உன்னையே அழைக்கின்றேன்'' [5]

என்ற வரிகள் திருமங்கை ஆழ்வார் பாடலில் காணப்படுகிறது.

இந்த வகையில் சமய இலக்கியத்தில் துன்பம் மிக ஆழமானதொரு இடத்தைப் பற்றி நிற்பதைக் காணலாம். அருவி கொட்டும்போது, மலைக் குன்றுகள் கூட பிளவுபட்டு நீருக்கு வழிவிடுவதுண்டு. அதுபோல் துன்பம் என்னும் அருவி ஓயாமல் - ஒழியாமல் தொடர்ந்து பாய்ந்து வரும்போது 'நெஞ்சம் என்னும் கற்பாறைப் பிளவை ஏற்படுத்தி, ஆறுதல் என்னும் அனுபவத்தை அள்ளிக் கொடுக்க வல்லதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

வாழ்வின் ஒரு நீண்ட பயணம் தோன்றி அமையும் போது மறவாமல் ஒளியின் கதிர்களில் தேங்கி நிற்கின்ற பாங்கு சிறப்பாக அமையவேண்டி உள்ளது. துன்பக் கயிறு காம இச்சையின் உடலைக் கட்டுவதால் இறப்பு வெகுவிரைவில் தோன்றி எல்லாப் பக்கங்களிலும் நிறைந்து அமைந்துள்ளது. ஆகையால் துன்பம் வந்தபின் பேரின்பம் மிகுந்த உணர்ச்சிக் கொந்தளிப்புக்கிடையே தோன்றி அமைகிறது.

## 3. அகப்புண்-புறப்புண்

வாழ்வின் அகம்-புறம் என்னும் இருவகைத் தோற்றத்தில் உண்மை ஒன்று மேலோங்கி நிற்பதைக் காணலாம். அகத்தோற்றம் - அக உணர்ச்சிகள் - அக உருவங்கள் மிக்க வியப்பை அளிக்க வல்லதாக உள்ளது. 'நெஞ்சு' என்னும் ஒரு சொல்லில் ஆழ்மையான உணர்வுகள் பாய்ந்தோடுவதைச் சான்றோர்கள் கண்டு தெளிந்துள்ளனர். அதேபோல் 'புறம்' என்னும் உடலின் மேற்புறம் செயல்பாடுகள் - விளையாடல்கள் தன்மையில் ஆகி வருகின்றன. அகம் அன்பு மயமானது. மௌன மயம் ஆனது. புறம் வீரமயம் ஆனது, வலிமை மயமானது. இந்த இருவேறு முனைகளின் பகுதிகளில் 'இழுபறி' போராட்டம் நாள்தோறும் தோன்றி அமைந்து விடுவதை அறியலாம்.

அகப்புண்ணுக்குச் சில சான்றுகள் உள்ளன. காம உணர்வு அகத்தைச் சார்ந்து இயங்குவதாகும். பட்டினத்தார் பாடும்போது

'குலையும் காமக் குருடர்க் குரைப்பேன்' [6]

என்று கூறி இருப்பதைக் காணலாம். உள்ளத்தின் ஆழ்மையில் உறங்கிக் கிடக்கும் ஆசைவெள்ளம் வெடிக்கும்போது அங்கே 'ஞானம்' என்னும் தீப்பொறி பற்றி எரிந்து ஒளிகாட்டுகிறது. கண்ணீர் மணிகள் ஒன்றாகக் கோர்த்து நின்று, நெஞ்சக் குமுறலை - நெஞ்சின் அகத்துறையைப் பற்றி விளக்குவதாக உள்ளது.

காம வழிகளை அடக்க முடியாமல் - காம உணர்வுக்குத் தீனியிட முடியாமல் - தவிக்கும்போது அங்குத் 'தெளிவு' என்ற ஒன்று பிறக்கிறது. அந்தத் தெளிவுதான் அகப்புண்ணை ஆற்றி - அக எரிச்சலைப் போக்கி - அக இயலைத் தட்டி பிறிதொரு இடத்தில் கூறும்போது

'மண்பாற் காமம் கழிக்கும் மறைவிடம்' [7]

காமக் கழிவுகளை மறைமுகமாகத் தவிர்க்கும் இழிமையைக் கூறுகிறார் பட்டினத்தார்.

இன்னும் சில பெண்மையில் - ஆண்மையில் காணப்படும் காம நோய்களை - அகப்புண்களைக் காணலாம்.

''மால்கொண்(டு) அறியா மாந்தர் புகும்வழி'' [8]
''நோய்கொண் டொழிய நுண்ணியர் போம்வழி'' [9]
''தருத்திய காமுகர் சாரும் படுகுழி'' [10]
''செருக்கிய காமுகர் சேரும் சிறுகுழி' [11]
''பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி'' [12]

இவ்வாறு அகக்கண்ணோட்டத்தால் அகப்புண்ணைப் பற்றிச் சமயக் குரவரான பட்டினத்தார் பாடி இருப்பதைக் காணலாம். பிறவிக்கு அடையாளமாக விளங்கும் 'வழி' என்னும் உறுப்பு இங்கே இழிந்ததாகக் காட்டப்பட்டுள்ளதா ? என்பது எண்ணுதற்குரியதாக விளங்குகிறது. 'காமக் குழியாகக் காணாமல்-கலவி ஒன்றே நோக்கமாகக் கொள்ளாமல் - இறைவன் அமைத்த உருவங்களை பக்தி வழிச் சென்று புரிந்துகொள்ள வேண்டுமென்று சமயக் குரவர்கள் கூறியிருப்பது கண்கூடு.

பட்டினத்தார் போன்றோர் இறைவனைக் காமத் துன்பங்களைப் போக்குபவன் என்று கூறியிருக்கும்போது ஆழ்வார்களில் ஒருவரான தொண்டரடிப் பொடியாழ்வார் சாதி-சமயம் ஆகியவற்றைக் கடிந்துகொண்டு, எல்லாம் ஆகிய இறைவனை எல்லோரும் தொழ வேண்டும். எல்லோருக்கும்

இறைவனுடைய அருள் தேவையாகும் என்று புரட்சிக் கருத்தொன்றைக் கூறுகிறார். சாதிக் கயவர்கள் - சமயக் கள்ளர்கள் 'பக்தி வழியை' சுயநலத்திற்காகவும் - இன்ப வேட்கைக்கு உரியதாகவும் கொள்ளாமல் சேர்ந்து இருந்து பாடி மகிழ்வதையே ஆழ்வார் குறித்திருப்பது உண்மையாகும்.

**''பழுதிலா வொழுக லாற்று**
**பலசதுப் பேதி மார்கள்**
**இழிகுலத் தவர்களேனும்**
**எம்மடி யார்களாகில்**
**தொழுமினீர் தொடுமின் கொள்மின்**
**என்றுநின் னோடு மொக்க**
**வழிபட அருளி னாய்ப் போல்**
**மதிள்திரு அரங்கத்தானே''** [13]

அகப்புண்ணைப் பெற்று வாழும் மனிதர்களின் மூடத்தன்மையை நாவுக்காசர் சாடுகின்றார். நீரும் மண்ணும் தீயும் வெயிலும் முகிலும் காற்றும் ஆகிய எல்லாமாகி கானூரில் தோன்றிய கடவுளைச் 'சேர்வும்' என்ற ஒன்றை அறியாது திசைதொறும் உணர்ச்சி சிறிதும் இலராய் ஓடித்திரியும் உலகத்தவர்கள் என்று கடிந்து கூறிய போக்கு உள்ளது. அகம் தூய்மையாக இருந்து, அதற்குள் நெறியான வழிகள் தோன்றும்போது, எத்தனையோ இறைவடிவங்கள் தோன்றி மறைகின்றன. அவ்வளவு தோற்றங்களிலும் இறைவழிபாடு முறையே அமைந்துள்ளது. அதைக் காணலாமா?

**''நீரும் பாரும் நெருப்பும் அருக்கனும்**
**காரும் மாருதங் கானூர் முளைத்தவன்**
**சேர்வு வொன்றறி யாது திசை**
**ஓர்வு மென்றிலர் ஓடித் திரிவரே''** [14]

ஆழ்வார்கள் வைணவ நெறியை வளர்த்தார்கள். பெருமாளைப் புகழ்ந்து - பாடி பேரின்ப வெளியில் திகைத்தார்கள்-திளைத்தார்கள். நம்மாழ்வார் பாடலைக் காணும்போது

**''என்னமர் பெருமான் இமையவர் பெருமான்**
**இருநிலம் இடந்தபெம் பெருமான்**
**முன்னைவல் வினைகள் முழுதுடன் மாள**
**என்னையாள் கின்றஎம் பெருமான்''** [15]

சமயக் குரவர்கள் தம்முடைய நெஞ்சில் பக்தி தோன்றுவதை மெல்லிய உணர்வோடு பாடி இருக்கும் தன்மை பெரிதும் வியப்பிற்குரியது. வழிபாடு செய்யும் நோக்கத்தில் இயற்றிய பாங்கு எண்ணி மகிழ்வதற்குரியதாக உள்ளது. 'என்னை ஆள்கின்ற இறைவன்' என்று கூறுவதின் வாயிலாகப் பக்திக்கு ஒரு மதிப்பளிக்கும் தன்மை அமைந்துள்ளது. 'அகப்புண்' ஆறுவதற்கு 'இறைமை' அருள் நிச்சயம் வேண்டும் என்ற உட்பொருள் இந்த பாடலில் மெல்லிழைப்போல உருண்டோடுகிறதல்லவா?

'புறப்புண்' என்பது உடலில்-சிறப்பாக முதுகில் ஏற்படுகின்ற போர்க்கால புண்ணைக் குறிக்கத்தான் சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க கால மன்னர்கள் 'புறப்புண்' நாணி வடக்கிருந்து உயிர் நீத்து மானத்தைக் காத்து வாழ்ந்த தன்மை நன்றாகக் காட்டப்படுகிறது. ஆனால், சங்கம் மருவிய காலத்தில் காணும் 'புறப்புண்' நீதியைக் கொன்றதனால் ஏற்பட்ட புண்ணைக் குறிக்க வல்லதாக உள்ளது.

சிலப்பதிகாரத்தில் கணவருடன் பாண்டிய நாடு நோக்கிச் சென்று, பொருளீட்ட காற்சிலடபு ஒன்றைக் கொடுத்துக் கண்ணகி கோவலனை அனுப்பி வைக்கிறாள். ஆனால் கோவலன், பொற்கொல்லனின் சூழ்ச்சியில் சிக்கி கொலையுண்கிறான். அதை அறிந்த கண்ணகி ஒரு சிலம்பை (மீதம் இருந்தது) மட்டும் எடுத்துச் சென்று அவைக் களத்தில் அஞ்சாது நின்று சூளுரைத்து உண்மையை நிறுவ அந்தச் சிலம்பை ஓங்கிக் கீழே அடிக்கிறாள். அப்போது அதனுள் இருந்த மணிகளில் சில அவன் வாயில் பட்டுப் புண்ணை - புறப்புண்ணை ஏற்படுத்துகிறது.

**''வாய்முதல் தெறித்தது மணியே''** [16]

என்று வேகமாகச் சிதறிய மணி மன்னனின் வாய்மேல் வாய்(மை) யின் மேல் பட்டு புண்ணைத் தோற்றுவித்து மன்னனையும் வீழ்த்திய தன்மை சிறப்புடையதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

வாழ்வியல் போக்கில் புறத்தில் தோன்றும் புண் காலவேகத்தில் மறையும் தன்மை உடையது என்றும், அகத்தில் ஏற்பட்ட புண் - உணர்வுப் புண் இறக்கும் வரை நிலைத்து நிற்கும் தன்மை வாய்ந்தது என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

**'வாயினாற் சுட்டபுண்'** [17]

என்று அவர் புறத்தில் ஏற்படும் புண்ணைச் சுட்டிக்

காட்டியுள்ளமையைக் காணலாம். ஆகையால்தான் ஆத்திரப்பட்டுச் சொற்களை உதிர்த்துவிடக் கூடாது என்று சான்றோர்கள் கூறுவார்கள். இதை விளக்கும்போது வள்ளுவர்,

'யாகாவ ராயினும் நாகாக்க' [18]

என்று கூறியுள்ளமை சிந்தனைக்கு விருந்தாக உள்ளதைக் காணலாம்.

திருநாவுக்கரசர் தம் பாடலில் புறப்புண் பற்றிக் கூறி இருப்பதை உய்த்துணரலாம். சிந்தனையில் அமர்ந்து புறத்தில் தேங்கும் புழுபோன்ற பழிசொற்களைப் போக்கி வாழ்வினைச் செம்மையுறச் செய்ய வேண்டுமென்று அவர் கூறுகின்றார். தொடர்ந்து கூறும்போது 'திருவடி வாழ்த்தி வணங்கினால் தவம் பெருகலாம், அறியாமைத் தீரலாம், மாறுபட்ட எண்ணம் திருந்தலாம், இறைமயமாகி ஒப்பற்ற பேரானந்தத்தைப் பெறலாம்' என்று உயர்ந்த நோக்கில் வைத்து கூறியுள்ளமை அந்தச் சமயக் குரவரின் தெளிந்த ஞானச் செருக்கைக் காட்ட வல்லதாய் உள்ளது.

''பெருக லாந்த வம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருகல் ஆம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே'' [19]

அடுத்துவரும் இன்னொரு பாடலில் புறத்தில் ஏற்பட்டு அமையும் வீண் வறட்டு வேதாந்தங்களையும் - முரட்டுத் தனமான கொள்கைகளையும் - கோபத்தால் அமையும் கண்ணீர்க் கறைகளையும் - திறமுடன் எடுத்தாண்ட போக்கு வியப்பாய் உள்ளது.

''சினத்தினால் வரும் செய்தொழிலாம் அவை
அனைத்தும் நீங்கிநின் றாதர வாய்மிக
மனத்தி னால்மரு கற்பெரு மான்திறம்
நினைப்பி னார்க்கில்லை நீள்நில வாழ்க்கையே'' [20]

ஆண்-பெண் வாழ்க்கை மலர்ந்து மணம் பரப்பத் தொடங்கும்போது இறைவனுடைய ஆதரவு மிகத் தேவைப்படுகிறது. கொடிக்கு கொழுக் கொம்பு போல, சமயத் துறையில் கண்ணீர் சிந்தும் அடியவர்களுக்கு 'இறைவன்' என்னும் கோல் ஆதரவாக இருக்க வேண்டும்.

''புறத்துறுப்பு என்செய்யும் யாக்கை
அகத்துறுப்பில் அன்பில்லாதவர்க்கு'' [21]

என்று செந்நாப் போதார் வள்ளுவர் கூறியிருப்பதைக்

காணலாம். இங்கு புறப்புண் - அகப்புண் என்ற இரண்டையும் சமநோக்கில் வைத்துப்பாடும் திறம் நிறைவாய் உள்ளது.

ஆகையால் புண்களில் சிக்கிப் பதறாமல் வாழ வழி காணவேண்டும் என்னும் நோக்கைப் பின்பற்றலாம் அல்லவா ?

## 4. சமாதி:

சமயங்கள் ஓங்கி வளரத் தொடங்கிய காலகட்டத்தில் - இடைக் காலத்தில் - சங்க காலக் கருத்தோட்டங்கள் அப்படியே இடம்பெற்று வாழ்ந்ததைக் காணலாம். 'மருள்' என்னும் சொல் சங்ககால வாழ்வியல் போக்குகளில் 'வீரர் பகைவர்க்கு மருட்சியைத் தோற்றுவித்து வெற்றியடையும் தன்மையைக் கூறுவதற்காகப் பயன்பட்டதைப் பதிற்றுப்பத்தில் காணலாம்.

'அழல்மருள் பூவின் தாமரை' [22]

இயற்கை அழகைச் சுட்டிக்காட்டி உள்ளதால் அம்மன்னனுடைய நாட்டில் பொருள்வளம் மிகுந்து இருப்பதையும் மகிழ்ச்சி ஆரவாரம் இடையறாது கேட்டுக் கொண்டிருந்ததாகவும் பொருள் சுட்டப்பட்டுள்ளது. அதேபோல் 'தாமரை மலரைக் கண்ட புலவர்' அந்த நாட்டில் வாழும் மக்கள், பற்றில் இருந்து விடுபட்டுத் தாமரை இலைத் தண்ணீர்போல் வாழ்ந்து இறையருள் பெற முயல்கின்றார்கள் என்றும் பொருள்பட அமைந்துள்ளதைக் காணலாம்.

உடல் பற்றிய உண்மையைக் கூறும்போது மருட்சியை - அச்சத்தை ஏற்படுத்தும் கருத்தை பக்தி இயக்கக் காலத்தில் வாழ்ந்திருந்த திருமூலர் திருமந்திரத்தில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**''காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்**
**பாற்றுளிப் பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்**
**தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்**
**கூத்தன் புறப்பட்டுப் போன இக்கூட்டையே''** [23]

இறைவழிபாடு மிக இன்றியமையாத ஒன்று ஆகும். இந்த உடல் வெறும் தோலால் ஆகிய பை என்றும், நேரம் வரும்போது கிழிந்து - அழிந்து போகுமென்றும் கூறியுள்ள போக்கு 'உலகாயுதம் பேசும்' மக்களுக்கு எதிர்க் குரல் கொடுப்பதுபோல் பொருள் அமைந்துள்ளமைப் புரிகிறதல்லவா ? இறைவனாகிய கூத்தன் சென்ற பின்பு பயன்படாத எலும்புக் கூட்டைத் தேடி ஓடுவதால் யாருக்கு என்ன பயன்? இடுகாட்டில் புகுவதற்கு மனித

உடல் சென்றுவிடும்போது, அழியும் இதனை யார் மதிக்கிறார்கள். திருமூலர் கூறும் யாக்கைத் தத்துவம் சமயக் காலக் கருத்துக்களில் ஒன்று அல்லவா ?

உடல் அழிவு சமாதியில் சென்று முடியும். உலக வாழ்வில் சாதாரண மனிதர் இறந்துவிட்டால் 'செத்தார்' என்று குறிப்பார்கள். பேரரசர்கள் போர்க் களத்தில் இறந்துபட்டால் 'மாய்தல்' என்னும் சொல்லை பக்தியோடு பயன்படுத்தி இருக்கிறார்கள்.

'கடலுள்ள மாய்ந்த இளம்பெருவழுதி' [24]
என்று கூறுகிறார்.

தமிழில் சமய இலக்கியத்தில் 'சாதல்' என்னும் சொல் பல சொல்லோட்டங்களில் பயன்பட்டிருப்பதைக் காணலாம்.

1. இறப்பு
2. துஞ்சல்
3. சாவு
4. கிடத்தல்
5. கண் அவிதல்
6. காலம் அடைதல்
7. சமாதி அடைதல்
8. மீளா உறக்கம்
9. சிலை ஆதல்
10. மண்ணாய் ஆதல்
11. விடுதலை அடைதல்
12. வீடு அடைதல்
13. மூச்சு நிற்றல்
14. குழியில் வீழ்தல்
15. தோற்பைக் கிழிதல்
16. பிராணன் போதல்
17. விடுபட்டுப் பிறத்தல்
18. மலக்கூடு கழிதல்
19. பிணியின் குடம்
20. சாம்பல் ஆதல்
21. கரையும் (உப்பு) உடல்
22. சீழ் உற்று மடிதல்
23. காலன் வரும் வாழ்க்கை
24. துளையுடை அழிவு உடல்
25. அடக்க நிலை
26. சில்லறை வாழ்க்கை
27. புலன் அடக்கம் (வாழ்க்கை)
28. உருண்டு விழும் வாழ்வு
29. சவ அடக்கம்
30. தழலில் உருகும் வாழ்க்கை
31. உடையும் வாழ்வு
32. மூச்சுத் திணறல்

சான்றோர்கள் மனித வாழ்வின் நிலையாமையை சமாதி என்று சொல்லப்படுகின்ற சொல்லில் விளக்கிக் கூறுகின்றார்கள். மனிதர்களாயிருந்தாலும் தேவர்களாயிருந்தாலும் சமாதி நிலை ஏற்படுகிறது. வள்ளுவர் கூறும்போது 'வாழ்நாள் வழி அடைக்கும் கல்' என்று மனிதவாழ்வின் தத்துவத்தைக் கூறுகின்றார். இச் சொற்றொடருக்குப் பொருள் மனிதனுக்கு இறப்பு என்பதும் 'சமாதி நிலை' அடைவது என்பதும் மிகச் சாதாரணமாக நடைபெறும் ஒரு செயல் என்பது குறிப்பிடத்தக்கது.

## 5. நெஞ்சில் ஒரு கீறல் :

வாழ்க்கையில் நெஞ்சம் என்பது மிக மென்மையான ஒரு பகுதியாகும். அதில் இறையுணர்வு தோன்றச் செய்யவேண்டும். 'நெஞ்சக் கனகல்' என்று மாணிக்கவாசகர் சுட்டுவார். சில இடங்களில் நெஞ்சம் இறுகி பக்திவயப்பட முடியாமல் போகிறது. அதற்குக் காரணம் காமம் என்னும் உணர்ச்சியே.

மாணிக்க வாசகர் கூறும்போது, இந்தக் காமத்தீயினால் வெந்து வாடுகின்ற உயிரின் தன்மையைச் சுட்டுகின்றார்.

''செழிகின்ற தீப்புகு விட்டிலிற்
சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற என்னை விடுதிகண்
டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர
கோசமாங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு
தூட்ட மறுத்தனனே'' [25]

மிக நன்றாகத் தோன்றும் விளக்கு வெளிச்சத்தில் மயங்கிப்போய் அதில் மாறும் விட்டிலைப் போன்று மிக இனிமையான சொற்களைக் கூறி மயக்கும் பெண்களின்பால் பலகாலம் விழுந்து துன்புறுவதனைக் காண்பாய் என்று மனம்நொந்து கூறுகின்றார்.

இதனையே வள்ளுவர் கூறும்போது,

''இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலக இயற்றியான்'' [26]

என்று நெஞ்சில் படும்படியாகக் கடிந்து கூறுகின்றார். இதில் ஒரு பிச்சைக்காரனின் இயலாமையும், இறைவன் மறுப்பும் தெளிவாக உள்ளது. இந்தக் குறட்பாவில் உலகத்தினுடைய போக்கும் உயிர்களுடைய பலவீனமும் நன்றாகச் சுட்டப்படுகிறது.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், பா. |
| 2. | மேலது | திருத்தில்லை, 3 |
| 3. | திருத்தக்கதேவர் | சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம், 50 |
| 4. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், பா. |
| 5. | திருமங்கை ஆழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், பெரிய திருமொழி, 7:8:2 |
| 6. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், கச்சித் திரு அகவல், 23 |
| 7. | மேலது | பா. 56 |
| 8. | மேலது | பா. 57 |
| 9. | மேலது | பா. 58 |
| 10. | மேலது | பா. 59 |
| 11. | மேலது | பா. 60 |
| 12. | மேலது | பா. 61 |
| 13. | தொண்டரடிப்பொடி ஆழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், திருமாலை, 42 |
| 14. | திருநாவுக்கரசர் | தேவாரம், திருக்கானூர் பா. 766 |
| 15. | நம்மாழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், திருவாய்மொழி, 4 |
| 16. | இளங்கோ அடிகள் | சிலப்பதிகாரம், வழக்குரை காதை |
| 17. | திருவள்ளுவர் | திருக்குறள், அடக்கமுடைமை, ப. 92 |
| 18. | மேலது | நாவன்மை, ப.56 |
| 19. | திருநாவுக்கரசர் | தேவாரம், திருமருகள், 864 |
| 20. | மேலது | பா. 866 |
| 21. | திருவள்ளுவர் | திருக்குறள், அன்புடைமை, பா. 56 |
| 22. | .... | பதிற்றுப்பத்து, தகைந்த காஞ்சி, 23 |
| 23. | திருமூலர் | திருமந்திரம், 167 |
| 24. | கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி | புறநானூறு |
| 25. | மாணிக்கவாசகர் | திருவாசகம், நீத்தார் விண்ணப்பம், பா. 4 |
| 26. | திருவள்ளுவர் | திருக்குறள், இரவச்சம், பா. 552 |

# இயல் - 6

# பிறப்பு

சான்றோர்கள் மனித வாழ்வினை இருவகையாகப் பகுத்துக் கூறுகிறார்கள். ஒன்று பிறவி வட்டத்தில் ஆழ்கின்ற போக்கு, மற்றொன்று பிறவி இல்லாமல் முக்தி அடைகின்ற போக்கு. மாணிக்கவாசகர்,

'பெரும் பிறவி பௌவம்'[1]

என்று கூறுகிறார். இங்கு பௌவம் என்பது கடலைக் குறிக்க வந்தது. அலைமோதும் கடல் போல், பிறவிகளின் கோர்ப்பு தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது என்பதை மறைமுகமாகச் சுட்டுகிறார் மாணிக்கவாசகர்.

திருச்சதகத்தில் மாணிக்கவாசகர் பாடும்போது 'இறைவனே உன்னை நோக்கிப் பாட வேண்டும்; நின்னையே நெஞ்சம் உருகி அடைய வேண்டும். உன்னையே ஏற்று ஆட வேண்டும். உன்னைப் போற்றுகிறேன். நாய்ப் பிறவியாகிய என்னை ஆட்கொண்டு 'புழுக்கூடு' போன்ற உடலினின்று என்னை நீக்கி - பொய்களின் கூட்டாக இருக்கிற இந்தப் பொய் உடலினின்று நீக்கி - ஆண்டருள்வாயாக, என்று கூறுகிறார். இந்தப் பிறவியினைப் 'புழுக்கூடு' என்று சுட்டுவதைக் காணலாம்.

வாழ்வின் மேலோட்டத்தில் உலக உயிர்கள் யாவும் 'புழுக்கூட்டுள்' வாழ்கின்றவர்களாகத்தான் காணப்படுகின்றார் கள். இந்தப் பாழாய்ப்போன பிறவிகளில் இருந்து நான் தப்பிக்க வேண்டும் என்று மனம் நொந்து கூறுகிறார்.

**''பாட வேண்டும், நான் போற்றி நின்னையே**
**பாடி னைந்துநைந் துருகி நெக்கு நெக்(கு)**
**ஆட வேண்டும் நான் போற்றி அம்பலத்(து)**
**ஆடு நின்கழற் போது நாயினேன்**
**கூட வேண்டும் நான் போற்றி இப்புழுக்**
**கூடுநீக்(கி) எனைப் போற்றி பொய்யெல்லாம்**
**வீட வேண்டும் நான் போற்றி வீடுதந்(து)**
**அருளு போற்றிநின் மெய்யா மெய்யனே''[2]**

நந்திக் கலம்பகத்தில் மன்னனைப் பாடும்போது வாழ்வில் பெரும் கேடாக அமைந்துள்ள பிறவியைப் பற்றியும் பாடியுள்ள போக்குத் தென்படுகிறது.

**'தேனுறு மலராள் அரியினை அடைந்தாள்**
**செந்தழல் அடைந்துள் தேகம்**
**யானும்என் கலியும் எங்ஙனனே புகுவோம்**
**எந்தையே நந்தி நாயகனே'** [3]

தேகத்தினுடைய 'அழியும்' தன்மையைச் சுட்டிக் காட்டுவதால் பிறவியின் பொருள் உய்த்துணரத்தக்கதாக இங்குக் காட்டப்பட்டுள்ளது.

சமயக் குரவர்களாகிய பலர், மனித வாழ்வில் மாறி மாறி அமையும் 'பிறவி' என்னும் பெருநோயினின்று விடுதலை அடைய வேண்டுமென்று பாடிக்காட்டியுள்ளார்கள். ஆனால், ஆழ்வார்களுள் ஒருவரான குலசேகர ஆழ்வார் பிறவி வேண்டுமென்றும், அப்பிறவியின் தன்மையில் ஒவ்வொரு பிறவியிலும் இறைவனைக் கண்டு 'பக்தி'யின் உணர்வை அடையலாம் என்றும் உறுதியாகக் கூறும் இயல்பைக் காணலாம்.

**''ஆனாத செல்வத்துஅரம் பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே''** [4]

எத்தனைப் பிறவிகளை எடுத்தாலும் வேங்கட மலையின் அழகைக் காண வேண்டும் என்று பாடும்போது பக்திவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதைக் காணலாம். 'திருப்பதி மலையில் ஒரு சிகரமாக அல்லது ஒரு கானாறாக அல்லது ஒரு பாதையாக அல்லது ஒரு படியாக அல்லது அந்தத் திருமாலின் மலையில் ஏதேனும் ஒன்றாக இருக்க வேண்டும் என்று இவ்வாறு ஆசைப்பட்டு ஒரு பதிகம் பாடி இருக்கிறார்'' [5] என்று சான்றோர் ஒருவர் ஆழ்வார்களின் பக்தியைப் பிறவிகளின் சிறப்பின்மேல் வைத்து கூறியிருப்பது கண்கூடு.

இவ்வாறெல்லாம் பக்திக் கனலைக் காலம்தோறும் சமயக் குரவர்கள் வளர்த்திருக்கும் தன்மை - சமயத் துறவிகள் வளர்த்திருக்கும் போக்கு - வியப்பாக உள்ளது. உள்ளம் தடுமாறும்போதெல்லாம் - உணர்வுகளில் தளர்ச்சி ஏற்பட்ட போதெல்லாம் - இறை வழிபாட்டில் மூழ்க வேண்டும் என்று சமயக் குரவர்கள் கூறி உள்ளனர்.

வேகமாக ஓடுகின்ற வாழ்க்கை வண்டியில் 'பிறவி' என்னும் சக்கரங்கள் 'பக்தி' என்னும் கடையாணியோடு உருண்டோடுகிறது. ஏதேனும் குற்றங்கள் - குறைகள் வெந்து மடிகின்ற உணர்வோட்டங்கள் - வேகாத மயான எலும்புக் கூடுகள் - பிறவி பற்றிய உண்மையைத் தோற்றுவிக்கிறது.

## 1. பிறவிக்கடல்

கொந்தளிக்கும் கடல் வாழ்வியல் கருத்தினை மிக்க நுண்மையுடன் விளக்குகிறது. மணற்மேட்டின் மீது வந்து பாயும் நீர் பின்னோக்கிச் சென்று கடலிலேயே கலக்கும். அலைகள் பொங்கும்போது வாழ்வின் அலைச்சல் நன்றாகத் தென்படுகிறது. முன்னும் - பின்னும் சென்று மணற்பரப்பில் ஊறிச் செல்லும் நீர் கண்களுக்கு எத்தனை அழகிய காட்சியை அளிக்கிறது? அது போல் பிறவி என்னும் அலை, நுரையோடு பாய்ந்து அடங்குவதைக் காணலாம்.

**''ஒட்டாத பாவித் தொழும்பரைநாம் உருவறியோஞ்**
**சிட்டாய் சிட்டற்கே சென்றூதாய்க் கோத்தும்பி''** [6]

'எக்காலமும் ஒரு வகை கேடும் நேராமல் இனிய எழில் திருவடியினைப் பொருந்தும் புண்ணிய பேறு முற்றவத்தாலெய்யாத பாவித் தொண்டான மக்களுருவென்று கூட மதியோம். மிக நுண்மையனவாக விளங்கும் செம்பொருளாம் சிவபெருமான் திருவடிக்கண் சென்று அரச வண்டு நீ ஊதாய், இங்கு மாணிக்கவாசகர் 'மக்களுரு' ஒன்றைக் காட்டுகிறார். உருவென்னும் சொல்லும் பிறவியைக் குறிக்க வந்துள்ளதைக் காணலாம்.

## 2. நீர்க்குமிழிகள்

வானின்று பொழியும் மழை மண்ணில் கொட்டும்போது சிறுசிறு நீர்க்குமிழிகள் தோன்றி மறைகிறது. அதே போல் ஓடுகின்ற ஆற்றில் பெய்யும்போது குமிழ்கள் தோன்றி சில கணங்களில் மறைந்து விடும். ஆகையால் மனித வாழ்வு அழிந்து படக்கூடிய ஒன்று ஆகும்.

மாணிக்கவாசகர் பாடும்போது, குமிழின் தன்மையை மனதில் நிறுத்திப் பாடுகிறார்.

**''தவமே புரிந்திலன் தண்மலர்**
**இட்டு முட்டாது இறைஞ்சேன்;**
**அவமே பிறந்த அருவினை**

**யேன் உனக்(கு) அன்பருள்ளம்**
**சிவமே பெறுந்திரு வெய்திற்று**
**லேன்நின் திருவடிக்காம்**
**பருவே உருளும் கண்டாய் அடி**
**யேள்கெம் பரம்பரனே''** [7]

இறைவனை நோக்கித் தவமொன்றும் செய்யாமல் காலம் கடத்தி ஆயிற்று; குமிழி போன்ற அவமே ஆன பிறவியில் உருண்டு அழுது ஆயிற்று; அன்பர்கள் எல்லாம் திருவடியினைப் போற்றி வணக்கம் தெரிவிப்பதில்லை; யான் உனக்கு அடிமை என்று பிறந்த தன்மையைச் சாடி, அந்தத் துயரத்தில் இருந்து விடுதலை பெற வேண்டும் என்று கூறியது தென்படுகிறது.

இன்றைய நூற்றாண்டின் கவிஞராகிய சுப்பிரமணிய பாரதியார்,

**''மோகத்தைக் கொன்றுவிடு; அல்லால் என்றன்**
**மூச்சை நிறுத்தி விடு''** [8]

என்று பாடி இருக்கும் தன்மை நோக்குதற்குரியது. மனித வாழ்வின் தோன்றி மடியும் தன்மையை - மோகமுடைய தன்மையை எடுத்துக் காட்டியுள்ள பாங்கு நோக்குதற்குரியதாக உள்ளது.

### 3. ஏக்கம்

உலகில் வாழும் உயிர்கள் எல்லாம், ஏதோ ஒன்றை அடக்குவதற்கு முயன்று, இறுதியில் முடியாமல் திகைத்து ஏக்கத்தில் ஆழ்ந்து விடுகின்றன. நாயன்மார்கள் சிவனை அடைய எவ்வளவு காலமாய்த் தவம் இயற்றுகின்றார்கள்? ஆழ்ந்த தவம் தனிமையில் நடைபெற வேண்டும். ஒருமுக நோக்கோடு நடைபெற வேண்டும்.

தியானத்தில் அமரும்போது, விடியற்காலை நேரத்தில் எவ்வளவு போராட்டங்கள் ஏற்படுகின்றன. வீதியில் வாகனங்களின் ஓசை - சமையல் அறையில் மனைவியின் கூக்குரல் - மெல்ல வீசி வருகின்ற ஊதைக் காற்றின் வேகம் - இவை எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து தியானத்தைக் கலைக்கும். ஆகையால், ஒன்றின் மேல் உணர்ச்சி ஆழாமல் பலவாறாக நினைத்து விரவுகின்ற தன்மை ஏற்படுகிறது.

**''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற**
**உத்தமர்தம் உறவு வேண்டும்''** [9]

என்று ஒருமுக நோக்கின் இன்றியமையாமையைக் கூறி அத்தகைய முழுமுதல் கடவுளைப் பற்றி அருளுக்காக ஏங்கித் தவிக்க வேண்டுமென்பது இராமலிங்க அடிகளின் கருத்தாகும்.

**''தளராமை என்னும் கைத்தடி**
**கொண்டு அடிக்கவோ''** [10]

என்று வாழ்வின் ஓரத்தில் நின்றுகொண்டு கூக்குரல் இட்டு உடலெல்லாம் கட்டையில் ஏறிப்போகும் தருணத்தில் 'கைத்தடி'யைக் கொண்டு தளராமையில் வீழ்ந்து உடலில் அடித்து துன்புற்று வாட வேண்டிய நிலையை எண்ணும்போது, அடி வாங்காது தப்பிக்க வேண்டுமென்ற ஏக்கம் தோன்றி முன் வருகிறதல்லவா?

மாணிக்கவாசகர் பாடும்போது 'அரச வண்டே' வாழ்க்கையில் ஈடேற ஒருபக்கம் பொருளும், மற்றொரு பக்கம் துணைவியும் இருந்து இரு முதுகுரவர் பெரும்பேர் எய்துகற்கு கருவியாக அமைந்த காதல், மக்களாகிய கிளைஞர் என்றும், கல்வியின் திறமெல்லாம் சேர்ந்து இருந்தும், அதனால் ஏற்பட்டு அமையும் செருக்கும் அறியாமையும் கொள்வர்; அதனால் இந்த உலகம் 'பித்த உலகம்' என்று அழைக்கப்படுமாற்றை அறியலாம்.

**'''வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலங் கல்வியென்னும்**
**பித்த உலகில் பிறப்போடு இறப்பென்னும்**
**சித்த விகாரக் கலக்கத் தெரிவித்த**
**வித்தகத் தேவர்க்கே சென்றூதாய்! கோத்தும்பீ!''** [11]

சித்தம் கலக்கப்பெற்று - குலப்பெருமை அழிக்கப்பெற்று பிறப்பென்னும் குற்றத்தில் அமுக்கப் பெற்று - இறப்பின் கொடுமையை உணரப் பெற்று - மனிதர் வாழும்போது இறைவனுடைய அருள் வேண்டும் என்று ஏக்கப் பெருமூச்சு விட்டு வாழ்வதை இந்தப் பாடல் தெளிவாக்குகிறது.

உயிர்கள் மிகவும் வாடி வதங்கி, நாடி - நகர்ந்து, பாடி - பயந்து வாழும்போது இறைவனிடம் ஏக்கத்துடன் ஆன்மாவில் கலத்தல் வேண்டும் என்ற சாயல் இந்தப் பாடலில் ஒலிப்பதைக் காணலாம்.

சமயக் குரவர்கள் ஞானம் பெற்று - அறியாமை அகற்றி - போகத்தை நீக்கி வாழ வேண்டும் என்று இறைவனிடம் ஓயாது ஏக்கங் கலந்த உணர்வுடன் போராடுகின்றார்கள் அல்லவா? உலகப் பற்றில் ஆழ்ந்து உண்மையை மறந்து முக்திக்காக எத்தனை நாட்களாக காத்திருக்கிறார்கள். திருவாசகம் அதைத்தான் பறைசாற்றுகிறது.

சமயச் சான்றோர்கள் கோயில்களில் தங்கி இறைமையை வணங்கி, தெய்வங்களைப் போற்றி - வாழ்ந்து வந்தார்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல தெரிகிறது.

## 5. அலையில் நீச்சல்

பல சமயக் குரவர்கள் வாழ்க்கையை மிகவும் வேகமாக வீசுகின்ற அலைக்கு உவமையாகக் கூறுவார்கள். சுப்பிரமணிய பாரதியார் ,

**''வேகத் திரைகளினால் வேதப்பொருள்பாடி''** [12]

என்று வேதங்களை அழியாமல் வந்து போகும் கடற்கரை மணல், நுரை, நீர் ஆகியவற்றிற்கு இணையாகக் கூறுகின்றார்.

நுரைப் பொங்கி வீசும்போது நீர்த்திவலைகள் மணல் மேட்டில் பாயும், அப்போது அங்கே சலசலவென ஓசையெழும். பின்வாங்கிச் செல்லும் நீர் கடலோடு சென்று கலந்து விடும். ஆகையால் நீர்த்திவலைகள் வாழ்க்கையைப் போன்றாகும். வந்து கரையில் மோதுதற்கும், மீண்டும் கரையில் வழிந்து சென்று கடலில் கலப்பதற்கும் இடையில் இருக்கும் நேரம் மிகக் குறுகி காணப்படுகிறதல்லவா? அந்த இடைவெளிதான் வாழ்க்கை எனப்படும். கண நேரத்தில் திவலைகள் மீண்டும் ஓடிச் சென்று கடலோடு கலப்பது போன்ற வாழ்வை நம்பி மனிதன் எப்படி வாழ்வது? அங்கே காணும் திரைகள் வெறும் திரைகள் அல்ல. வேகத்திரைகள் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

## 5. வளர்ச்சி

இறைவன் வாழ்க்கையில் பாதையை அமைத்துக் கொடுப்பது போல வேறு எவரும் செய்வதில்லை. நாள்தோறும் முன்னால் ஏற்பட்ட தொடர்புகளின் முறைமையால் செல்வம் கிடைக்கப் பெறுகிறது. அதனைப் 'பெற்றோம்' என்று நினையாது வறுமையில் வாடுகின்றவர்களுக்குக் கொடாமல் சிவபூஜை நாடாமல் கல்விமான்களுக்கு உதவாமல், கண் மறைந்து வாழ்கின்றனையே என்று வளர்ச்சியடையாத அறிவுக்கு கூறுவது போல் பாடலை அமைத்திருக்கின்றார் பட்டினத்தார். அதற்கு 'அருட்புலம்பல்' என்று இறைமை தன்மையை சேவித்துக் கூறுகின்றார்.

**''முற்றொடர்பிற் செய்த முறைமையால் வந்த செல்வம்
இற்றைநாட் பெற்றோமென் றெண்ணாது பாழ்மனமே
அற்றவர்க்கு மீயாம வரன்பூசை யோராமல்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறைந்து விட்டனையே''** [13]

இதில் பூசை செய்யாமல் வீணாகிப் போகின்ற காலத்தை எண்ணி சிவனுக்காக உணர்ச்சி முறுக்கேறி வளர்ச்சி நிலையை எப்போது காண்பது? என்பதைப் பட்டினத்தார் மனம்நொந்து கேட்கின்றார். இதில் உயிர்களின் இழியும் இறைவனின் வழியும் பட்டினத்தாரால் சிறப்புற சுட்டிக்காட்டப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | மாணிக்கவாசகர் | திருவாசகம், திருச்சாகம், 100 |
| 2. | மேலது | |
| 3. | நந்திக்கலம்பகம் | பா.100 |
| 4. | குலசேகர ஆழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம் பெருமாள் திருமொழி |
| 5. | வரதராசன் மு. | தமிழ் இலக்கிய வரலாறு, ப.134 |
| 6. | மாணிக்கவாசகர் | திருவாசகம், திருக்கோத்தும்பி, 7 |
| 7. | மேலது | திருச்சாகம், 5 |
| 8. | பாரதியார் | பாரதியார் கவிதைகள் ப.164 |
| 9. | இராமலிங்க அடிகள் | திருஅருட்பா |
| 10. | மேலது | |
| 11. | மாணிக்கவாசகர் | திருவாசகம், திருக்கோத்தும்பி, 6 |
| 12. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், குயில்பாட்டு, ப.605 |
| 13. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், அருட்புலம்பல், பா.5 |

# இயல் - 7

# வலிமை

மனிதனுக்கு இறைவழிபாட்டில் மனம் திரும்பும்போது வலிமை ஏற்படுகின்றது. மனத்தளவில் துறவு பூணாமல் வாழும்போது பல்வேறு வகையான பிரச்சினைகள் எழுகின்றன. அவற்றையெல்லாம் கடந்து முன்நோக்கிச் செல்லுதல் வேண்டும். பலவீனமான மனம் படைத்தவர்கள் வாழ்க்கையில் தடுமாறி திகைப்படைந்து தீராத நோய்களுக்கு ஆட்பட்டு இறந்து போவதைக் காணலாம்.

**''மெல்ல நினைக்கின் பிணிபல''** [1]

என்று நாலடியார் கூறுகிறது. ஆகையால், வலிமையுற்று வாழ்க்கையைச் செப்பனிட்டுக் கொண்டு முறையாக வகுத்துக் கொண்டு வாழ வேண்டும்.

பக்தி இயக்கத்தில் உணர்ச்சிகளுக்கு ஓர் இடம் அளிக்கப் போனால் அறத்தின் வழியே நிற்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுகின்றார். அன்பு, அறம் இரண்டும் வாழ்க்கையின் தன்மைக்கு சிறப்பாக அமைந்துள்ளது.

**''அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை''** [2]
**''அறத்திற்கு அன்பு சார்பென்ப''** [3]

ஆகையால், வள்ளுவர் கூற்றுப்படி நோக்கும்போது பக்தி வளர்ச்சி நோக்கிச் செல்வதைப் பார்க்கலாம்.

**''திண்ணிய நெஞ்சம் வேண்டும்**
**தெளிந்த நல் அறிவு வேண்டும்''** [4]

என்று சுப்பிரமணிய பாரதியார் பாடுகின்றார். வாழ்க்கைப் பாதையில் நடக்கும்போது எத்தனையோ வகையான இடர்பாடுகள் ஏற்படுவது உண்டு. அப்போது மிகக் கடுமையான சொற்களால் உள்ளத்தையும் உடலையும் சுட்டு, புண் ஏற்படுத்தி மக்களை அழிவுப்பாதையில் அழைத்துச் செல்வதும் உண்டு. கொடூரமான சொற்களைச் சொல்லாமல் மென்மையாக வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

இராமலிங்க அடிகள் மிக வன்மையான சொற்களைப் பயன்படுத்தி உள்ளத்தை நோக வைக்கக் கூடாது என்று விரிவாகக் கூறுகின்றார்.

''சீயென்றும் பேயென்றும்
நாயென்றும் பிறர்தமை
தீங்கு சொல்லாத தெளிவும்''[5]

என்று வாழ்க்கையின் அடிப்படையை அமைத்துத் தருகிறார்.

குழந்தையாக இருந்தாலும் வளர்ந்த மனிதனாக இருந்தாலும் மனவலிமைப் பெற்று கண்ணீரில் நிலைக்காமல் வாழுகின்ற போக்கு தெளிவாக உள்ளது.

எனவே, மனவலிமை பக்தி வழியில் நிலையாக உள்ளதை அறியலாம். அதனால், பக்திப் பாதையில் நிலையான ஓரிடத்தை மனிதன் பெற முடியும் என்பது தெளிவாகத் தென்படுகிறது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை உள்ளத்து உறுதிப் பாட்டினைக் கண்டு உள்ளத்தின் அடிப்படையிலேயே இறைவனை அடையலாம் என்று கூறுகின்றார்.

''உள்ளத்தில் உள்ளானடி அது
நீ உணரவேண்டுமடி
உள்ளத்தில் காண்பாயானால்
கோயில் உள்ளேயும் காண்பாயடி''

என்று கூறுவதைக் காணலாம். உள்ளத்து உணர்ச்சியில் குற்றங்கள் ஏதுமிருப்பினும் அவற்றை நீக்கி வாழ்வினைச் செப்பனிட்டுக் கொள்ளும் திறனை இங்குக் கூறுகிறார்.

### 1. திறமை

வாழ்வின் பெருமை பக்தர்களை ஒருமுகப்படுத்தும் நோக்கில் அமைந்துள்ளது. எத்தனையோ வகையான போராட்டங்களும், எத்தனையோ வகையான இடர்பாடுகளும், எத்தனையோ வகையான ஏமாற்றங்களும் மனித வாழ்வில் அலைமோதிக் கொண்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் எமன் உலகுக்கு அனுப்பி வைக்கத் தவறக்கூடாது.

பட்டினத்தார் பாடும்போது உயிர்களின் பலவீனத்தை உணர்ச்சியுடன் பாடுகின்றார்.

**''என் செயலால் ஆவது ஒன்றுமில்லை இனி தெய்வமே**
**உன் செயலே என்று உணரப் பெற்றேன் இந்த ஊண் எடுத்த**
**பின் செய்த தீவினை யாதொன்றும் இல்லை பிறப்பதற்கு**
**முன் செய்த தீவினையே இங்கு வந்து மூண்டதுவே''** [6]

இறைவனே நின்னை என் இறைவன் என்று இருந்த பின்னர் என்னுடைய செயலாக உண்டாவது ஒன்றுமில்லை. அனைத்தும் நின் செய்கையே என அறியப் பெற்றேன். இந்த தேகத்தை நான் அல்ல என உணர்ந்து தள்ளிய பின்னர் செய்யப்பட்ட கொடிய செயல் ஒன்றும் இல்லை. இத்தகைய ஞானம் உண்டாவதற்கு முன் அதாவது, தேகமே யான் என்று இருந்த காலத்தில் செய்த தீய செயலோ இவ்வாறு நேர்ந்தது என்று விளக்கமாகக் காணலாம்.

இந்தப் பாடலில் எல்லாம்வல்ல இறைவனுடைய செயல்பாடுகளைப் பற்றிக் கூறி தன்னுடைய இயலாமையை பெருந்தன்மையாக ஒப்புக் கொண்டு இறைவழிபாட்டில் மூழ்குவது என்பது சுட்டிக்காட்டப்படுகிறது.

மேலும் பட்டினத்தார் திறனில்லா வார்த்தையைப் பேசும் மனிதனுக்குப் புன்சொல்லாஞ் சாத்திரங்கள் சொல்லி சதுரிழந்து கெட்டேனே என்று கூறுகின்றார்.

**''வார்த்தைத் திறமில்லா மனிதருக்குப் புன்சொல்லாஞ்**
**சாத்திரங்கள் சொல்லி சதுரிழந்து கெட்டேனே''** [7]

இவ்வாறு திறமையைப் பட்டினத்தார் விளக்கியுள்ளார் என்பதைக் காணலாம். இதனால் ஆழ்ந்த பக்தி உண்மையினை உணருவதற்கு படிகளாக அமைந்துள்ளன. சமயக்குரவர்கள் அத்தகைய திறமையினைப் பெற்று வாழ்ந்த பாங்கு உள்ளது. இந்த உடலை வெறும் தோல், எலும்புகளால் ஆகிய ஒன்றாகும் என்றும், எரிந்து சாம்பலாகின்ற அன்னத்தால் வளருகின்ற உடல் நிலையானது அல்ல என்றும் பட்டினத்தார் பாடுகின்றார். அதை அறிகின்ற திறமை இறைவழிபாட்டில் இருக்கும் பக்தர்களுக்கு இன்றியமையாமல் இருக்க வேண்டும் என்பதை உணர முடிகிறது.

### 2. தழுவல்

பக்திப் பாடல்களில் தழுவல் என்பது இழிமையைக் குறிக்கிறது. விலைமாதரோடு சேர்ந்து 'செங்கண்' பெற்று செய்வதறியாது உழன்று வாடும் மக்கள் ஏராளமாக உள்ளனர். அழியும் அழகுக்காக எண்ணி ஏங்கி உண்மையையும் மறந்து உற்றார், உறவினர், சுற்றத்தார் ஆகியோருடைய நிழலில் நின்று வாழும் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?

மாணிக்கவாசகர் பாடும்போது விலைமாதரைத் தழுவுகின்ற காரணத்தினால் ஏற்பட்ட துன்பங்களையும், துயரங்களையும் சிறப்பாக விளக்குகிறார்.

**''மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்**
**வெண்நகைப் பண்ணமர் மென்மொழியீர்**
**என்னுடை யாரமு தெங்களப்பன்**
**எம்பெரு மானிம வான்மகட்குத்**
**தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்**
**தமையன்எம் மையன் தாள்கள்பாடிப்**
**பொன்னுடைப் பூண்முலை மங்கை நல்லீர்**
**பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே''** [8]

மின்போல் தோன்றும் நுண்ணிய இடையினையும், பவளம் போன்ற செவ்விய இதழ்களையுடைய வாயையும், வெண்நகை மென்மொழியீர் பொன்னும் மணியும் பெற்று வாழ்வது சுகமான வாழ்க்கை ஆகாது. இறைவனையே எண்ணி, இறைவனுடன் சேர்ந்து வாழும் வாழ்க்கையே சிறந்ததாகும்.

ஆண்டாள் இறைவனுடைய திருவடியைத் தழுவி வாழ்வதை பெரும்பேறாகக் கருதுகின்றார்.

'உண்டு உயிர்த்து' வாழும்போது பெண்மையின் சுகத்தில் ஆழ்ந்துவிடக்கூடாது. ஆண், பெண்ணைத் தழுவுவதும் பெண் ஆணைத் தழுவுவதும் உலகியல் போக்கு என்று கூறலாம். ஆனால், சமயக் குரவர்கள் பெண்மையை உயர்த்திப் பாடுவதைக் காணலாம். ஒரு சமயக் குரவர் 'காதலாகி' என்று பாடுகினறார். இங்குக் காதல் என்னும் சொல் இறைவனின்பால் தோன்றி அமையும் பக்தியைக் காட்ட நிற்கின்றது. ஒரு பக்தன் தன்னுடைய வாழ்நாளில் பெண்ணைக் காதலிப்பதும் பிறகு சாதலும் இயற்கையாகும். இதனையே சுப்பிரமணிய பாரதியார்,

**''காதல் காதல் காதல்**
**காதல் போயின்**
**சாதல் சாதல் சாதல்''**

என்று சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றார்.

### 3. சிதைத்தல்

பக்தித் துறையில் 'சிதைத்தல்' என்பது இயற்கையாக அமைக்கப்பட்டிருக்கின்றது. சுந்தரரை ஆட்கொள்ள மணமேடைக்கு வரும் சிவனார் ஓலையொன்றைக் காட்டி,

உன்னுடைய எல்லா குடும்பமும் எனக்கே அடிமை என்று கூறுகின்றார். சுந்தரர் சினந்து எழுகிறார். அந்த ஓலையை எடுத்து தீயிலே எரிக்கிறார். அப்போதும் 'சோமசுந்தரக் கடவுள்' விடவில்லை. மற்றொரு ஓலையை எடுத்துக்காட்டி வாதம் செய்கின்றார். அப்போது இறைவன் தன்னுடைய கோயிலை நோக்கிச் சென்று மறைந்து போகிறார். அன்றிலிருந்து சிவனாரின் வழிபாட்டில் இறங்கி வாழ்க்கையை நடத்தினாராம் சுந்தரர்.

இங்கு கூறப்படுகின்ற இந்தக் கருத்து கடவுள் உயிர்களின்மேல் காட்டும் கோபத்தையும் உயிர்கள் இறைவனின்மேல் காட்டும் கோபத்தையும் விளக்கிக் கூறுகிறது. வள்ளுவர் பொதுவாக ஒரு கருத்தைக் கூறுகின்றார்.

**''சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி''** [9]

என்னும் இக்குறட்பாவில் சினவாமல் வாழ வேண்டும் என்றும் சினம்தான் அதுவே ஆட்கொல்லியாகவும் மாறும் என்றும் கூறுகின்றார்.

ஆகையால், இறைமையை வழிபாடு செய்யும் போதெல்லாம் அலையும் புலன்களை அடக்கி ஆள வேண்டும். வள்ளுவர் கூறும்போது,

**''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு உளார்கோமா**
**இந்திரனே சாலும் கரி''** [10]

இந்திரப் பதவியை அடைவதற்கு தேவர்கள் வேள்வியில் இறங்குவார்கள். அசுரர்கள் அவர்களுக்கு இன்னல் விளைவிப்பார்கள். ஆகையால், இந்திரப் பதவி என்பது கிடைத்தற்கரிய ஒரு பதவியாகும். சினந்து எழுந்தால் சீர்கெட்டுப் போக வேண்டிய நிலை ஏற்படும். எனவே, புலனடக்கி சினவாமல் இறைமையை நோக்கி வழிபாடு செய்வது சாலச்சிறந்ததாகும்.

### 4. திரிதல்

சமயத்துறையில் இறைமை வழிபாட்டில் நிற்பதற்காக கோயில் கோயிலாக வழிபட்டு சமய வாழ்க்கையை புனிதமான வாழ்க்கையாக மாற்றியச் சீலர்கள் பலருண்டு. இறைவன் அவர்களைச் சோதிப்பதும், பக்தன் இறைவனுக்கு வழிபாட்டுத் தன்மையினைச் செய்தலும் சமயத் துறையில் சாதாரண ஒரு காட்சியாகும். ஐந்தெழுத்து மந்திரமாகிய 'நமசிவாய' என்பதை நாவினால் உச்சரித்து வாழ்வின் பல இடுக்கண்களைச் சரிசெய்து வாழ வேண்டும். பட்டினத்தார் ஊரெல்லாம் திரிந்து திரிந்து

இறுதியில் சிவலிங்கமாகி சமாதியடைகிறார். அதே போல்? ஞானசம்பந்தர் மிக இளம் வயதிலேயே ஊர் ஊராகத் திரிந்து சைவ சமயத்தைப் போற்றி வளர்த்து வந்தார். திருநாவுக்கரசரும் அதுபோலவே திரிந்து இறைமை வழிபாட்டுக்கு வழிகோலினார். ஒரு முறை திருஞானசம்பந்தர் பல்லக்கில் போய்க்கொண்டிருந்த போது சம்பந்தருக்குத் தெரியாமல் பல்லக்கைச் சுமப்பவர்களுக்குச் சரியாக நின்று சுமந்துச் சென்றார். சிறிது காலம் கழிந்தது. சம்பந்தருக்கு திருநாவுக்கரசர் சுமப்பது தெரிகிறது. அப்போது 'அப்பரே' என்று விளித்துக் கூறினார். அன்றிலிருந்து திருநாவுக்கரசருக்கு அப்பர் என்ற பெயர் நிலையாக ஆயிற்று. இந்தப் புராணக்கதை நாவில் உரைக்கும்தோறும் உரைக்கும்தோறும் பேரின்பத்தை ஊட்டுவதாய் உள்ளது.

மாணிக்கவாசகர் பாடும்போது இறைவன் தன்னுடைய உயிர்களைக் காப்பதற்காக 'திரிபுரம்' என்னும் இடத்தில் ஊரைக் கொளுத்தினார் என்று கூறுகின்றார்.

''தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யான் உனைத்தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே'' [11]

இந்தப் பாடல் வாயிலாக சமயத்துறையில் ஒரு புதிய கருத்து வெளிப்பட்டிருப்பதைக் காணலாம். உலகியல் போக்கில் உயிர்கள் எல்லாம்; எல்லாம் வல்ல கடவுளை நோக்கி அயராது தவம் இயற்றிய போக்கைக் காண முடிகிறது. ஆனால், சிற்சில இடங்களில் இறைவனே உயிர்களை நோக்கி வந்து திரிந்து துன்பங்களைப் போக்கி ஆதரவு அளித்ததாக செய்திகள் உண்டு.

அப்பர் ஊர் ஊராக திரிந்துக் கொண்டிருந்த காலத்தில் ஒரு ஊரில் 'அப்பூதி அடிகள்' என்பார் திருநாவுக்கரசருக்குத் தெரியாமலே அவர் பெயரில் சத்திரம் கட்டுதல், அன்னதானம் செய்தல், தண்ணீர்ப் பந்தல் வைத்தல், அறிவுரை கூறுதல், அன்பு காட்டுதல், இன்மை நீக்குதல் என்பவைப் போன்ற செயல்களைச் செய்து வந்தார். அப்போது யார் வாயிலாகவோ அப்பூதி அடிகள் குறித்து திருநாவுக்கரசர் கேள்விப்படுகின்றார். அதைக் கேள்விப்பட்டவுடன் திருநாவுக்கரசர் ஓடோடியும் வந்து அப்பூதியடிகளை ஆட்கொள்ளுகிறார். உள்ளார்ந்த நெறியோடு உண்மையான பக்தியோடு சமயத்துறையைச் சார்ந்த பக்தர்கள் செய்யும் செயல்கள் விந்தையாக உள்ளது.

இந்து சமயத்தில் இறை வழிபாடு என்பது திரிதலில் அமைந்துள்ளது. ஒரு முறை மாங்கனி ஒன்றை சிவபெருமான் கரத்தில் வைத்திருந்தார். அப்போது விநாயகரும், முருகனும் அங்கு வந்து சேர்ந்தார்கள். எனக்குத்தான் மாங்கனி வேண்டும் என்று இருவரும் அடம்பிடித்தார்கள். அப்போது சிவனார் 'யார் இந்த உலகத்தைச் சுற்றிவிட்டு முதலில் வருகிறார்களோ அவர்களுக்குக் கனியினைக் கொடுப்பதாக கூறுகின்றார். உடனே முருகன் தன்னுடைய மயில் வாகனத்தில் ஏறி ஊர் உலகம் யாவையும் திரிந்து வந்து சேர முடிவெடுத்துச் சென்றார். இக்கதையில் முருகபிரானுடைய தூரத்தைக் கடக்கும் அழகிய பறவையான மயிலின் உண்மையும் தெளிவாக உள்ளது.

### 5. ஆணவம்

சமய இலக்கியத்தில் மனிதப் பிறவி - மானிடப் பிறவி இறைவனை அடைய பாடுபடும்போது ஆணவம் மிக்க செயல்களிலே இறங்குவது இயல்பு. சிற்றின்பத்தை நுகரும் உயிர்கள் அந்த இன்ப வாழ்வினுடைய நெருப்பில் கரைந்து போகிறார்கள். ஆணவம் மிக்கு அன்பினை மறந்து, பண்பினை மறந்து, நாகரிகத்தை இழித்துக் கூறி ஆணவம் கொண்ட போக்கு சமய வாலாற்றில் உள்ளது. சுப்பிரமணிய பாரதியார் பாஞ்சாலி சபதத்தில் 'நெட்டை மரங்களென நின்றிருந்தார்' என்று கூறுகின்றார். திரௌபதியைப் பார்த்து என் தொடையில் வந்து உட்கார் என்று கூறுமளவிற்கு ஆணவப் பித்து ஏறிய துரியோதனனைக் காண முடிகின்றது. அந்த ஆணவத்திற்கு பதில் சொல்வது போல் கிருஷ்ணர் 'மானபங்கம் அடைவதற்கிருந்த திரௌபதியை எவ்வளவுதான் சேலையைப் பற்றி இழுத்தாலும் தொடர்ந்து வந்துக் கொண்டிருந்த நிலையைக் காட்டி ஆணவத்தின் செருக்கினைப் புலப்படுத்துகின்றார்கள் சான்றோர். அன்றலர்ந்த மலர்போல் இறையடியார்களின் வாழ்க்கை மணத்தோடு திகழ்கின்றது. அறுபத்துமூன்று நாயன்மார்களும், பன்னிரண்டு ஆழ்வார்களும் சேர்ந்து முறையே சைவம் - வைணவம் ஆகிய புதிய சமயங்களை நிறுவியுள்ள போக்கு வெளிப்பட்டு நிற்கிறது.

பட்டினத்தார் ஆணவப்படுவோர்க்கு வழிகாட்டி அழைத்துச் செல்லுமாற்றைக் காணலாம். 'இந்த உலகப் பற்றில் இருந்து நான் விடுபட்டு செயலாற்றுவேன்' என்று இறைவழிபாட்டினை மறந்து கூறுவது ஆணவத்தைக் காட்டவில்லையா? அந்த வகையில் இறுமாந்து வாழ்வோர்க்கு சாட்டை அடி கொடுக்கிறார் பட்டினத்தார்.

**''விடப்படுமோ? இப்பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனந்**
**திடப்படு மோ? நின் அருளின்றி யேதின மேயலைக்**
**கடப்படு மோ? அற்பர் வாயிலிற் சென்றுகண் ணீர்ததும்பி**
**படப்படு மோ? சொக்க நாதா! சவுந்தர பாண்டியனே''** [12]

உலகம் பெரியது, அதிலிருந்து விடுபட வேண்டின் உயிர்களினால் இயலாது. அதற்கு திண்மை பொதிந்த நெஞ்சம் வேண்டும். அற்பர்களின் வாயில் அகப்பட்டுக் கண்ணீர் ததும்பிய போதும் ஆணவத்தோடு வாழ்வதற்கு மனிதர்கள் எப்படி அலைகிறார்கள் என்ற பொருளில் பாடி இருக்கிறார். இழிவுபடுத்தப்படும் உடல் இது. 'ஒன்பது வாசல் உடல் இது' என்று சமயக் குரவர் பலர் பாடி வைத்திருப்பது கண்கூடாக அமைந்துள்ளது. அந்தக் குறுகிய கால வாழ்வை நம்பி வாழும்போது எத்தனை வகையான சிற்றின்பக் கனவுகள்? எத்தனை வகையான உரசல்கள்? எத்தனை வகையான பாழ்பட்டுப் போன சிந்தனைகள்? ஆடிமுடிந்து அடங்கும்போது கூட - பிணமாகி ஊர்ந்து செல்லும் போது கூட - ஆணவ மலம் மனிதனை விடுவதில்லை. முன்வந்து நின்று தன்னுடைய போராற்றும் தன்மையைக் காட்டி அமைவதைக் காணலாம். ஆகையால் வாழ்வின் போக்குகளில் கசடுகள் தோன்றி நறுமணத்தை வீழ்த்திவிடும்.

## 6. அழிதல்

கோடிக்கணக்கான உயிர்கள் பிறப்பதும் இறப்பதும் மிகச் சாதாரணமான ஒரு செயல் ஆகும். எங்கு 'பிறப்பு' உள்ளதோ அங்கு 'இறப்பு' இருக்கும். எங்கு 'ஆக்கம்' இருக்கிறதோ அங்கு 'அழிவு' இருக்கும். எங்கு 'நறுமணம்' இருக்கிறதோ அங்கு 'துர்நாற்றம்' இருக்கும். எங்கு 'நம்பிக்கை' இருக்கிறதோ அங்கு 'ஏமாற்றம்' தோன்றி இருக்கும். ஆகையால், வாழ்வில் தென்படும் இந்தச் செயல்பாடுகள் ஒரு வட்ட சுழற்சியில் சிக்கிச் சென்று கொண்டேயிருப்பதைக் காணலாம்.

அழியும் இந்த உடல் தனித்துப் போகும்போது பறவையைப் போல பறந்து செல்லும் இயல்பை உடையது ஆகும்.

**''குடம்பை தனித்தொழிய புள்பறந் தற்றே**
**உடம்பொடு உயிரிடை நட்பு''** [13]

என்ற திருக்குறள் பறவைகள் காலையில் எழும்போது கிறீச்சிட்டுக் கத்தி கூட்டைவிட்டு வெளியேறிப் போய்விடும். அதுபோல் உயிர்கள் இரவில் படுத்துத் தூங்கச் செல்லும்போது மூச்சடங்கி பிணமாகிப் போகிறது அல்லவா? இதைத்தான் வள்ளுவர் குறளில் கூறுகின்றார்.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | நக்கீரர் | நாலடியார், பா. |
| 2. | திருவள்ளுவர் | திருக்குறள், வாழ்க்கைத் துணைநலம், ப.42 |
| 3. | மேலது | அன்புடைமை, ப.59 |
| 4. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப |
| 5. | இராமலிங்க அடிகள் | திருஅருட்பா, கந்தக்கோட்டம் |
| 6. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், திருக்காளத்தி, பா.22 |
| 7. | மேலது | பட்டினத்தார் பாடல்கள், இறந்த காலத்து இறங்கல், பா.2 |
| 8. | மாணிக்கவாசகர் | திருவாசகம், திருபொற்சுண்ணம், பா. |
| 9. | திருவள்ளுவர் | திருக்குறள், வெகுளாமை, ப.219 |
| 10. | மேலது | திருக்குறள், நீத்தார்பெருமை, ப.24 |
| 11. | மாணிக்கவாசகர் | திருவாசகம், பிடித்தப்பத்து, பா.10 |
| 12. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், 1, ப.183 |
| 13. | திருவள்ளுவர் | திருக்குறள், நிலையாமை, ப.247 |

# இயல் - 8

# தேடல்

ஒரு பூனை வாழ்வின் உண்மையை அறிய வேண்டுமென்றும் - வாழ்வின் இன்னொரு பக்கமான சாதலைப் பற்றி அறிய வேண்டும் என்று எண்ணித் தீர்த்த யாத்திரைக் கிளம்பியது. காசிக்குச் சென்றது. அங்கு ஓர் துறவியைச் சந்தித்தது. கங்கைக் கரையில் உட்கார்ந்து தவம் செய்து கொண்டிருந்தார் அவர். அவருக்கு அருகில் சென்ற பூனை 'மியாவ்' என்று ஓசை எழுப்பி அவருடைய மோனத்தைக் கலைத்தது.

''துறவியாரே ! எனக்குப் பல நாட்களாக ஒரு சந்தேகம்'' என்று பூனை பேசத் தொடங்கியது.

''என்ன பூனையே! என்னதான் வேண்டும் உனக்கு? சொல்லேன்'' துறவி கேட்டார்.

''மனித வாழ்வு எப்படிப்பட்டது?''

''இது சாதலில் சென்று முடிவடையும் ஒன்று''

அப்போது 'பிணம்' ஒன்று கங்கை நதியின் ஓரமாய் ஒதுங்கியதை இருவரும் பார்த்தார்கள்.

''பூனையே அதோ பார். மனிதனின் உடல் கங்கையில் அடித்துச் செல்கிறது. கீதையில் கூட உடல் அழியக் கூடியது. மண்ணுள் மறைந்து போவது'' என்றே கூறப்பட்டுள்ளது.

''மிக்க நன்றி துறவியாரே''

பூனைக்கு ஒரு கண நேரத்தில் உடலின் நிரந்தரமற்ற போக்கு புரிந்து விட்டது. இந்து மதத்தில் இருக்கும் இந்தத் துறவி உடலில் அடுத்த நிலையான மண்ணைப் பற்றி புரிந்து கொண்டிருக்கிறார் என்று நினைத்துக் கொண்டு காசியில் வேறொரு இடத்தில் வாழ்ந்து கொண்டிருந்த முகமதிய மௌல்வி ஒருவரைச் சந்திக்கலாம் என்று எண்ணிப் போய்க்கொண்டே இருந்தது. அப்போது இந்த முகலாய மௌல்வி வழியில் வந்து கொண்டிருந்ததைப் பார்த்து,

**''சலாம்; மௌல்வி'' பூனை கூறியது**

**''வா பூனையே; எங்கே இந்தப் பக்கம்'' மௌல்வி வினவினார்.**

**''ஒன்றுமில்லை'**

**''என்ன தயக்கம்?''**

''ஒன்றுமில்லை. இந்த மனித வாழ்வைப் பற்றி நினைத்துக் கொண்டேன். உங்களுடைய மதம் வாழ்க்கைப் பற்றி என்ன கூறுகிறது சொல்வீர்களா?''

''இந்த உடல் மண்ணாகி எலும்புகள் தோன்றும்''

அப்போது அங்கே சற்று தூரத்தில் ஒரு 'பிணம்' பலர் சூழ்ந்து வர வந்து கொண்டிருந்தது. அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த அந்த முகம்மதிய ஞானி,

''என்ன பூனையாரே! பிணத்தை நோக்கி உன் விழிகள் திரும்புகின்றன?'' என்று கேட்டார்.

''இந்தப் பிணம் பற்றி தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்; தங்களுடைய முகம்மதிய மதம் என்ன சொல்கிறது'' என்று கேட்டது.

''நல்ல கேள்வி கேட்டாய். இந்த உடம்பு அழிந்து போகக் கூடிய ஒன்று. மெக்காவுக்கும், மெதினாவுக்கும் இடையே கல்லால் அடித்துத் துரத்தப்பட்ட முகமது நபி அவர்களே சாம்பலாகிப் போனார். இந்த உடல் அழியக்கூடியதுதான்'' என்று கூறினார்.

அது கேட்ட பூனை மிகவும் தெளிவு பெற்று அங்கிருந்து கிளம்பிச் சென்றது.

அடுத்து கிறித்துவ மதம் சாதலைப் பற்றி என்ன நினைக்கிறது என்று அறிய மாதா கோயிலை நோக்கிச் சென்றது. அங்கே ஒரு பாதிரியார் 'ஜெபம்' செய்து கொண்டிருந்தார்.

மெல்ல 'மியாவ்' என்று கத்தியது அந்தப் பூனை. கண் திறந்துப் பார்த்த பாதிரியார்

''என்ன பூனையே! அருகில் வந்து நின்று கத்துகிறாய்? என்ன வேண்டும் உனக்கு?'' என்று கேட்டார்.

**''வணக்கம் பாதிரியாரே'' பூனை கூறியது.**

''இது என்ன வேடிக்கை. வணக்கம் பலமாகப் போடுகிறாயே''

''ஒன்றுமில்லை பாதிரியாரே! சாதலைப் பற்றி உங்களுடைய கருத்தென்ன? வாழ்வினைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''இந்த மனித வாழ்க்கை அழியக் கூடியது. 'பாவத்தின் சம்பளம் மரணம்' என்று கிறித்துவ சமயம் கூறுகிறது.

பாதிரியார் சிறிது நிறுத்தினார். அப்போது சற்று தூரத்தில் 'சாவுப்பறை' அறையும் ஓசை அந்தப் பூனையின் காதில் விழுந்தது.

''பாதிரியாரே அங்கே பாருங்களேன்'' பூனை கூறியது.

''எதுவும் தெரியவில்லையே'' பாதிரியார் கூறினார்.

''மன்னிக்க வேண்டும். ஒரு பிணம் சென்று கொண்டிருக்கிறது''

''அதனால் என்ன?''

''உங்கள் சமயத்தில் அதைப் பற்றி ஏதாவது கூறப்பட்டுள்ளதா?''

''ஏன் இல்லை?''

''இருந்தால் சற்றே விளக்கிக் கூற வேண்டும்.''

''பாவத்தின் சம்பளம் மாணம் என்று விவிலியம் கூறுகிறது.''

''அப்படியா!''

''ஆமாம். மனிதன் பிறக்கிறான். வாழ்கிறான். சாகிறான். வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே அவன் செய்யும் பாவகரமான செயல்கள் எத்தனை? குறுகிய வாழ்வில் குமைந்து போன நெஞ்சோடு ஒழுக்கமின்று வாழ்ந்து மடியும் மனிதர்கள் எத்தனை பேர்? சாவுதான் - நிம்மதியற்ற - நிரந்தரமற்றது - வாழ்வுதான் உண்மை'' என்று பாதிரியார் கூறி முடித்தார்.

பூனைக்கு இதைக் கேட்டபோது வியப்பாய் இருந்தது.

ஆகையால் 'எல்லாச் சமயங்களும் மனித வாழ்வின் - சிற்றின்ப வாழ்வின் போக்கை நிலையற்ற ஒன்று' என்றே கூறியுள்ளதைக் காணலாம். அதனால்தான் பட்டினத்தாரும் அழியும் இந்த உடலை - இழிந்த உடலைப் பற்றி 'அழியக்கூடியது' என்று கூறி இருக்கிறார்.

வீழ்ந்து போகும் இந்த உடலில் 'தாய்மை'த் தனிச்சிறப்பாக விளங்கிய போதிலும் இறுதியில் சாம்பலாகி மண்ணோடு மண்ணாய் ஆகிறது என்ற யாக்கை நிலையாமையைத் தேடிச் சென்று உய்த்துணர்ந்து கூறிய போக்கு காண்பதற்குரியதாகும். எல்லா உயிர்களும் அழிவின் மடியில் 'சிறுகுழந்தைபோல்' ஆவதைச் சமயக் குரவர்கள் காட்டியுள்ளதை அறியலாம்.

**வீற்றிருந்தா ளன்னை; வீதிதனில் இருந்தாள்;**
**நேற்று இருந்தாள் இன்று வெந்து நீரானாள் - பாற்றெளிக்க**
**எல்லிரும் வாருங்கள்; ஏதென்(று) இரங்காமல்**
**எல்லாம் சிவமயமே! யாம்! [1]**

''தாய்மை அன்பு தெய்வீகமானது. ஆகையால் சுகமாக இருந்தாள். வீதியிலும் உலாவி இருந்தாள். நேற்று உயிரோடு இருந்தாள்; இத்தினம் வேவுற்றுச் சாம்பலாயினாள்; இதைப் பற்றி அதிகமாக எண்ணாமல் பால் தெளிக்க எல்லோரும் வாருங்கள்'' என்று அறைகூவி அழைக்கும் திறம் போற்றுதற்குரியதாக உள்ளது.

## 1. குழந்தமை

'உலகின்கண் தோற்றுவித்துச் சீராட்டிப் பாராட்டி வளர்ப்பவள் அன்னை; துன்பங்கள் பல வரினும் - துக்கங்கள் பொங்கி வரினும் - தாங்கி அமைதியாய் வளர்ப்பவள் அன்னை' என்று போற்றும் பட்டினத்தார், அத்தகைய தெய்வமாகிய அன்னைக்கே தீமூட்ட வேண்டியுள்ளதே' என்ற நிலையை விளக்கியுள்ள போக்கு சிந்தனைக்குரியதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

**வட்டிலிலும், தொட்டிலிலும், மார்மேலும் தோள்மேலும்**
**கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்**
**சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ**
**விறகிலிட்டுத் தீமூட்டுவேன் [2]**

தேடிச் சென்று இறைமைத் தன்மையை வளர்க்கும் போக்குப் பட்டினத்தடிகளின் பாடலில் காணப்படுகிறது. 'துணியால் கட்டப்பட்டுள்ள ஏணையிலும், தனது மார்பகத்தின் மீதும், புயத்தின் மேலும், மஞ்சத்திலும் இருத்தி, கக்கத்தில் வைத்துக் காப்பாற்றிச் சிறப்பனைத்தும் செய்யும் அன்னைக்குத் தீமூட்டுவேனோ?'' என்று நொந்து பாடியுள்ளத் தன்மையைக் காணும்போது 'மரணம் நிலையானது - வாழ்வு மயக்கமுடையது' என்று ஆழ்பொருள் தொக்கி நிற்பதைக் காணலாம்.

அன்பால் வாழ்க்கையைக் காட்டி மிகக் குறுகியதாக இருக்கும் வாழ்வின் ஓட்டத்தில் கலந்து வதைப்பட்டு உண்மையை அறிய வேண்டிய கடமை யாவருக்கும் உள்ளது.

## 2. போர் ஆற்றுதல்

இந்த உலக வாழ்வில் 'மெத்தன இருக்கும் போக்கு' காணப்படுவதை அறியலாம். மனித வாழ்வு மிகக் குறுகியது என்றும், அந்தக் குறுகிய கால எல்லைக்குள் கடவுள் அருளைப் பெற வேண்டும் என்றும், அதிலும் வேகமாகத் திருமால் உருவில் இருக்கும் 'காக்கும் இறைவன்' தன்மையைப் புரிந்து கொண்டு தவமியற்றி உய்ய வேண்டுமென்றும் நம்மாழ்வார் பாடியுள்ள கருத்து உயர்ந்தது ஆகும். உருவப் பொலிவு தோன்றும் தன்மை இங்குக் காணப்படுவதை அறியலாம்.

கண்கள் சிவந்து பெரியவாய்
வாயும் சிவந்து கனிந்துள்ளே
வெண்பல் இலகு சுடர் இலகு
விலகு மகா குண்டலத்தின்
கொண்டல் வண்ணன் சுடர்முடியன்
நான்குதோளன் குளிர்ச்சார்ங்கன்
ஒண்சங் கதைவாள் அழியான்
ஒருவன் அடியேன் உள்ளேனே![3]

'சிவந்த கண்களுக்கு உரியவன்; அதே போல் சிவந்த இதழ்களைப் பெற்றவன்; செவியில் மகரக் குண்டலங்களை ஏந்தியவன்; நான்கு தோள்களுக்கு உரியவன்; ஆழ்கடலில் பள்ளி கொள்பவன்' என்று பாராட்டி விட்டு, அத்தகைய திருமாலை எப்போதும் நெஞ்சின் ஆழ்மையில் வைத்து வணங்க வேண்டுமென்றும் ஆழ்வார்கள் விரித்துப் பாடியுள்ள நெறி காண்பதற்குரியது ஆகும்.

நம்மாழ்வார் போல் சுப்பிரமணிய பாரதியாரும் திருமால் காட்சி அளிக்கும் தன்மையைப் பாடியுள்ளார்.

'ஒளிபடைத்த கண்ணினாய் வா! வா! வா![4]

என்ற பாடலில் இறைவனை வழிபாடு செய்யும் போது தோன்றி அமையும் 'ஒளி'யினைக் கண்டு காட்சியை 'வா வா' என்று முழங்குவதைக் காணலாம். ஆன்ம ஒளி பொங்கும் போது அந்த இடத்தில் தேங்கி இருக்கும் கசடுகள் எல்லாம் அடித்துக் கொண்டு ஓடிப் போய்விடும். அதைத்தான் இந்தப் பாடல் குறிக்கிறது. இதுவே வாழ்வை நோக்கி உயிர்கள் செய்யும் போர் ஆகும்.

## 3. வினை

சிற்றுயிர்கள் வாழும் தன்மையை நன்கு அறிவது இல்லை. எத்தனையோ 'பொல்லாப்பு'களுக்கு இடையே ஊர்ந்து செல்ல வேண்டிய நிலையில் இருப்பதாகும். எறும்புகள் வரிசையாய் ஊர்ந்துச் செல்லும் காட்சி போல 'ஜீவாத்துமாக்கள்' வினையை நோக்கி விரைந்து செல்கின்றன. மனிதனுடைய முழுமையடையாத - மூளியாகிப் போன - வாழ்வில், மீண்டும் பூரணத்துவத்துக்கு அழைத்துச் செல்லும் தன்மையைப் புரிந்து கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டு அமைந்துள்ளதைக் காணலாம்.

'பட்டினத்தார் மனிதர்கள் அடையும் 'வினை'ப்பழி பற்றி கூறியுள்ளமை நோக்குதற்குரியதாக உள்ளது.

மாதா உடல்சலித்தாள்; வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவும் கைசலித்து விட்டானே - நாதா
இருப்பையூர் வாழ்சிவனே! இன்னுமோர் என்னை
கருப்பையூர் வாராமல் கா! [5]

''பெற்றெடுத்த அன்னை உடல் நோயுற்றாள்; வினைகள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்து வாட்டுகின்றன. பிரம்மனும் கைதளர்ந்து விட்டான்; என்னைக் கருப்பையில் இருந்து காத்தருள்'' என்று வேண்டிக் கொள்ளும் பாங்கு வியப்பாய் உள்ளது.

முழுமுதலாய் விளங்குகின்ற இறைவனை நோக்கி வழிபாடு செய்தால் முன்வினை எல்லாம் தொலைந்து போகும். தன்னை உணர்ந்து வாழ்க்கையைச் செப்பனிட்டுக் கொள்ள வேண்டும் என்பது போன்ற கருத்துக்கள் சிந்திப்பதற்கு உரியனவாக இருப்பதைக் காணலாம்.

**முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தான்டி**
**தன்னை அறியவே தானொருத்தி ஆனேன்டி** [6]

உலக வழக்கில் சான்றோர்கள் 'வினை' பற்றி விளக்கிக் கூறியுள்ளதைப் பகுத்தறியலாம்

**தினை விதைத்தவன் தினை அறுப்பான்**
**வினை விதைத்தவன் வினை அறுப்பான்** [7]

ஆகையால், வினையைக் கடந்து சென்று வாழ்வை செப்பனிட்டுப் புதுமைக்கு விடை அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளதை அறியலாம்.

## 4. வேகம்

மனித வாழ்வு இருபக்கமுடையது ஆகும். ஒரு பக்கம் வேகம்; மற்றொரு பக்கம் நிதானம் (மெதுவாய் இருத்தல்). இந்த இரண்டு பக்கங்களும் சேர்ந்து இணையும் போது இனிமையான அநுபவங்கள் தோன்றுகின்றன. இறைவனை வழிபாடு செய்யும்போது மிகுந்த பொறுமை வேண்டும். அடர்ந்த காட்டில் தவத்தில் உட்கார்ந்து நீண்ட நாட்கள் இறைவனின் நினைவிலேயே காலத்தை நகர்த்த வேண்டும். அதற்குக் கடவுளின் திருஉருவை அப்போதைக்கப்போது எண்ணி பக்தி வயப்பட்டு வாழ்வின் படிகளில் ஏறிச் செல்ல வேண்டும். சோர்வு நேரும் போதெல்லாம் உருவ வழிபாட்டில் இறங்கி உண்மையான உணர்ச்சியை வேகமாக இயக்குதல் வேண்டும்.

சைவர்கள் சிவனுடைய உருவத்தை வழிபாடு செய்வார்கள். வைணவர்கள் திருமாலை வணங்கி வாழ்வார்கள். இந்த இருபெரும் கடவுளர்களும் மிகுந்த அழகு வாய்ந்தவர்களாக அடியார்களால் சிறப்பிக்கப்பட்டிருப்பது நோக்குதற்குரியது.

கருவூர் தேவரின் பாடல்களில் "இலக்கிய நயம், கவிதைச் சிறப்பு, ஓசை, நயம், பொருள் ஆழம் சிறப்புமிகு சொற்றொடர் ஆட்சி"[8] என்று எடுத்துக் கொண்டால் கருவூர்த்தேவனின் பக்திப் பெருக்கு நன்கு வெளிப்பட்டு அமைவதைப் பார்க்கலாம். சிவபெருமானைப் பற்றிய பாடல் நெஞ்சை உருக்குவதாய் அமைந்துள்ளது.

**நீலமே கண்டம்; பவளமே திருவாய்: நித்திலம் நிறைந்திலங்கினிவே**
**போலுமே முறுவல்; நிறைய ஆனந்தம் பொழியுமே திருமுகம்; ஒருவர்**
**கோலமே அச்சோ அழகிதே என்று குழைவரே கண்டவர் உண்ட**
**தாலமே; ஆகில் அவர் இடம் களந்தை அணித் திகழ் ஆதித் தேர்ச்சாமே**

இங்குக் குறிக்கப்பட்ட தெய்வ வழிபாடு பற்றி வேகமாக உணர்வுகள் எழுவதைக் காணலாம்.

இறைமைத் தத்துவம் பல நேரங்களில் உணர்வுப் பெட்டகத்தைத் தூண்டி விடுகிறது. ஆகையால் 'குன்றுஇழி அருவியாக' உள்ளத்தில் ஆழப்பதிந்து விடுவது வியப்பே !

*சேலேந்து வெல்கொடி யானே! என்னும்*
*சிவனே சேமத் துணையே! என்னும்*
*மாலெந்து சாரல் மகேந்தரத்தின்*
*வளர்நாயகா! இங்கே வாயராய்* [10]

''வெல்லுகின்ற கொடிக்கு உரியவன்; வண்டிக்குச் சேம அச்சு போன்றவன்; வளர்ந்தோங்கும் நாயகன்;' என்ற பொருள் அமைந்த பாடலைக் காணலாம்.

வைணவர்கள் இதுபோல திருமாலை வழிபட்ட போக்கு உள்ளது. தொண்டரடிப்பொடிஆழ்வார் சீவான்மாக்கள், பரமாத்மாவின் திருவடிகளில் முக்தி அடைவதையும், சிற்றின்பத்தில் மூழ்கி அழுந்துமாற்றை எண்ணிப் பாடுவதையும் காணலாம்.

*சூதனாயக் கள்வ னாகித்*
*தூர்த்தரோ டிசைந்த காலம்*
*மாதரார் கயல்கண் என்னும்*
*வலையில் பட்டழுந்து வேனைப்*
*போதரே என்று சொல்லிப்*
*புந்தியிற் புகுந்து தன்பால்*
*ஆதரம் பெருக வைத்த*
*அழகனூர் அரங்கம் அன்றோ* [11]

''கயல் போன்ற விழிகளைப் பெற்ற பெண்டிரின் அழகில் மயங்கி அழியும் வாழ்வும் ஒரு வாழ்வா'' என்ற பொருளில் இக்கருத்து அமைந்திருப்பதைக் காணலாம். இறைவனின் மிகுந்த அழகு வாய்ந்த தோற்றத்தைப் பாடும்போது,

*''பச்சைமா மலைபோல மேனி*
*பவளவாய்க் கமலச் செங்கண்*
*அச்சுதா அமரர் ஏறே!*
*ஆயர்தம் கொழுந்தே வாழி;* [12]

உருவப் பொலிவில் கண்டு வேகமாக இறைவனை வழிபட்டு உய்ய வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு உண்டா?

திருஞானசம்பந்தர் உயிர்களின் தன்மையைக் குறிப்பிட்டுக் காட்டும்போது வினையைப் பற்றி விளக்கிக் கூறுகின்றார். திரிபுரத் தகனம் செய்தவர் சிவபெருமான். ஆகையால், பகைவரை வென்று வாகை சூடியவர் ஆவர் என்பது நோக்குதற்குரியது. வினைகள் மனிதர்க்கும் பிறவி நோயினை அளிக்க வல்லது' என்ற சமயக் கருத்தைக் கூறப் புகும் சம்பந்தர் திருவடி அடைய

நினைப்பார்க்கு அது ஆகி வருவது இல்லை' என்ற முறையில் பாடல் பாடியுள்ளார்; தொடர்ந்து கூறும்போது, 'சிவனார் பாம்பினை வைத்துக் கொண்டிருப்பதைச் சுட்டிக்காட்டி தீமையைப் பிறவி நோயினை - வினை வழி வாழ்வைப் பற்றி சில வரிகளில் ஆழ்மையாய் - உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாகக் கூறியுள்ளமை நோக்குதற்குரியது.

**''அரவம் பூண்பாணி யும் சிலம் பார்க்க அகந்தொறும்**
**இரவி னல்லபலி பேணுவர் நாணிலர் நாமமே**
**பரவிவார் வினைத் தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்**
**மருவி யேத்த மாதொரு நின்றவெம் மைந்தரே''** [13]

சான்றோர்கள் - சமயக் குரவர்கள் - மனித வாழ்வின் போக்கை நிலைநாட்டி உள்ளனர்; உயிரினங்கள் முன்னர் அடாத வினைகளைச் செய்வோர் பின்னர் பெருந்துன்பம் அடைவர்' என்று கூறுகிறார்கள். ஆகையால், சூழ்ந்துவரும் வினைக்குத் - தூய்மையற்ற வினைக்கு -அழுக்குப் படிந்த வினைக்கு - சூழல் ஏதும் புரிவதில்லை. சிற்றின்ப வாழ்வை விரும்புவோர்கள் - பேரின்ப தெய்வீக வாழ்வை விரும்புவோர்க்குப் - பொதுவாக எல்லாம் பக்தியையும் வெளியிட்டு வாழ்வோர்கள், துரத்திக் கொண்டுவரும் பேய்போல் தொடரும் வினையை அடையாளம் காண முடியாத நிலையில், ஆட்பட்டு அழிவதைக் காணலாம். அதனால் 'வினை' பெரும்பாலும் தொடர்ந்துவரும் ஒரு தீயசக்தி என்னும் கருத்தமைய சான்றோர் கூறுவது மிகவும் பெருத்தமானதாகவே உள்ளது.

வைணவ சமயத்தை வளர்த்த ஆழ்வார்கள் வினைவழி அமையும் தன்மையைச் சுட்டிக் காட்டி இறுதியில் முழுமுதற் கடவுளின் திருவடிகளிலேயே சரணாகதி அடையும் தன்மையை நன்கு விளக்கி உள்ளார்கள்.

நம்மாழ்வார் இந்த வழியில் சிறப்பித்துப் பாடிய பாடல் ஒன்று உண்டு.

**''அகலகில்லேன் இறையும் என்று**
**அலர்மேல் மங்கை உறைமார்ப !**
**நகரில் புகழாய் உலகமூன்(று)**
**உடையாய்! என்னை ஆழ்வானே !**
**நிகரில் அமரர் முனிக்கணங்கள்**
**விரும்பும் திருவேங்கட கடத்தானே!**
**புக(ல்) ஒன்(று) இல்லா அடியேனுள்**
**அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்!''** [14]

அலர்மேல் மங்கைக்கு நாயகனே! அலகிலாப் புகழுடைய மூன்று உலகங்களுக்கும் உரியவனே ! நிகர் இல்லாத அமரர் - முனிகணங்கள் - விரும்பும் திருவேங்கடத்தானே! எந்தப் புகலிடமும் இல்லாமல் அடியேன் உன்னுடைய அடிக்கீழ் அமரப் புகுந்தேன் என்று அழகுற 'சரணாகதி' முறையை விளக்கியுள்ளமைக் காணலாம்.

ஆழ்வார்களுடைய பக்திப் பெருக்கு, வேங்கடவனைத் தொழுது - வணங்கி - பணிந்து - இருக்கும் தன்மையைப் புலப்படுத்துவதாய் உள்ளது. உணர்ச்சி மேலீட்டால் 'நெக்கு' 'உருகி' வழிபாடு செய்ய வேண்டும் என்பது சமயத் துறையைச் சார்ந்த சான்றோர்க்கு உரிய வழியாக உள்ளது. கண்களில் நீர்கோர்த்து வழிய - கசிந்து கடமையை ஆற்றி - வாழும் சமயக் குரவர்களின் வாழ்வியல் போக்கு வெளிப்படையாக அமைந்துள்ளது.

**''இடுக்கண் வருங்கால் நகுக''[15]**

என்று வள்ளுவர் கூறி இருக்கிறார். வாழ்வின் போக்கில் துரும்புகளாகப் பகை வந்த போதும், எல்லாம் வல்ல இறைமைத் தன்மை குறையாமல் வாழ்வதே பக்தியினைச் சார்ந்து செல்வதாகும்.

திருநாவுக்கரசர் தம்முடைய பக்திப் பாடலில் வினையைப் பற்றிச் சிறப்பித்துப் பாடியுள்ளார். நெஞ்சுக்கு சொல்வதாக அந்தப் பாடல் காணப்படுகிறது. வினையைப் பற்றிய விளக்கமாக அது அமைந்துள்ளது.

'அறியாமையை உடைய நெஞ்சமே! அடியவனை ஆட்டுவிப்போனே என்றும் வினைகளாயினவற்றை ஓட்டியவனே என்றும், திருச் செவியில் விளங்குகின்ற சங்கு வெண்தோட்டினை அணிந்தவனே'' என்றும் பாடிய தன்மை உள்ளத்தின் 'உருகல்' தன்மைக்கு ஏற்புடையதாய் அமைந்துள்ளது.

**ஆட்டி னாயடியேன்வினை யாயின்**
**ஒட்டி னாயொரு காதில் இலங்குவெண்**
**தோட்டினாயென்று சோற்றுத் துறையார்க்கே**
**நீட்டி நீபணி செய்மட நெஞ்சே ![16]**

இடைக் காலத்தில் தோன்றிய சமயங்கள் சைவம், வைணவம் ஆகியவை சிறப்பாகப் போற்றப்படுகின்றன. இயற்கை வருணனை மிகுந்துள்ள சங்க காலத்து இலக்கியம் போலவே, இடைக்காலத்தமிழ் இலக்கியங்களில் 'இறைமை' தனித்து விளக்கப்பட்டிருப்பது வியப்பிற்குரியது ஆகும். வாழ்வின்

நோக்கங்கள் புலவர்களால் போற்றப்பட்ட காலம் சங்க காலம் ஆகும். ஆனால், சமயம் - மதம் - ஆகியவை உணர்ச்சி மூலமாக வடிவமைக்கப்பட்ட தன்மை இடைக்கால இலக்கியத்தின் தன்மை ஆகும். முடிமன்னர் - எண்பேராயம் - ஐம்பெருங்குழு என்ற இலக்கிய முறை சங்க கால இலக்கிய முறையாக அமைந்திருந்தது. ஆனால், இடைக்காலம் வந்தபோது, பக்தி வழிபாட்டு முறை வகுத்துக் கூறப்பட்டுள்ள நிலை ஏற்புடையதாகவே இருக்கிறது. ஆகையால், திருநாவுக்கரசர் பக்தியின் - வழிபாட்டுத் தன்மையினை விளக்கிக் கூறப்பட்டுள்ள போக்கு வியப்பாக உள்ளது. 'வாழ்வும் வளமும்' என்னும் சங்க இலக்கியப் போக்கு மாறி, 'இறையும் பக்தியும்' என்ற இடைக்கால இலக்கியம் விரிவடைந்து அமைந்துள்ள போக்கு சமயப் புரட்சி தோன்றியதைக் கண்கூடாகக் காட்டியுள்ளது.

## 5. விளைவு

தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிப் போக்கு இடைக்காலமாகிய பக்தி காலத்தில் ஆட்சியியலிலும் - பண்பாட்டுத் துறையிலும் - நாகரிக நிலையிலும் - ஒரு பெரிய மாற்றத்தைக் கொண்டு விளங்குவது கண்கூடு ஆகும். பக்தி இயக்கத்தின் தாக்கம் நீண்ட விளைவுகளைத் தோற்றுவித்-தமைந்தது. மக்கள் சோழர்களின் காலத்திலும், பல்லவ மன்னவர்களின் காலத்திலும் சமயத் துறையை வளர்த்த பாங்கு நன்கு தெரிகின்றது. சிவன், விஷ்ணு, பிரம்மன் என்னும் மூன்று தெய்வங்களும் அக்கால மக்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்ததை வரலாறு காட்டுகிறது. அதன்பின் காளி - லட்சுமி - சரஸ்வதி போன்ற சக்தி வழிபாட்டு வாழ்க்கை துளிர்க்கத் தொடங்கியது. மூலை முடுக்குகளில் எல்லாம் 'அம்மன்' வழிபாடு பெண்மையில் தெய்வீகத்தைக் காணல் வேண்டும் என்ற ஆதங்கத்தை உள்ளத்தில் பதித்தது.

காலப்போக்கில் கடவுளர்கள் பல்கிப் பெருகி வளர்ந்த பாங்கு நன்கு அமையுமாற்றைக் காணலாம். இலக்கிய இயக்கக் காலமாகிய சங்க காலம் மாறி, சிலை வழிபாடு மக்கள் வாழ்வில் ஊன்றத் தொடங்கியது. முடியாட்சி ஓங்கியிருந்த அந்தக் காலக்கட்டத்தில் - மன்னர்களால் பாராட்டப்பட்ட புலவர்கள் அறத்தைப் பற்றி அவர்களுக்கு எடுத்துக் கூறி வாழ்ந்தார்கள். ஆனால், காலப்போக்கில் நிலையான வாழ்வு பற்றிய தன்மை பக்தி வயப்பட்டு வளர்ந்திருக்கும் பாங்கு நன்றாகக் காணப்படுகிறது. அதனுடைய விளைவுதான் 'இறைமை' பற்றிய கருத்தோட்டத்தின் புனிதமான எண்ணங்களாகும்.

**''அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று''** [17]

அறத்தோடு வாழ்வது பெருஞ்சிறப்புடையது ஆகும். அதிலும் பழிச் சொற்களுக்கு அடிமையாகாமல் தெளிந்த நீரோடை போல வாழ்க்கையைச் செப்பனிட்டு வாழ்தல் வேண்டும். பக்தி இலக்கியமும் கூட 'இல்லறவியல்' என்று வள்ளுவம் கூறும் தன்மையை உணரலாம்.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், 10, ப.230 |
| 2. | மேலது | பட்டினத்தார் பாடல்கள், 1, ப.227 |
| 3. | நம்மாழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், திருவாய்மொழி, 8:8:1 |
| 4. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், ப.92 |
| 5. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், 1, ப.235 |
| 6. | மேலது | பட்டினத்தார் பாடல்கள், 21, ப.268 |
| 7. | உலகியல் பழமொழி | |
| 8. | கருவூர்த்தேவர் | தெய்வத்தமிழ், ப.181 |
| 9. | மேலது | பக். 181-82 |
| 10. | மேலது | பக்.183 |
| 11. | தொண்டரடிப்பொடி ஆழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், திருமாலை, 36 |
| 12. | .......... | நாலாயிர திவ்விய பிரபந்தம், ப. |
| 13. | திருஞானசம்பந்தர் | தேவாரம், திருவாஞ்சியம், ௧:6 |
| 14. | நம்மாழ்வார் | நாலாயிர திவ்விய பிரபந்தம், திருவாய்மொழி, 6:10:10 |
| 15. | திருவள்ளுவர் | திருக்குறள், இடுக்கன் அழியாமை, ப.214 |
| 16. | திருநாவுக்கரசர் | தேவாரத் திருப்பதிகங்கள் திருச்சோற்றுத்துறை, 330 |
| 17. | திருவள்ளுவர் | திருக்குறள், இல்வாழ்க்கை, ப.43 |

# இயல் - 9

# வாழ்வின் நிழல்

ஓங்கி உயர்ந்து காணப்படும் கோபுரத்தின் நிழல் மண்ணில் பதிகிறது. வானுயர் ஓங்கிய கட்டிடத்தின் நிழல் தரையில் விழுகிறது. மிகவும் உயரமாக வளர்ந்திருக்கும் மரத்தின் நிழல் புல்வெளியில் விழுகிறது. அதுபோல் வாழ்வின் மறுபக்கமாகிய நிழல் சம்பவங்களின் வாயிலாக நிழலாய் ஆகிறது. உணர்ச்சிகளின் திடீர்த் தாக்குதல், உடலை பாதித்து விடும்போது சலனங்கள் ஏற்படுகின்றன. ஆகையால், அச்சலனங்கள் உணர்ச்சி கொந்தளிப்பாய் மாறி அமையும்போது வெறும் நிழல்களாக - உருவமற்ற நிழல்களாக - மாறி அமைந்து விடுகின்றன. மனிதனுடைய கடைசி யாத்திரை பிணத்தின் சாயலைக் காட்டுகிறது. அப்போது அந்தப் பாடையின் தோற்றம் மண்ணில் நிழலைத் தோற்றுவித்து அமைகிறது அல்லவா?

சமயக் குரவர்கள் இந்தக் கரிய நிழலின் போக்கை விளக்கிக் கூறுவது மிகவும் பொருத்தமே ஆகும். பட்டினத்தார் நிழல் பாயும் வாழ்வை நினைத்து உருகுகின்றார்.

''காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய்ப் படுமுன்னே - மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு'' [1]

''எமன் தன் பாசக் கயிற்றுடன் வருவதற்கு முன்னே கண்கள் பஞ்சடைவதற்கு முன்னே பாலாகிய உணவு கடைவாயின் வழி ஒழுகுவதற்கு முன்னே, உடல்மீது விழுந்து உறவினர் அழுவதற்கு முன்னே, ஊரார் தகனம் செய்வதற்கு முன்னே, திருக்குற்றால இறைவனையே துதியாய்'' என்ற பொருளில் அழியும் மனிதர்களின் நிழலோட்டங்களை நன்கு ஆயும் தன்மை அமைந்துள்ளதைக் காணலாம்.

உள்ளத்தின்கண் பேரொளி எழும்போது அங்கே மயான நிழல் இடுகாட்டில் பதிந்து விடுகிறது. ஆகையால்தான், மண் மீதில் உருளும் வாழ்வின் சாயல் - நிழலின் நீள்போக்கு -

தெற்றென விளக்கம் பெறுவதை மேற்கண்ட பாடல் அமைத்துத் தருகிறது.

### 1. வெடிப்பு

பெரிய குன்றின் மேல் வெடிக்கும் போது அக்குன்று வெடித்துச் சிதறி வீழ்வது போல், வாழ்க்கை வெடியில் சிக்குண்டு வீழ்ந்து விடுகிறது. எத்தனைப் பேர் வந்து நின்றபோதும் அதை - அந்தப் பிளவை - அடைக்க முடிகிறதா? வெடிப்பின் ஓசையைச் சத்தத்தைக் அகற்ற முடிகிறதா? பட்டினத்தார் இந்த வெளி - மயக்க வாழ்வுப் பாதையில் வந்து நிற்கும் வெடிப்பைக் காவல் காத்து நிற்க முடிகிறதா- என்று கேள்வி ஒன்றை எழுப்புகிறார்.

> பொய்யை யொழிப்பாய்! புலாலை விடாய் காளத்தி
> ஐயரை எண்ணாய் அறஞ்செய்யாய் வெய்ய
> சினமே ஒழிவாய்! திருவெழுத்தைந்(து) ஓதாய்!
> மனமே உனக்கென்ன மாண்பு! [2]

'உலக வாழ்க்கைப் பொய்யால் ஆனது ஆகும். ஆகையால், அதனை விட்டு விட வேண்டும். புலால் உண்பது பாவச் செயல் ஆகும். அதனையும் விட வேண்டும். காளத்தி நாதனை எண்ண வேண்டும். அதுவே உயர்ந்த குறிக்கோள். பொங்கும் சினத்தை அடக்கியாள வேண்டும். ஏனெனில், அது இழிவைக் கொடுக்கும். ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுவதில்லை. ஏ! மனமே! உனக்கென்ன மாண்பு இருக்கிறது- என்று நெஞ்சின் பாழ்ப்பட்ட போக்கைப் பார்த்து வெடிக்கிறார். வெந்து தணியும் போது - வேகம் குறையும் போது - ஆடல் அடங்கும் போது - ஞானம் பிறக்கிறது. எந்த ஒருவனுக்கு வாழ்வு பற்றி தெளிவு ஏற்படுகிறதோ அவன் ஞானி ஆகி விடுகிறான். எப்படி இருள்மயமான 'அஞ்ஞானம்' கழிகிறதோ - எப்படி மயக்கமான நிலை ஓடி விடுகிறதோ - அப்படித்தான் 'தேர்ச்சி' மிக்க 'அஞ்ஞானம்' ஏற்பட்டு அமையும்போது, 'ஞானம்' என்னும் கதிரவன் ஏற்பட்டு நிற்கின்றது. அப்போது சுடர் என்னும் 'அறிவு' தோன்றி 'சகடு' என்னும் அழுக்கை நீக்கி விடுகிறது. இதைத்தான் பட்டினத்தார் விளக்கி உள்ளார். பிறவி பற்றிய 'தொல்லை' எப்போதெல்லாம் ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் தெளிவு என்னும் வெடிப்பு ஏற்பட்டு 'நிறைவு' என்னும் 'வாழ்க்கை'யை நிமிரச் செய்கிறது.

### 2. மரணம்

வாழ்க்கையில் எத்தனையோ துன்பங்களும், துயரங்களும் காணப்படுகின்றது. அதனால் வாழ்வின் போக்கில் விரைந்து

அழியக் கூடிய தன்மை காணப்படுகிறது. வாழ்ந்து, வழுக்கி விழுந்து இன்ப துன்பங்களில் மூழ்கித் திளைக்கின்ற தன்மை அதிகமான முறையில் அமைந்துள்ளதைக் காணலாம். மனிதன் எத்தனையோ படைப்புகளைக் காட்டலாம். அறிவியல் வாழ்வில் தோன்றி அமையும் வியக்கத்தக்க கண்டுபிடிப்புகளும் நாகரிக வளர்ச்சியில் காணும் முன்னேற்றங்களும் நடைபெறுகின்ற தன்மையைக் காணலாம். அறிவியல் வாழ்வில் என்னதான் முன்னேற்றங்கள் ஏற்படினும் தொடர்ந்து நோய்கள் பல பல்கி பெருகி இடர்பாடுகளை அளிக்கின்றது. அறிவியல் துறையில் என்னதான் புதிய கண்டுபிடிப்புகளும், என்னதான் புதிய ஆக்கங்களும் இருந்தாலும் மாயை வாழ்க்கையை அதனால் காண முடியவில்லை. மரணத்தை வெல்லும் வழியினை மாத்திரம் இதுநாள் வரை மனிதனால் கண்டறிய இயலவில்லை. மரணம் அறிவியலுக்கும், மனித அறிவுக்கும் அப்பாற்பட்ட ஒரு நிகழ்ச்சியாகவே காணப்படுகிறது. மரணம் எல்லோருக்கும் பொது. குழந்தை முதல் முதியோர் வரை மரணப் பிடியில் இருந்து தப்ப முடியவில்லை.

அதனால்தான், பிறப்பும் இறப்பும் மனிதனுக்கு மிஞ்சிய செயலாகக் கருதப்படுகிறது. ஆகவே, மனிதன் தன் பிறவியின் நோக்கத்தை அறியவும், மரணத்திற்குப் பின் முக்தியைப் பெறவும் சமயத்தை நாடி அலையும் பாங்கு தென்படுகிறது.

பக்தித் துறையில் மரணம் என்பது நிலையான ஒன்றாகக் கருதப்படுகிறது. மாணிக்கவாசகர் மரணத்திற்கு ஆட்படும் உயிர்களைக் காட்டி அந்த உயிர்களை தன்வயமாக்கி 'கடையவன் நான்'[3] என்றும் கருணையால் கலந்து ஆட்கொள்ள வேண்டும் என்றும், கடையவனே தளர்ந்தேன் எம்பிரானாகிய நின்னை வணங்குகின்றேன் ஆட்படுத்திக் கொள்வாயாக. இந்தப் பாடலில் உயிர்களுடைய தற்காலிகமான நிலையைக் கண்டு நகையாடும் போக்கு உள்ளது.

காமம், மயக்கம், வெகுளி என்னும் மும்மலத்தில் உழலும் இந்த உயிர்கள் இறுதியில் மரணத்தின் பிடியில் சிக்கித் துன்புறுகின்றார்கள். கடலில் ஓடினாலும், மலையில் ஏறினாலும், காட்டுக்குள் திரிந்தாலும் இறப்பு என்னும் வாழ்வின் இன்றியமையாத நிகழ்ச்சியிலிருந்து தப்பிக்க முடியாது. ஆகவே, இந்த நிலையற்ற மனித வாழ்வை நிலைபேறு கொள்ளச் செய்ய மரணத்தின் தன்மையையும், அதன் அடிப்படையினையும் புரிந்து கொள்ள வேண்டும்.

திருநாவுக்கரசர் பாடும்போது இந்த மனதை அறியாமையுடைய மனம் என்று சுட்டிக்காட்டி அன்பர்களுக்கு திருக்கடைக்கண் காட்டியருளி உய்த்து மரணப் பிடியிலிருந்து தப்பித்து வாழ்வதற்குரிய தன்மையை அளிக்கிறவன் சிவன். மரண அச்சம் நீங்க வேண்டுமென்றால் செந்நீயின்கண், பெண், பிறை ஆகியவற்றை வைத்தவனும் ஆகிய இறைவனது திருவெண்காட்டிற்குச் சென்று இறப்பு என்னும் சொல்லிலிருந்து நீங்கி வாழும் நெறியினைப் பின்பற்ற வேண்டும்.

**''பண்காட் டிப்படி யாயதன் பக்தர்க்குக்**
**கண்காட் டிக்கண்ணில் நின்ற மணியொக்கும்**
**பெண்காட் டிப்பிறை சென்னிவைத் தான்திரு**
**வெண்காட் டையடைந் துய்யுமட நெஞ்சமே''** [4]

இவ்வாறு மரணத்தினுடைய சக்தியைக் காட்டி உயிர்களுக்கு எச்சரிக்கை செய்கின்றார் திருநாவுக்கரசர்.

### 3. கற்பனை

சமயத் துறையில் இறைவனுடைய உருவத்தை கற்பனை நயத்தோடு விளக்கிக் காட்டும் பாங்கு அமைந்துள்ளது. கற்பனை என்பது சங்க காலத்தில் இயற்கையோடு இணைந்து கூறப்பட்ட போக்கு உள்ளது. ஆனால், சமய காலத்தில் குன்று, காடு, கடல், வயல் ஆகியவற்றை விட்டுவிட்டு இறைவனுடைய பெயர், கோலம், அழகு ஆகியவை விளக்கிக் கூறப்பட்டுள்ளன. நாவுக்கரசர் பாடும்போது,

**''கொக்க ரைகுழல் வீணை கொகொட்டி**
**பக்க மேபகு வாயன பூதங்கள்**
**ஒக்க ஆடலுகந்துடன் கூத்தராய்**
**அக்கி னோடர வார்பரா ரூரரே''** [5]

ஆகிய வாத்தியங்களைக் கொண்டு இசைத்து மருங்கிலே நின்று பிளந்த வாயையுடைய பூதங்கள் ஆடாநிற்ப ஆளும் கூத்தராய் அக்குமணிகளையும், அரவையும் பூண்பவர் திருவாரூர் பெருமான் ஆவார் என்று இறைவனுடைய திருஉருவத்தை விளக்கிக் காட்டும் போக்கு உள்ளது. மாணிக்கவாசகர் பாடும்போது,

**''ஒளிர்கின்ற நீண்முடி உத்தரகோச மங்கைக்கு அரசே !**
**தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்ன**
**தோற்ற செழும் சுடரே !''** [6]

என்று சிவபெருமானுடைய உருவப் பொலிவைச் சுட்டிக் காட்டுகின்றார்.

இவ்வாறு சமயக் குரவர்கள் இறைவனுடைய உருவப் பேற்றையும் அருளுகின்ற சிறப்பையும் நன்கு சித்தரித்துக் காட்டுகின்றார்கள். இக்கருத்துக்கள் கற்பனையிலேயே பக்தி நிலையை உருவாக்கி பேரானந்தப் பேற்றினை பெறுவதற்கு மிக்க ஆதாரமாக அமைந்துள்ளது.

## 4. சூழ்நிலை மாற்றம்

இயற்கையாக ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் அவன் வாழுகின்ற சுற்றுப்புற சூழலைச் சார்ந்து வாழுகின்றான்; வளருகின்றான். அடர்ந்த காட்டில் வாழும் ஒருவன் மிருகங்களோடு பழகும்போது அவற்றின் போக்கில் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுகிறான். நாகரிகமும் பண்பாடும் வளர்ந்த நகரங்களில் வாழும் வேறொரு மனிதன் நல்வாழ்வினைப் பெற்று பக்தி வயப்பட்டு வாழும் நெறியினைப் பெறுகிறான். காட்டில் வாழும் மனிதனாய் இருந்தாலும் சுற்றுப்புற சூழலுக்கு ஏற்ப வாழும் நிலையினை அமைத்துக் கொள்கிறான். திருநாவுக்கரசர் பாடும்போது,

**''செய்யா பாதமிரண்டும் நினையவே**
**வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே''** [7]

இதில் சூழ்நிலை மாற்றம் அமைந்திருப்பதைப் பார்க்கலாம். சிவந்த திருப்பாதங்களை வணங்குகின்ற போது அருளாட்சி அமைகிறது. அப்போது இந்த உலகம் முழுவதையும் ஆளும் பேறு கிடைக்கிறது. ஐயனை வழிபாடு செய்யும் காரணத்தினால் இறைமை சூழ்ந்த காலம் தோன்றுகிறது. அப்போது சூழ்நிலையும், பக்தி பரவசப்பட்டதாய் மாறுகிறது. ஆகையால், சூழ்நிலை மாற்றம் இயற்கையானதாக மாறி அமைவதைக் காணலாம்.

பக்தி உணர்ச்சி மேலிடும்போது வாழ்வில் ஒழுக்கத்தைப் பின்பற்ற வேண்டிய கட்டம் வருகின்றது.

**''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்''** [8]

என்று வள்ளுவர் கூறியிருக்கும் கருத்து நோக்குதற்குரியதாக உள்ளது. இது சூழ்நிலை மாற்றத்தின் அடிப்படையை விளக்குவதாக அமைந்திருப்பதைக் காணலாம்.

## 5. அச்சம்

எங்கெல்லாமோ பிறவி எடுக்கும் மனிதன் உலகில் அச்சத்தோடு வாழ்கிறான். காட்டில் - மேட்டில் தங்கி வாழ்வதற்குத் தன்னை தயார்படுத்திக் கொள்ள முனைகிற மனிதன், தன்னைச் சுற்றிலும் உருவாகி அமையும் பின்னணியைப் பார்த்து மயக்கம் அடைகிறான். இன்ப வேட்கைகளில் புகுந்து ஆட்டங்கள் ஆடி - பாட்டுக்கள் பாடி - அடங்கும் போது, நெஞ்சின் ஆழத்தில் அச்ச உணர்வு பெற்று வாழ நேரிடும் தன்மையை நோக்கும்போது, வாழ்வின் இடிபாடுகள் சுழன்று வந்து மனிதனைச் சூழ்ந்து கொண்டு விடுகிறது. அப்போது இறைவனின் தோற்றப் பொலிவினை உச்சரித்து அச்சம் நீங்கப் பெறுதல் வேண்டும். முடியும் வாழ்வியல் போக்கு, வளைந்து செல்லுமேயானால் கோணல் மிக்க கோடுகள் எங்கு கண்டாலும் குவிந்தெழும். அதை நீக்கி நேர்க்கோடு ஆக்க வேண்டுமானால் இறைவனுடைய சக்தி வாய்ந்த 'அருள்' நிச்சயமாய் வேண்டும்.

மாணிக்கவாசகர் பாடும்போது சிவனுடைய தோற்றத்தையும், அவனால் ஆக்கப்படும் தாய் போன்ற கருணை உணர்வையும் முன்வைக்கும் பாங்கு சிறப்பாக உள்ளது.

**வான்வந்த தேவர்களும் மாலயனோடு இந்திரனும்**
**கானின்று வற்றியும் புற்றெழுத்தும் காண்பரிய**
**தான்வந்து நாயேனைத் தாய்போற் தலையளித்திட்டு**
**ஊன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து**
**தேன்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மாண்ணாய்!** [9]

அச்சத்தை உருவாக்கி, நாயாகித் திரிகின்ற மனித மனதை அடக்கி ஆண்டு, ரோமாஞ்சலி எடுக்க வழிபாடு செய்யவரும் சூழலை உருவாக்கி வாழ்கழலினைப் பாட வைக்கும் நேர்த்தி சிறப்பானது ஆகும்.

இப்பாட்டில் இறைவனின் அச்சம் உருவாக்கும் தோற்றம் பற்றியும், அந்த அச்சத்தால் வழிபாடு செய்யும் உயிர்களின் தன்மை பற்றியும் கூறப்படும் குறிப்புக்கள் அறிவிற்கு விருந்தாய் அமையுமாற்றைக் காணலாம்.

பகலானது மெள்ள நகர்ந்து செல்லும் போது மாலை அரும்பி, இருளின் சாயல் மூடி வருவதைக் காணலாம். அதுபோல் வாழ்வில் 'ஒளிவீசல்' நிகழ்ந்து அமையும்போது, அதைத் தொடர்ந்து மங்கலான தோற்றம் மாறி அமையும். அப்போது மனதின் ஆழத்தில் 'அச்சம்' மேம்பட்டு எழுவதுண்டு. அதைப்

போக்க வேண்டுமானால் 'பேரொளி' காட்டும் இறைவனுடைய அருள் மிகவும் தேவைப்படுகிறது.

பட்டினத்தார் மனிதன் எப்படியெல்லாம் அச்சப்பட்டு வாழ்கிறான் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறார். மனதுக்குக் கூறுமாறு போல அப்பாடல் அமைந்துள்ளது.

**சீதப்பனிக்குண்டு சிக்கெனக் கந்தை; தினமரந்து**
**நீதுய்க்க சோறு மனைத்தோறுமுண்டு; நினைவெழுந்தால்**
**வீதிக்கு னல்ல விலைமாதருண்டிந்த மேதினியில்**
**ஏதுக்கு நீதவித் தாய்! மனமே! என்றும் புண்படவே.** [10]

'குளிர்காலத்தில் உடல் நடுங்கி அச்சமேற்படும். அப்போது பயத்துடன் உடலில் சுற்றிக் கொள்ள கந்தைதான் உள்ளது. வேறு என்ன செய்ய? நாள்தோறும் பிச்சை எடுத்து உண்ணத்தக்கதாக சோறானது இல்லங்கள் தோறும் உண்டு. இங்கு பிச்சை எடுக்கும்போது ஏற்படும் அச்சத்தைக் குறிப்பிடுகின்றார். உலக அறிவு தோன்றும்போது வேசையருடன் தொடர்பு கொள்ள நேரிடுகிறது. அதுவும் பேரச்சம் தோன்றும் இடமல்லவா? ஆகையால் வாழ்க்கையை நேராக நின்று அலசல் வேண்டும்' என்று பாடுகிறார் பட்டினத்தார்.

வள்ளுவரும் கூட இரத்தலினால் ஏற்படும் துன்பத்தைப் பற்றிக் கூறி இருப்பது இங்கு நோக்குதற்குரியது.

**இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகியற்றி யான்** [11]

என்னும் இக்குறளில் 'இரந்து வாழும் நிலை மனித வாழ்வில் நேர்ந்தால், இந்த உலகத்தைப் படைத்த இறைவனே அழியட்டும்' என்று சமயத் துறைக் கருத்தோடு பிணைந்துள்ள கருத்தை எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது.

பிறிதொரு இடத்தில் பட்டினத்தார் 'அச்சம்' பற்றிப் பாடியுள்ளதைக் காணலாம். 'பொது' என்னும் தலைப்பில் அவர் பாடியுள்ள கருத்து, வாழ்வின் எல்லாப் போக்குகளுக்கும் உரியதாக உள்ளது.

என்பெற்ற தாயாரும் என்னைப் பிணமென்று இகழ்ந்துவிட்டார்!
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லி புலம்பிவிட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைந்தார்
உன்பற் றொழிய ஒருபற்றும் இல்லை உடையவனே! [12]

இந்தப் பாடலில் உயிர்கள் அடையும் அச்சத்தைப் பறைசாற்றுகிறார் பட்டினத்தார். 'ஈன்ற அன்னையும் என்னைச்

'சவம்' என்று எண்ணி அச்சத்தோடு விட்டு விட்டார். மாதர்களும் போகின்ற இந்த உடலின் அழிவை எண்ணி விட்டுவிட்டார். எனது மைந்தர்களும், என் சவம் அடைந்த இடுகாட்டுக்கு அச்சமுடன் வந்து தண்ணீர் குடத்தை அச்சமுடன் உடைத்தார். ஆகையால், இறுதியாக உன் பற்று ஒழிய ஒரு பற்றும் எனக்கில்லை இறைவா! என்று பொதுவான வாழ்வியல் போக்கைத் தெளிவுறுத்துகிறார் பட்டினத்தார்.

இந்த நூற்றாண்டில் புதிய காலகட்டத்தைத் தோற்றுவித்த பாரதியார் எல்லா நிலைகளையும் எண்ணி வாழ்வின் - சமய வாழ்வின் - சாயல் சிறிதே அமையப் பாடுகின்றார். இடைக்கால நாயன்மார்கள் - ஆழ்வார்கள் ஆகியோர் பாடிய 'அச்சம்' ஒரு பக்கம் வைத்து அச்சமின்மையைப் பாடியுள்ளமை நோக்குதற்குரியது.

***அச்சம் இல்லை! அச்சம் இல்லை***
***அச்சமென்பது இல்லையே!***
***உச்சிமீது வானுடைந்து வீழுகின்ற போதிலும்***
***அச்சமில்லை அச்சமில்லை*** [13]

என்று வீரத்துடன் பாடியுள்ளமைச் சிறப்பாக உள்ளது.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், திருக்குற்றாலம், பா.1 ப.236 |
| 2. | மேலது | திருக்காளத்தி, பா.1, ப.235 |
| 3. | மாணிக்கவாசகர் | திருவாசகம், நீத்தல் விண்ணப்பம், ப.1 |
| 4. | திருநாவுக்கரசர் | தேவாரம், திருவெண்காடு, பா.488 |
| 5. | மேலது | திருஅரூர், ப.62, ப.46 |
| 6. | மாணிக்கவாசகர் | திருவாசகம், நீத்தல் விண்ணப்பம், பா.4 |
| 7. | திருநாவுக்கரசர் | தேவாரம், திருமாற்பேறு, பா.608 |
| 8. | திருவள்ளுவர் | திருக்குறள், ஒழுக்கமுடைமை, ப.97 |
| 9. | மாணிக்கவாசகர் | திருவாசகம், திருவம்மானை, பா.4 |
| 10. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், 15, ப.191 |
| 11. | திருவள்ளுவர் | திருக்குறள், இரவச்சம், ப.552 |
| 12. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், 28, ப.201 |
| 13. | மேலது | பட்டினத்தார் பாடல்கள், ப.202 |

# இயல் - 10

## ஊரும் பேரும்

ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்நாளில் மிகுந்த 'பெயரும் புகழும்' அடைய வேண்டுமென்று திட்டம் வகுத்துக் கொள்கிறார்கள். செயல் வடிவங்களில் சீர்மை உடையதாக அமையும் தன்மை ஏற்பட்டு அமைய வழிவகை செய்ய வேண்டும். ஆயினும், சமயகால முன்னோடிகள் அத்தகைய 'பேர் - புகழ்' வாழ்வின் சட்டத்தை உடைத்தெறிந்து, ஒன்றும் நில்லாத உலகியல்பைச் சுட்டிக் காட்டி உள்ளார்கள். 'அழிந்து போகும் தன்மை வாய்ந்த இந்தப் புவியில் உண்மையாக வாழ்வது எப்படி-' என்ற கேள்வியில் முடிக்கும் போக்கு ஆராய்வதற்குரியதாக உள்ளது.

பட்டினத்தார் இக்கருத்தை வலியுறுத்துவதைக் காணலாம்.

**ஊரும் சதமல்ல! உற்றார் சதமல்ல; உற்றுப்பெற்ற**
**பேரும் சதமல்ல; பெண்டிர் சதமல்ல; பிள்ளைகளும்**
**சீரும் சதமல்ல; செல்வம் சதமல்ல; தேசத்திலே**
**யாரும் சதமல்ல; நின்றாள் சதங்கச்சி யேகம்பனே ! [1]**

'ஊரார்கள், உற்றார்கள் யாவரும் நிலையல்ல; பெண்டிர்களால் அமையும் வாழ்வும் சதமல்ல; பிள்ளைகளும் சீரும் நிற்பது இல்லை; சேர்த்து வைக்கும் செல்வமும் உண்மையல்ல; இந்த உலகத்தில் யாரும் வீழ்ச்சியில்லாமல் வாழ்வதில்லை என்று வாழ்வின் நிலைமாறும் தன்மையைப் பட்டினத்தார் 'உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டுகிறார்.

மாணிக்கவாசகரும் கூட 'ஊர்களை யான் வேண்டுவதில்லை; பேர்களை நான் விரும்புவதில்லை என்று தெளிவுற ஆழமாகச் சிந்தித்துப் புதிய பாதை ஒன்றை அமைத்துக் காட்ட முயல்கின்றார்.

ஆகையால், பட்டினத்தார் இன்னொரு இடத்தில் பாடியது போல,

**மல உடற் குடத்தை [2]**
**சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையை [3]**
**ஐம்புலப் பறவை உடையும்பஞ் சரத்தை [4]**
**காசிற் பணத்தில் சுழலும் காற்றாடி [5]**

உடலின் இன்னொரு புறமாகிய அழிவினை எண்ணி, இதன் வாயிலாக வந்து சேரும் மறையும் தன்மையை தெளிவுற விளக்குகின்றார் பட்டினத்தார். சவக் குழிதான் நிலையானது. சதையும், எலும்பும் மண்ணில் மறைந்து வெறும் மண்ணாகிப் போகின்ற இயலினை உடைய இந்த வாழ்வை, மிகவும் போற்றி, புகழ்களுக்கு ஆளாக்கி, பித்தம் தலைக்கேறி, நெறிகெட்டு உருள்வதால் யாருக்கு என்ன பலன்? இந்தப் பேருடலில் ஐம்புலன்கள் அமைந்துள்ளதைக் கூறி, அவை பறவை போல பறந்து போய்விடும் தன்மையையும், சுட்டிக்காட்டி 'வாளா இருத்தலே சிறப்புடையது என்னும் உண்மையை ஆய்ந்து அறிதல் வேண்டும்' என்று விளக்குகின்றார் பட்டினத்தார். அதற்கடுத்துக் கூறும் போது 'பணத்தில் உருளும் இந்த வாழ்வில், அதே பணம் போல் அழியும் தன்மையை அழியும் நெறியை - வெளிப்படுத்தி அமைகிறார்' பட்டினத்தார். அதன் பின்பு இந்த வாழ்வைக் காற்றாடி என்று கூறுகின்றார். காற்று வீசும் போதெல்லாம், அந்தத் திசை பக்கமே செல்லும் பட்டம் போல - ஆடும் காற்றாடி போல - மனித வாழ்வும் ஆடி - அசைந்து - திரண்டு, திகைத்து, உருண்டு - உருட்டி அமையும் தன்மை பட்டினத்தாரால் சிறப்புற விளக்கப்பட்ட பாங்கு உணர்ந்து போற்றுதற்குரியதாக உள்ளதைக் காணலாம். ஆகையால், பேர் - ஊர் உண்மையானது அல்ல என்பது தெளிவாகும்.

### 1. பாசம்

பதி - பசு பாசம் என்னும் மூன்று குணங்களும் சைவ சமயத்தில் கூறப்படுகிறது. பதி என்பது இறைவன். பசு என்பது உயிர்கள். பாசம் என்பது பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இணைப்புக் கோடாகும். உலகில் பிறப்பெடுக்கும் எல்லா உயிர்களும் 'பாசப்' பண்பில் சிக்கி, இறுதியில் கடவுளை அடைய முயற்சி செய்கிறது. பந்தம் என்னும் சொல்லால் இதைக் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர். 'பாசம் - பந்தம் பற்று' என்ற மூன்று பண்புகளையும் இங்கு எண்ணிப்பார்க்க வேண்டும்.

**எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே !**
**பந்தம் வீடவை யாய பராபரன்**
**அந்த மில்புகழ் ஆரு ராநெறி**
**சிந்தை யுள்ளஞ் சிரத்துளூர் தங்கவே! [6]**

'நெஞ்சமே' பந்தமும் வீடுமாய் இருக்கும் தேவ தேவனாகிய திருவாரூர் அரநெறி சந்தையினும் சிரத்தினும் தங்குதற்கு எவ்வளவு பெருந்தவம் நீ செய்தனை?' என்று சிறப்பாகப் பாடியுள்ளார் திருநாவுக்கரசர்.

இந்த மண்ணுலகில் பிறப்பெடுத்த பிறகு பந்த - பாச வாழ்வில் மூழ்க வேண்டி இருப்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும். நெஞ்சில் தோன்றி அமைந்து, எல்லா உயிர்களின் நெஞ்சிலும் வளர்ந்து வரும் 'பந்தங்கள்' - 'பாசங்கள்' ஆகியவை அவற்றை 'அழுக்கு'களாக ஆக்கி விடுகின்றன. அந்த 'வழுக்கலை'க் கொடுக்கும் 'பற்றுக்கள்' ஓங்கி எழுந்து நற்சிந்தனைக் கோட்டைகளைப் 'படபட'வென்று வீழ்த்தித் தோல்வி வரச் செய்து விடும். ஆகையால், மிக முயன்று அந்தச்'சமய' தேக்கத்தைக் கொண்டு வரும் பண்பினின்றும் விடுபடல் வேண்டும். அதுவே பாசம் என்னும் 'குணம்' தோன்றி நிற்கும் தன்மையாகும்.

## 2. பேராசை

ஏதேனும் ஒரு இசையோ அல்லது ஓசையோ ஏற்பட்டால் நெஞ்சம் கலங்கி விடுகிறது. நீரோடைகளில் மூழ்கி எழும்போது மனம் துள்ளுகிறது. இசையை அணைத்துக் கொண்டும்; ஓடையில் மூழ்கிக் கொண்டும் இன்பம் அடைய நினைவில் ஒரு 'சக்தி' ஊசலாடுகிறது. அதுவே விருப்பமாகவும், பேராசை ஆகவும் ஆகிவிடுகிறது. வாழ்க்கை என்பது சத்தமிட்டுக் கூவுவதால் ஏற்படும் சலனத்தைத் தெளிவுறுத்துகிறது. எண்ணங்கள் ஒருமித்துத் தோன்றும்படிச் செய்யும் உலகப் பொருட்களின் மேல் ஆசை தோன்றுதல் மிகச் சாதாரணமான நிகழ்ச்சியாக இருக்கலாம். ஆனால், அந்தப் பண்பே பேராசையாக மாறிப் போனால் துன்பங்கள் பொங்கி வருதலுண்டு.

திருநாவுக்கரசர் இப்படித்தான் ஆசையை எளிய மக்களுக்குச் சுட்டிக் காட்டுகிறார்.

**நேச மாகி நினைமட நெஞ்சமே !**
**நாச மாயை குலநலச் சுற்றங்கள்**
**பாச மற்றுப் பராபர ஆனந்த**
**ஆசை யுற்றிடும் ஆனைக்கா அண்ணலே! [7]**

'மூட நெஞ்சே! அன்பு வயப்பட்டு வழிபாடு செய்வாயாக! நாசத்தை உண்டாக்கும் குலம் - மாயை முதலானவை சுற்றத்தார் உருவில் வந்து கேடு பயக்கும். விருப்பம் என்னும் குற்றத்தில்

விழுந்து ஆசை (காதல்)யில் களிநடம் புரிதல் வேண்டும்' என்று இங்கு ஆசையைப் - பேராசையைக் காதல் - அன்பு என்னும் பொருளில் பயன்படுத்தி இருத்தலைக் காணலாம். ஆகையால், 'பொருட்களின் மேல் பற்றற்ற ஆசை உற்று - ஏற்று வாழ்வதில் தவறேதும் இல்லை' என்று கூறலாம். அடங்கா ஆசை, நன்மை பயக்குமானால் ஏற்றருளல் வேண்டும். 'காதலாகி கண்ணீர் மல்கி' வழிபாடு செய்யும் தன்மையைச் சமயக் குரவர்கள் கூறுகின்றார்கள் அல்லவா?

**3. ஓசை**

எத்திசை நோக்கினாலும் ஓசை கேட்டுக் கொண்டே இருப்பது இயற்கைதான்; வாழ்வின் புறத்தில் நின்று அசைவை ஏற்படுத்துவது - ஓசையைச் சுண்டி இழுப்பது ஒரு எளிய தோற்றம்தான். சமய வாழ்வில் 'ஓம்' என்னும் ஓசை தோன்றி உலகின் எல்லாப் புறத்திலும் அதிர்வை தோற்றுவித்து வருவது கண்கூடு ஆகும். ஆகையால், அந்த ஓசை சற்றே நீண்டு 'ஓம் நமச் சிவாய' என்ற மூல மந்திரமாகத் தோன்றி அமைகிறது. இத்தகைய 'பேரோசை' செவியில் படும்போது நொடிப் பொழுதில் இறைமை தோன்றி அமைவதைக் காணலாம்.

திருநாவுக்கரசர் ஓசைத் தத்துவத்தைக் காட்டுகிறார்

**'பறையின் ஓசையும், பாடலின் ஓசையும்,**
**மறையின் ஓசையும், வைகு மயலெலாம்**
**இறைவனே எங்கள் பிரானிடை மருதினில்**
**உறையும் ஈசனை யுள்குமேன் உள்ளமே'** [8]

'பறை - பாடல் - மறை - இவற்றின் ஓசைகள் ஆர்ப்பதும் - அவை தங்கி இருக்கும் வயற்புறங்களும் உடையதும், இறைவனாகிய எங்கள் பிரான் எழுந்தருளி இருப்பதும் ஆகிய திருவிடைமருதூரில் உறைகின்ற ஈசனை என் உள்ளம் நாடுகிறது' என்பது கருத்தாகும்.

மாணிக்கவாசகர் பாடும்போது 'ஓசை'யை முன்நிறுத்திப் பாடி இருப்பது இங்கு நோக்குதற்குரியது.

**'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'** [9]

'உலகத்தில் ஏற்படும் எல்லா ஓசைகளும் ஒலிகளும் அமைவது இறைமையைக் குறிக்கவே ஆகும்' என்ற பொருளில் 'சத்தத்தின்' இன்றியமையாத பகுதியினை தெளிவுறுத்தி இருப்பதைக் காணலாம்.

## 4. ஒன்றுதல்

உலகில் மனம் ஒன்றி வழிபடல் வேண்டும். உலக வாழ்க்கை நிரந்தரமானது அல்ல. அழியும் ஓவியம் போல், அழகு சிதைந்து - ஆன்மீகம் குன்றி - இருளில் சிக்கி - வீழ்வதுதான் மனித வாழ்வின் நிலையாகும். கண்ணீர் விட்டுக் கதறி அழுதாலும் இந்த அழகைப் பெற முடிவதில்லை. ஆகையால் 'வாழ்வு அழிவதற்கு முன்பே மனம் ஒன்றி இறைமை வழிபாடு செய்தல் வேண்டும்' என்று கூறி இருக்கிறார்கள்.

மனிதனுடைய சிந்தனை ஒருமுக நோக்கில் நிலைப்பதில்லை. கண்காணும் காட்சிகளுக்கு ஏற்ப நினைவுகள் தோன்றி அமைகின்றன. காட்டில் வேட்டைத் தொழிலில் ஈடுபட்ட ஒருவனுக்கு உள்ளம் மிகவும் கடினமானதாக அமைந்திருக்கும். நாட்டில் திரியும் மனிதர்கள் பண்புடனே சேர்ந்து வாழக் கற்றுக் கொள்கின்றனர். காட்டில் வேட்டைக்கு செல்லும் மனிதனை விட, நாட்டில் பழகும் மனிதனுக்கு, ஒருமுகப் பயிற்சியில் ஈடுபாடு கொள்வதற்கு வாய்ப்பு அதிகமாக இருக்கும். காட்டில் வாழும் மனிதன் கரடுமுரடான உணர்ச்சிகளுக்கு ஆளாவது போல, நாட்டில் வாழும் மனிதன் உணர்வு கெட்டு வாழ விரும்புவதில்லை. காட்டில் வாழும் மனிதன், கொலை - கொள்ளை ஆகியவற்றில் விருப்பம் தெரிவிப்பது போல், நாட்டில் வாழும் மனிதன் தண்மை - பண்மை (பண்பு) ஆகியவற்றில் அதிக கவனம் செய்கின்றான்.

இதைத்தான் இராமலிங்க அடிகள்

**''ஒருமையுடன் நினது திருமலரடி தொழுகின்ற**
**உத்தமர்தம் உறவு வேண்டும்''[10]**

என்று நெஞ்சுருகப் பாடுகின்றார். மனித மனம், அஞ்சும் மனமாகும். அளவறியா ஆசை மிகுந்த நெஞ்சமாகும். அதனைக் காக்க வேண்டுமானால் தெய்வீகம் என்னும் கயிற்றால் கட்ட வேண்டிய நிலை ஏற்படுகின்றது. அதுதான் ஒன்றுபட வேண்டும் என்னும் கொள்கை ஆகும்.

சைவ சமயம் பெண்ணைச் 'சக்தி' என்று கூறி தனி வழிபாட்டிற்கு வழிவகுத்துத் தந்திருக்கிறது. தமிழ்நாட்டில் 'பெண்' என்பவள் வெறும் 'போகப் பொருள் என்ற நிலையை விட்டுத் தெய்வீகம்' ததும்பும் பண்போடு வழிபாட்டிற்குரிய 'இறைவி' தத்துவத்தைப் பறைசாற்றி வருவதைக் காணலாம். ஒருமை மனதுடன் ஒருவனுக்காகவே வாழ்ந்து -

ஒருவனுக்காகவே மடிந்து - தெய்வ உருவைப் பெறும் தன்மையை 'ஒருமை மகளிரே போல' என்று கூறி அறிவிக்கின்றோம்.

**'தெய்வம் தொழா(அ)ள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை'** [11]

என்று த்மிழ்ப் பண்பை உயர்வாக விளக்கிப் பாடி இருக்கும் நேர்த்தி எண்ணுவதற்கு உரியதாக உள்ளது.

உணர்ச்சிகளில் வெடிப்பு ஏற்பட்ட போதிலும் - குன்றினாற் போல் தன்மை ஏற்பட்ட போதிலும் ஒருவனுடனே வாழும் நெறியை வகுத்துக் கொள்ள வேண்டிய சமூகக் கட்டுப்பாடு உணர்வு மேலோங்கி இருக்க வேண்டும். வழிபடும்போது 'தியான'முறைப் பின்பற்றப்படல் வேண்டும். சஞ்சலப்பட்ட மனதை - சிதறும் தன்மையில் அழியும் மனதை - காக்க வேண்டுமானால் நெறியோடு நிற்கும் நல்ல சிந்தனைகள் வேண்டப்படுகின்றன. 'எரியும் வீட்டில் கிடைத்ததே ஆதாயம்' என்பது போல வாழ்க்கையில் 'உணர்ச்சி நெருப்பில் கிடைக்கும் உடல் தசையே போதும்' என்பது போல அமைத்துக் கொள்ளப்படும் வாழ்க்கை ஒருமை' மகளிர்க்கு ஆவதில்லை. அவர்கள் 'ஒழுக்கம்' என்னும் 'கவசத்தை'ப் பூண்டு உலகிற்கு வழிவகுத்துக் காட்ட வல்லவராய் அமைதல் வேண்டும். அதுதான் சைவம் அளிக்கும் 'வாழ்வியல் தத்துவம்' ஆகும்.

### 5. ஒழுக்கம் - ஒளி

மனிதனின் இறப்புக்கும் பிறப்புக்கும் இடையே எத்தனையோ வகையான இழிவுகள் தோன்றி குறைச் செய்கின்றன. நேர்வழியில் நிமிர்ந்து நடக்காத வகையில் வாழ்வில் எல்லாத் திக்குகளிலும் பண்பற்ற போக்கு நிறைந்து விடுகின்றது. அப்போது வழி தெரியாமல் திண்டாடும் நிலைத் தோன்றி அமைகிறது. அதை வெல்ல வேண்டுமானால் 'ஒழுக்க ஒளி'யைக் கொள்ள முயற்சி செய்ய வேண்டும்.

ஐந்து புலன்களின் வழியாக ஒழுக்கம் சிதைந்து கொண்டே வருகின்றது. பற்று மிகுந்து எழ பாவம் செய்ய முனைகின்றன இந்த உயிர்கள். திருநாவுக்கரசர் 'குணம்' (ஒழுக்கம்) என்பதை வழிபாட்டுக்குரிய ஒன்றாகப் புலப்படுத்துகின்றார்.

**வென்றா னைப்புலன் ஐந்தும்(எ)ன் தீவினை**
**கொன்ற னைக்குணத் தாலே வணங்கிட**
**நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்**
**ஒன்றா னைக்கண்டு கொண்டதென் உள்ளமே!** [12]

'அடங்காத ஐம்புலன்களை வெற்றிக் கொண்டு ஒழுக்கத்தை ஒளியாக ஏற்று வாழும் நெறியைத் தொடர்ந்து பின்பற்ற

வேண்டும். நல்ல மனதினைப் பெற்று ஞானமாக விளங்கும் இறைவனை ஒழுக்க நெறி நின்று தொழ வேண்டும்' என்று கூறுகிறார் திருநாவுக்கரசர்.

ஒளிவீசும் வாழ்விற்கு பற்றுக்கோல் தேவைப்படுகிறது அன்றோ? ஒழுக்கம் என்னும் ஊன்றுகோல் நிலையான வாழ்வை வகுத்துக் காட்ட வல்லதாகக் காணப்படுகிறது.

**இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்க முடையார்வாய்ச் சொல்** [13]

வாழ்வில் தள்ளாடித் தவிக்கின்ற போதில் சான்றோர் வாக்குகள் கொடி படர கொழுக்கொம்பு பயன்படுத்துவது போல, சொற்கள் ஊக்கத்தை அளித்து வாழ்வில் வீழ்ச்சியுறாமல் காக்க வல்லனவாக உள்ளன.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், திருவேகம்பமாலை, 13 |
| 2. | மேலது | மூன்றாவது கோயிற் திருவகவல், 24, ப.66 |
| 3. | மேலது | மூன்றாவது கோயிற் திருவகவல், 27, ப67 |
| 4. | மேலது | மூன்றாவது கோயிற் திருவகவல், 30, ப.67 |
| 5. | மேலது | மூன்றாவது கோயிற் திருவகவல், 33, ப.68 |
| 6. | திருநாவுக்கரசர் | தேவாரத் திருப்பதிகங்கள், திருஆரூர், பா.63 |
| 7. | மேலது | திருவானைக்கா, 31:314, ப.195 |
| 8. | மேலது | திருவிடைமருதூர், 15:1, ப.96 |
| 9. | மாணிக்கவாசகர் | திருவாசகம் |
| 10. | இராமலிங்க அடிகள் | திருஅருட்பா, கந்தகோட்டம், 1 |
| 11. | திருவள்ளுவர் | திருக்குறள், வாழ்க்கைத் துணைநலம், ப.45 |
| 12. | திருநாவுக்கரசர் | தேவாரத் திருப்பதிகங்கள், 98: 992, ப.549 |
| 13. | திருவள்ளுவர் | திருக்குறள், ஒழுக்கமுடைமை, ப.94 |

## இயல் - 11

# வாழ்க்கை

புதிய தோற்றங்களில் வாழ்வின் சிதறல்கள் மேலோங்கி வழிவகுக்கும்போது, உள்ளத்தின் ஆழ்மையில் ஏதோ ஒரு குரல் தோன்றி குமட்டுகிறது. சமயக் குரவர்கள் 'சில்வாழ் நாள்' என்று கூறுகின்றார்கள். தேங்கிப் போன குட்டையில் சேறுபடிந்து விடுவது போல வாழ்க்கையின் ஓரங்களில் புழுதிபடிந்து நாற்றம் வீசுகிறது. அந்தப் பழைய மண்ணின் ஓரத்தில் சேற்றுக் குளங்கள் எப்படியோ வளர்ந்து விடுகின்றன. மிகக் குறுகிய இவ்வாழ்வில் சமய நினைவுகளில் மூழ்கி 'இறைமை' வடிவில் தூய்மையைக் கண்டு வாழ வழி வகுத்துக் கொள்ள வேண்டும். திருஞானசம்பந்தர் வாழ்வு பற்றிப் பாடியுள்ளமை நோக்குதற்கு உரியது.

**வாழ்ந்த நாளும் இனிவாழு(ம்) நாளுமிவை அறிதிரேல்**
**வீழ்ந்தநாளெம் பெருமானை யேத்தாவிதி யில்லர்காள்**
**போழ்ந்ததிங்கட் புரிசையி னான்றன் புகலுரையே**
**சூழ்ந்த உள்ளம் உடையீர்க ரெங்கடுயர் தீருமே! [1]**

'ஓடி மறைந்த வாழ்நாளும், வாழ இருக்கும் நாளும், வீழ்ந்து போன நாளும் ஆகிய இவற்றை உணர்ந்து சூழ்ந்த நாளும் உடையதாக இருப்பதால், துயர்கள் எல்லாம் தீரும்' என்று கூறுகிறார்.

இங்கு 'முக்காலம்' என்னும் கொள்கை வலியுறுத்தப் படுவதைக் காணலாம். மனிதன் - வாழுகிற நாளும் - வாழ்ந்த நாளும் - வாழ இருக்கும் மூன்று காலங்களாகிய நிகழ்காலம் - எதிர்காலம் - இறந்த காலம் - ஆகிய இவற்றிற்கு அப்பாற்பட்டதாகிய வாழ்வை எண்ணிப் போற்றுவதால் இறைவனுடைய அருள் கிடைக்கப் பெறுகிறது. உண்மையை உணர வேண்டுமானால் - காலத்தைக் கடந்த - உருவம் இல்லாத - ஒரு பெயரும் இல்லாத - இறைவனைப் பற்றுக் கோடாகப் பெற்று வாழும் முறையை திருஞானசம்பந்தர் விளக்குகின்றார். 'எல்லாம் தீரும்' என்னும் சொற்றொடரில் இறைமை வழிபாட்டு

உணர்ச்சிக்கு அடித்தளம் அமைக்கப்படுவதைத் தெளிவாகக் காணலாம்.

## 1. வினை

சமயத் துறையைச் சார்ந்த துறவிகள் வினைவழி அமையும் வாழ்க்கையைப் பற்றிக் கூறி இருக்கிறார்கள். உலகப் பற்று மாயையை உருவாக்கும். மாயை பொய்யான காட்சிகளைத் தோற்றுவிக்கும்.அந்தப் பொய் வாழ்வில் எங்கு பகை இருக்கிறதோ - எங்கு வெடிப்பு இருக்கிறதோ - அங்கு வினை வழி வாழ்வு தோன்றி அமைந்து விடும். கண்ணில் பார்வை காணும் காட்சிகளில் தெளிவற்றப் போக்குகள் காணப்படுவதுண்டு. அதில் இருந்து விடுபட வேண்டுமானால் வினையைப் பற்றிய அறிவு வேண்டும். ஆகையால்தான் திருநாவுக்கரசர் மனித வாழ்வில் படிந்து கிடக்கும் வினையின் வேகத்தை அளந்து பாடியுள்ள போக்கு உள்ளது.

*புற்றி னாரரவம்புலித் தோல்மிசைச்*

*சுற்றி னார்சுண்ணப் போர்வைகொண்டார்சுடர்*

*நெற்றிக் கண்ணுடை யாரிவர் நின்றியூர்*

*புற்ற னாரைப்பற் றாவினை பாவமே!* [2]

'புற்றின் உள்ளே புகுந்து வாழும் பாம்பினை புலித்தோல் மேல் சுற்றியவரும், வெள்ளிய திருநீறு பூசிய மேனியினரும், சுடர் நெறிக் கண்ணை உடையவரும் ஆகிய இறைவன் அமர்கின்ற நின்றியூரைப் பற்றிய அன்பர்களை, வினைகளும் அவற்றால் வரும் பாபங்களும் பற்றமாட்டா' என்று எளிதாகப் புரியும் வகையில் வினைப் பற்றிய கருத்தோட்டத்தை அமைத்துக் காட்டுகிறார் திருநாவுக்கரசர்.

சிவனுடைய தோற்றம் - சிவனுடைய ஆற்றல் - சிவனுடைய அழகு - ஆக எல்லாம் ஒருங்கு சேர்ந்து வினையை நீக்கி - வினையைப் போக்கி - வினையைத் தாக்கி - உயிர்களை ஆட்கொள்ளும் முறையை அழகான சொற்றொடர்களினால் விளக்கியுள்ள போக்கு வெளிப்பட்டு நிற்கிறது. இதுவே வினையை இறைவன் அழித்துக் காக்கும் காட்சி ஆகும்.

## 2. தண்மை

உலக வாழ்க்கை தண்மையில் ஆழ்ந்திருக்க வேண்டும். அப்போதுதான் துன்பம் என்னும் வெம்மையில் இருந்து

விடுபட்டு அன்பு என்னும் தண்மையில் இறைவனைக் காண முடியும். சமயக் குரவர்கள் கடவுள் வாழ்வதற்குரிய இடமாக குன்றுகளையும் - அக்குன்றுகளில் குதித்து ஓடும் தண்மையான அருவிகளையும் - சோலைகளையும் ஆக்கி இருக்கிறார்கள். மாலை நேரத்தில் மங்கிய கருத்திருட்டு பாவும் வேளையில் தெய்வத்தைத் தொழுதற்கு சான்றோர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அந்த மாலைப் பொழுதில் தண்மையின் துளிகள் பரவிச் செல்கிறது.

திருநாவுக்கரசர் திருக்கழிபாலையில் தங்கி அருள்புரியுமாற்றைக் காட்டுகின்றார்.

**வண்ண மும்வடிவுஞ்சென்று கண்டிலன்**
**எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலன்**
**கண்ணு லாம் பொழில் சூழ்கழிப் பாலையெம்**
**அண்ண லேயறி(வு) ஆனவன் தன்மையே** [3]

இது கழிப்பாலை பெருமான்மேல் காதல் கொண்டு வருந்தும் ஒருத்தியை ஆற்றுவிக்கக் கருதும் செவிலித்தாயின் கூற்றாக அமைந்துள்ள பாடல். ''நேரே கழிப்பாலைக்குச் சென்றும் காண முடியவில்லை. ஆகையால், காணாமலே காதல் கொண்ட தன்மை விளக்கப்பட்டுள்ளது. உள்ளத்தில் கழிப்பாலை இறைவனையே நினைத்து வழிபட்டு அமைதி பெற்ற பாங்கினை திருநாவுக்கரசர் நன்கு விளக்கியுள்ளார். இறைவன் தங்கி இருக்கும் இடம் கழிப்பாலை ஆகும். அது பொழில்களால் சூழப்பட்டு - சோலைகளால் சூழப்பட்டு - குளிர்த்தென்றல் - தண்காற்று - வீசுகின்ற இடமாக அமைந்துள்ளது. 'வெம்மையான காற்று வீசும்போது ஓய்வு பெற குளிர்சோலையுள் - தண்மை மிகுந்த மலர்ச்செடி நிறைந்த பொழில்களில் தங்கி மெள்ள வழிபாடு செய்து திரும்ப வேண்டும் என்னும் ஆழ்ப்பொருளை அமைத்துக் காட்ட வல்லதாய் உள்ளது. ஆகையால், உணர்ச்சிப் பெருக்கில் குளிரும் தன்மை - வாழ்த்திப் பாடும்போது உண்டாகும் தன்மையில் கலந்து கரைந்து காணப்படுவதை அறியலாம்.

## 3. தாழ இருத்தல்

வாழ்த்துவதும், வணங்குவதும் பக்தர்களின் தலையாய பணியாகும். நேரந்தவறாமல் புனிதமான இறைவனின் திருவடிகளையே எண்ணி வாழ்வதென்பது இன்றியமையாத இயல்புகளில் ஒன்றாகும். காமசேட்டைகள் - கலங்கலான எண்ணங்கள் - கசடாக மாற்றம் பெறல் - இவைத் தீமையான

வழிவகைகளையே தோற்றுவிக்கும். தான் என்னும் அகந்தை (Ego) தோன்றி தவறான வழியில் செல்ல வேண்டிய நிலை ஏற்படக்கூடும். அப்போதெல்லாம் தாழ இருந்து பக்தி வயப்படுகின்ற மனதைப் பெற வேண்டும்; அகங்காரத்தால் இறைவனை நிந்தித்தல் கூடாது. இறைவனின் பெயரை நாவில் கூறிக் கொண்டே தாழ்ந்திருந்து - சரணாகதியில் நின்று - தொழ வேண்டும்.

பட்டினத்தார் நெஞ்சம் நெகிழ்ந்து பாடுகிறார்.

***பூதங்கள் அற்றுப்பொறியற்றுச் சாரைப் புலன்களற்றுப்***
***பேதை குணமற்றுப் பேராசைத் தானற்றுப் பின்முனற்றுக்***
***காதங் காணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே***
***ஏதங் களைந்(து) இருப் பேன்நின்ற வா? கச்சி ஏகம்பனே!*** *

'பஞ்ச பூதங்கள் முதலியவை ஒழிந்து ஈசன் என்கின்ற நாமத்தையும் பொருட்டினையும், சக்தியின் சிறப்புகளையும், தாமரை மலரினின்று வருகின்ற மகரந்தப் பொடியின் மணத்தையும் போற்றிச் செருக்கின்றி - தாழ்மையில் இருந்து வழிபட வேண்டும்' என்று பட்டினத்தார் பாடி இருப்பது எண்ணி வாழ்க்கையில் பின்பற்றுவதற்குரியதாக உள்ளது.

உலகப் பொருட்களின் மேல் இச்சைக் கொண்டு உண்மையை மறந்து விட்டு வாழ்வதில் ஒரு பயனும் இல்லை. தன்னைத் தானே, தற்புகழ்ச்சியில் ஈடுபாடு கொண்டு - மகிழ்ச்சியுற்று, அடுத்தவர்களின் நினைவு இன்றி தறிகெட்டு வாழ்வது, நல்ல வாழ்க்கை ஆகாது. தன்னடக்கத்தோடு - குவிந்து - குழைந்து, இறை அன்பில் மூழ்கி - இறைமையைச் சார்ந்து நெறியோடு - அறிவோடு வீழ்ந்து போன வாழ்வின் பக்கங்களை ஆக்கி - நிறுத்தி வாழ முயல வேண்டும். இதுதான் இறைவனுக்கு உயிர்கள் ஆற்றும் அரும்பணி ஆகும்.

நீண்டு செல்லும் வாழ்க்கைப் பயணத்தின் உயிர்கள் கடலில் ஓடும் படகுபோல் ஆகித் தள்ளாடித் தவிக்கிறது. அலைமோதி வரும் துன்பங்கள்- ஏய்ப்புகள் - ஏமாற்றங்கள் - எல்லாம் ஒன்று சேர்ந்து மனிதர்தம் வாழ்வினை நிறுவுகிறது. வெள்ளம் வரும்போது இந்த அற்ப உயிர்கள் தள்ளாட்டத்தில் சிக்கித் திணறுகிறது. ஆகையால், கட்டுக்களில் இருந்து விடுபட்டு உயர்ந்து வாழ முயற்சி செய்ய வேண்டும். திருநாவுக்கரசர் இதனைக் கோடிட்டுக் காட்டுகிறார்.

**குறைவி லோங்கொடு மாநுட வாழ்க்கையாய்**
**கறைநி லாவிய மண்டனென் தோளினன்**
**மறைவி லாள்மயி லாடுதுறையுறை**
**இறைவன் நின்கழல் ஏத்தி இருக்கவே [5]**

திருநீலகண்டனும் எட்டுத் தோளினவனும் வேதம் வல்லவனுமாகிய மயிலாடுதுறை உறையும் நீண்ட கழல்களை ஏத்தி இருந்தால் கொடிய மானிட வாழ்க்கையால் வருகின்ற குறைவு சிறிதும் இல்லாதவராவோம் என்று நிறைவான மனதுடன் வாழ்க்கையைப் பற்றித் திருநாவுக்கரசர் பாடியுள்ளமை உற்று நோக்குதற்குரியது ஆகும்.

எல்லா வகையான அழகுகளும் கெட்டு நிறைவுற்ற ஒரு கொந்தளிப்பில் சிக்கி நடுங்கும் படகுபோல் வாழ்க்கை அமையக் கூடாது. புயல் என்னும் போர்கள் வந்தாலும், அவற்றினை வென்று வாழ வல்ல ஒரு ஆற்றல் இறைவன் வழியாக மனிதனுக்குக் கிடைக்க வேண்டும். இதுவே தெளிவின் முதற்கட்டம் ஆகும்.

## 5. விளக்கம்

உலகம் முழுவதும் வாழும் மனிதர்களின் வாழ்வு இருவகையாகப் பிரிக்கப் படுகிறது. பெருங்கட்டிடங்களைக் கட்டி - உயர்ந்த கோபுரங்களை எழுப்பி இறைவனை வழிபடும் தன்மை ஒரு புறம். சின்னஞ்சிறிய குடிசையில் இறைவனை அமர்த்தி நெஞ்சில் நிறைவுடன் கும்பிட்டு வாழ்வது முன்னதாக விளக்கப்பட்ட முறை 'படாடோப' முறை வழிமுறை ஆகும். இரண்டாவதாகச் சுட்டுவது அடக்கமுடன் இறைவனை வாழ்த்துவது ஆகும். திருநாவுக்கரசர் இக்கருத்தை விளக்கி, மென்மையான உணர்ச்சிக் கலவையுடன் அடங்கி இருந்து இறைமையின் அருளைப் பெற முயலுதல் வேண்டும் என்று கூறி இருப்பது போற்றுதற்குரியதாகும்.

**தமக்கு நல்லது தம்முயிர் போயினால்**
**இமைக்கும் போது இராதிக் குரம்பைதான்**
**உமைக்கு நல்லவன் தானுறை யம்பதி**
**நமக்கு நல்லது நல்ல மடைவதே [6]**

'தம்முயிர் தம்மை விட்டு நீங்கினார் தமக்கு நல்லது. அவ்வாறே இவ்வுடலாகிய குடிசை இமைப் பொழுது கூட நில்லா

இயல்புடையது. உமாதேவிக்கு நல்லவனாகிய இறைவன் பதியாகிய திருவல்லம் என்னும் தலத்தை அடைந்து வழிபடுவதே நமக்கு நல்லது ஆகும் என்ற வகையில் பாடி இருக்கிறார் நாவுக்கரசர். இக்கருத்து இறைவனை வழிபாடு செய்யும் போதெல்லாம், இமைப்பொழுதும் சோராமல் இருக்க வேண்டும்' என்று பக்தி நிரம்பிய உள்ளத்துடன் பாடுவதைக் காணலாம்.

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| *1.* | திருஞானசம்பந்தர் | தேவாரத் திருப்பதிகங்கள் *115*, திருப்புகலூர் *2* |
| *2.* | திருநாவுக்கரசர் | தேவாரத் திருப்பதிகங்கள் *23:3*, ப.*145* |
| *3.* | மேலது | திருக்கழிப்பாலை *40*, ப.*337* |
| *4.* | பட்டினத்தார் | பட்டினத்தார் பாடல்கள், *31* ப.*127* |
| *5.* | திருநாவுக்கரசர் | தேவாரத் திருப்பதிகங்கள், *390* |
| *6.* | மேலது | தேவாரத் திருப்பதிகங்கள், *429* |

## இயல் -12

# தற்காலத் தாக்கம்

# மௌனிசம்

உலக மக்களுடைய வாழ்க்கையில் இருபதாம் நூற்றாண்டு ஒரு புதிய விடிவெள்ளியைத் தோற்றுவித்திருக்கும் முறை ஆய்வற்குரிய ஒன்றாக அமைந்திருக்கிறது. மனித பண்பாட்டில் 'மௌனம்' என்னும் பண்பு விரிவடைந்து ஆன்மீகத்துறையில் புதுவழி புகுத்தி வளர்த்த போக்கு நன்றாக அமைந்துள்ளது. இரண்டு உலப் போர்களும் மனித இனத்திற்குத் தக்கதொரு பாடத்தைப் புகட்டியுள்ளன. புற வளர்ச்சிகள் வெகுவாகப் பெருகி வந்தாலும் அகவெளியில் இருளடர்ந்த பகுதிகளே மிக அதிகமாக ஏற்பட்டு அமைந்துள்ளது.

இந்த நூற்றாண்டில் வேகம் அதிகரித்து உள்ளதைக் காணலாம். போக்குவரத்துத் துறைகளிலே புதிய கண்டுபிடிப்புக்கள் வந்த வண்ணம் இருப்பதால் விரைவு அதிகரித்து வருகின்றது. சிற்றூர்கள் எல்லாம் ஊர்திகளின் வருகையால் மிகவும் குறுகி அருகருகே வந்திருப்பதைக் காணலாம். இந்த ஊர்திகளின் தன்மையால் 'ஓசை' ஒருபக்கம் வேகமாகப் பல்கி வருவது கண்கூடாக உள்ளது. மாட்டு வண்டிகளில் உடல் நோக - துன்பம் பெருக - பயணம் செய்த காலம் போய், பேருந்துகளிலும் - மின்சார வண்டிகளிலும்- விமானங்களிலும் பயணம் செய்து வாழக் கூடிய தன்மை வந்து அமைந்துள்ளது. ஆகையால்தான், இந்த இருபதாம் நூற்றாண்டில் மௌனம் ஒரு தனி 'இசம்' ஆக மாறி 'மௌனிசம்' என்னும் கொள்கை ஒரு புது காலத்தையே உருவாக்கி அமைந்திருப்பதைக் காணலாம். இந்த 'மௌன சமயம்' சங்க இலக்கியமாகிய புறநானூற்றிலே இருந்து புலவர்களால் வளர்க்கப்பட்டு வந்த போக்கைத் தெளிவாகக் காணலாம்.

## 1. மௌன அழகு

மௌனம் அழகானது; ஆரவாரமில்லாதது; ஆழ்கடலின் அமைதியைப் போன்றது. மலையடிவாரத்தில் காணப்படும் காடுகளின் உள்ளே காணப்படும் அகண்டகாரமான அமைதியைப் போன்றது. அங்காடிகளில் பேரோசை அடங்கப் பெற்று ஆழ்மை உடையது. அருவிகளின் ஓரங்களில் அழகிய இன்பத்தைத் தருவது. திடீரென்று வெடித்து வெண்பஞ்சு வெளியே வருவது போல, எஞ்சாமல் எதிர்வருவது மௌனம். காலை நேரங்களில் வெண்துளி மஞ்சுபோல் வெளிறிக் காணப்படுவது அது. விண்ணில் இருந்து பொழிகின்ற மழைத்துளியின் தன்மைபோல் மென்மையானது. வயல்வெளி ஓரங்களில் பசுமையான நெற்பயிரின் தன்மைபோல் கண்ணுக்குக் குளிர்ச்சியைத் தருவது. மலைமுகடுகளின் மடியில் அமைதியாகப் படுத்துறங்கும் வெண்மேகங்களைப் போன்றது மௌனம். நந்தவனங்களில் பூத்துக்குலுங்கும் மலர்க்காட்சிகளைப் போன்றது மௌனம். மண்ணிலே படர்ந்த முல்லைக் கொடிக்குத் தேர் அளித்து விட்டு நடந்த வந்தான் அல்லவா பாரி மன்னன்? அவனுள்தான் எத்தனை மகிழ்ச்சி; எத்தனை இன்பம்? எவ்வளவு ஆர்வம்? எவ்வளவு பொறுமை; எவ்வளவு அருளுணர்வு. ''காற்றில் அலைந்த முல்லைக் கொடியின்பால் அருள்கொண்டு, அது கொழுகொம்பாகப் பற்றிப் படரும் பொருட்டுதான் ஊர்ந்து சென்ற தேரை் தந்தவன்''[1] இதற்குப் பெயர்தான் மௌனம். துன்பம் துயரம் (Troubles and Difficulties) எங்கு மிகுதியாக உள்ளதோ, அன்புணர்ச்சியும் ஆதிக்கத்தால் எங்கு ஆழ்ப்புண்மிகுந்துள்ளதோ அதுவே மௌனம். உள்ளத்தின் ஆழ்மையில் வாழ்க்கை நடையே மாறி, புண்ணுமிழ்க்குருதி[2] வருவதுதான் மௌனம்.

மேகக் கூட்டங்களில் இடர்ப்பாடுகளுக்குப் பின்பு மழை பெய்தபின் தங்கும் பேரமைதிதான் மௌனம். திரை அரங்கில் ஒவ்வொருவராக கூடுவது போன்றது அலைச்சல்; ஆனால், காட்சி முடிந்து திடீரென்று அனைவரும் வெளியேறும்போது கொட்டகையில் நிலவுவதுதான் மௌனம்.[3] இந்த உலகம் தோற்றம் பெறுவதும் மௌனத்தால்தான். நெடுங்காலங்களில் ஓங்கி உயர்ந்து நிற்கும் மரங்கள் இருக்கும். காற்றும் வீசும் போது 'சோ' என்ற ஓசையை அவை எழுப்பும். ஆனால், சிறிது நேரத்தில் வானத்தில் மேகக்கூட்டங்கள் கலைந்து பூரண அமைதியில் திளைத்து ஆழ்மையான மௌனத்தில் இருக்கும்.

ஓசை எங்கு இருக்கிறதோ அதற்குப் பக்கத்திலேயே அருகிலேயே மௌனம் இருக்கும். புரட்சி க்குரல்கள் எப்போதும் ஒலித்துக் கொண்டேயிருப்பதில்லை. மலைகளின் நடுவில் கோடைக் காலங்களில் மஞ்சும் புல் அடர்ந்து வளர்ந்திருக்கும். அவை திடீரென தீப்பற்றி எரிந்து மலை முழுதும் பரவி விடும். அப்போது தூரத்தில் இருந்து பார்த்தால் மலையே தீப்பற்றி எரிவது போலிருக்கும். ஆனால், அங்கே மழைத்துளிகள் விழும். நெருப்பின் - தீயின் கதிர்கள் அடங்கப்பெற்று மலையோரங்களில் பேரமைதி நிலைக்கும். அதுதான் மௌனம். பக்தி இறைவனைப் பற்றிய இரைச்சல் எங்கும் சில நேரங்களில் தோன்றுவது உண்டு. ஆனால், அதே இடத்தில் எவ்வளவு மௌனம் தோன்றுகிறது? அதுதான் மௌனம். இந்த வயிற்றுக்கு உணவு இல்லாத நேரங்களில் - வயிறு பசியால் வாடும் போது ஊர் ஊராக பட்டினியால் மக்கள் சாகும்போது மௌனமாய் உள்ளம் நெருப்பைச் சிந்துவது இல்லையா? அதுவே மௌனம்.

தீயின் கதிர்கள் கோடைக்காலங்களில் நூற்றுக்கணக்கான குடிசைகளை நாசப்படுத்தும்; அழிக்கும்; அலைச்சல் வைக்கும். ஆனால், தீயணைப்புப் படையினர் வந்ததும் சில மணி நேரங்களில் தீயின் பேரோசை அடங்கி எவ்வளவு மௌனம் அங்கே நிலவுகிறது? அதுதான் மௌனம். தீ விபத்தில் சிக்கி அழிந்தவர்கள் தங்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பாமல் பசித்திருக்கும் வயிற்றுக்குச் சோறு இன்றி பிச்சை எடுக்க அனுப்பி விடுகிறார்கள். அவர்களுடைய வாழ்வு மௌனமாக அழிகிறது அல்லவா? ஆகையால்தான் பாரதி ''பசிக் கொடுமையை ஒழிக்க வேண்டும்'' என்று காதில் படும்படி பாடுகின்றார். அந்த மௌனமானது எத்தனைக் கோடிப் பேர் இந்த நாட்டில் பசியின் பிடியில் சிக்கித் துன்பப்படுகிறார்கள். எத்தனை அழகாகப் பசியினை மறைத்து வாழ்கிறார்கள். அது மௌனத்துயர் அல்லவா? ஆகையால்தான் பாரதி பாடுகின்றார்

**''வயிற்றுக்குச் சோறிட வேண்டும் - இங்கு**
**வாழும் உயிர்களுக்கெல்லாம்''** [4].

வயிற்றுப் பசித்தீ ஓங்கினால் மனித நெஞ்சம் பொய்க்கூற புறங்கூறத் தொடங்கி விடுகிறது. இவ்வாறு புறங்கூறுவது ஓசையாகும்; ஆனால், இதனை மறுத்து அறத்தோடு வாழ்ந்து ஆரவாரமில்லாமல் சாதலில் வீழ்வது எவ்வளவு நன்மை தரும். அதைத்தான் வள்ளுவர் மௌனம் அல்லது சாவு என்று கூறுகிறார்.

**புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்**
**அறங்கூறும் ஆக்கம் தரும்''** [5]

பூஞ்சோலை அழகின் உருவில் அமைந்திருப்பது. அந்த அழகில் மௌனம் உண்டு. விடியற்காலை நேரத்தில் எழுந்து மலர்களைக் காண தோட்டத்திற்குச் செல்லும் போது மௌனமான மணம் பொங்கிப் பெருகி தூய்மையையும் துவளாத ஊக்கத்தையும் அள்ளித் தெளிக்கிறதல்லவா? மாலை நேரத்தில் கருக்கிருட்டுப் பரவும் நேரத்தில் - மழைத் தூறலோடு மஞ்சும் இணைந்து சிதறும்போது தோன்றியமையும் மௌனமானச் சூழலுக்கு என்ன பொருள்? அழகென்பதா? அருள் என்பதா? இறைமை என்பதா? இங்கிதம் என்பதா? அடர்ந்த முல்லை நிலக் காடுகளின் ஓரங்களின் இதழ் வடிவில் பூத்து வர்ண வாகையாக உறங்கிக் கொண்டிருக்கும் மனோரஞ்சித மலர்களின் சிலிர்ப்பை என்னவென்பது? அந்த மலர்கள் வேடிக்கையானவை! விசித்திரமானவை! விந்தையானவை! அவற்றின் உருவம் கண்களுக்குத் தென்படுவதில்லை. ஆனால், சுற்றுப்புறமும் சூழலும் அந்த மலரின் மணத்திற்குள் அடங்கி விடுகிறதல்லவா? பதுங்கி விடுகிறதல்லவா? மூழ்கி விடுகிறதல்லவா? அதுதான் மௌனம். அந்த அழகு ஈர்ப்பு இல்லாத அழகு! கண்ணுக்கு வெறும் இலையைப் போல் தெரிந்து மணத்தை மட்டும் வாரியிறைக்கும் மௌன அழகு.

## 2. மௌனம் - துயரம்

மௌனம் கார்காலத்தைப் போன்றது. பனிகொட்டும் மழைக்காலத்தில் பலாவை மிக உடையதுபோல, ஏற்புடைய எடையை உடையனவாய் இசைக்கருவிகளை உடையனவாய்க் கருமதம் மிக்கு வளர்ந்த இடமகன்ற பக்கமலையில், படுக்க வைத்தாற்போன்ற கற்பாறைகளின் பக்கத்தில், அந்த இடத்தில் காணப்படும் சிறிய வழியில், தொடுத்த அம்போடு துணையுடன் இருக்கும் கணவர் எல்லாரும் எவ்வளவு மகிழ்ச்சியுடனும் மௌனமுடனும் வாழ்கிறார்கள். காடுதான்; காட்டு மக்கள்தான்; கானவர்கள்தான்! வேட்டையாடுவோர்தான்; வில் அம்பு உடையவர்கள்தான்; ஆனாலும் நல்லவர்கள்! வல்லவர்கள்!

''கார்கோள் பலவின் காய்த்துணர் கடுப்பு
நேர்ச்சீர் சுருக்கிக் காய கலப்பையீர்
கடுக்கலித்து எழுந்த கண்ணகன் சிலம்பின்
எழுத்து நிறுத்தன்ன இட்டரும் சிறுநெறி
தொடுத்த வாளியர் துணைபுணர் கானவர்'' [6]

மௌன தத்துவம் சங்க இலக்கியத்தில் அமைந்துள்ளது. மன்னர்கள் மௌன தத்துவத்திற்கு உயிரளித்து இருக்கிறார்கள்.

''உண்டி முதற்றே உணவின் பிண்டம்'' [7] என்று மௌன தத்துவத்தை மன்னர்கள் வளர்த்திருக்கிறார்கள். மக்களுக்கு உறையுள் இல்லாமல் இருக்கலாம். சிற்றாடை ஒன்றினை இடுப்பில் கட்டிக் கொண்டு வாழலாம். ஆனால், வயிற்றுக்கு உணவில்லாமல் வாழ முடியுமா? மன்னாதி மன்னர்கள் சங்க காலத்தில் உடல் வளர - உயிர் ஓங்க - உணவளித்தப் போக்குக் காணப்படுகிறது. நாட்டின் வளர்ச்சி இளைஞர்களின் கரத்தில் உள்ளது. இளமை சோர்வுற்றால் - இளமை அயர்ச்சி உற்றால் - இளமை கலங்கிப் போனால் - இளமை கண்ணீர்விட்டால் நாடு வாழாது; நாட்டின் பாதைகள் சீர்குலைந்துவிடும். ஆகையால்தான், பாரதிதாசன் இளைஞர்களுக்கு அறிவுரை வழங்கும்போது,

பீடுற்றார் மேற்கில் பிறநாட்டார் என்பதெல்லாம்
கூடித்தொழில் செய்யும் கொள்கையினால் தோழர்களே! [8]

என்று பாடி வைத்துள்ளார். கூடித் தொழில் செய்ய வேண்டும். மௌனமாய்க் கடமையை ஆற்ற வேண்டும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று மௌனமாய் நாட்டு நலத்திற்காகப் பணியாற்ற வேண்டும்; இக்கருத்து - உண்டி கொடுத்தாலும் - கூடியிருந்து தொழில் செய்வதும் - பசுமைப் புரட்சியையும் (Green Revolution) தொழிற் புரட்சியையும் (Industrial Revolution ) சுட்டிக்காட்டுகிறது. சங்ககால மன்னர்கள் பொறுமையாய் - மௌனமாய் கடமை ஆற்றியிருக்கிறார்கள். அவர்கள், தாங்கள் செய்த நற்பணிகளைத் தம் வாயால் சொல்ல மறுத்து விட்டார்கள். ஆகையால்தான் அந்த மௌன வீரர்களின் தொண்டையும் போர் பற்றியும், சமூக வளர்ச்சிகளையும், வாழ்வின் முன்னேற்றங்களையும் அவர்களைக் சுற்றியிருந்த புலவர்கள் - சான்றோர்கள் பாடி வைத்திருக்கிறார்கள். 'கடமையைச் செய்து மற்றதை இறைவனிடம் விட்டுவிடு' என்னும் கீதை கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. ஓசையில்லாமல் சத்தமில்லாமல் மௌனமாகப் பணியாற்றிட வேண்டும்; ஆகையால்தான் உடம்பும் உயிரும் படைத்திருக்கிறாரே [9] என்று மௌனக் கொள்கையைப் பற்றி பரப்பியிருக்கிறார்கள் புரவலர்கள். புலவர்களை அன்பு காட்டி, வழிகளைப் பரப்ப முயன்று மன்னர்கள் வெற்றி பெற்றார்கள். ஆட்சிமுறையில் அமர்ந்து அழகான முறையில் காட்சிகளைக் காட்டுகிறார்கள். உண்மையாக உயர்வாகப் படைத்துக் காட்டி முயன்றார்கள். உற்றார் உறவினர்கள் குற்றம் செய்தாலும், அவர்களுக்கு அறவழி நின்று வழிகாட்ட வேண்டும். நீதி வழிகாட்ட வேண்டும். செல்வாக்கும் செல்வமும் நிறைந்தாலும்

அறநெறிவழி நின்று மௌனமாய் அறிவு புகட்டி - அவலம் போக்கி - வாழ வைத்தார்கள்.

'புறம்' போன்ற நூல்கள் நெஞ்சின் நினைவில் உண்மையாக உறவினைக் கற்பித்து அறம் கூறவல்லது. அரசர் - புலவர் - மக்கள் என்ற முக்கோண வடிவில் அறம் காட்ட முயல்கிறது புறம். இந்நூல் வீரத்தை மட்டும் காட்ட முன்வரவில்லை. வெட்சி, கரந்தை.... போன்ற வீரவாழ்வை மட்டும் காட்ட இயற்றப்படவில்லை. தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகியவற்றின் வீரத்தாககுதலை மட்டும் காட்ட இயற்றப்படவில்லை; வில், அம்பு, வேல், ஈட்டி, வாள் போன்ற போர்க்கருவிகளையும், அவற்றின் அழிவு விளைவையும் வீரர்களின் ஆற்றல் போக்குகளையும் மட்டும் காட்ட எழுதப்படவில்லை. ஆனால், மன்னர்களின் நெஞ்சத்தை - நெஞ்சினுள் புதைந்து கிடக்கின்ற கடமை உணர்ச்சியைக் காட்ட இயற்றப்பட்டது. விளம்பரங்களும் ஆடம்பரங்களும் அதிகமாக வைத்துக் கொள்ளாமல் மக்களின் துன்பங்களை மௌனமாகப் போக்கும் தன்மையும் அதில் காட்டப்பட்டுள்ளது.

## 3. மௌன ஆட்சி

சங்ககால மன்னர்கள் புலவர்களை அறிவுரை கூறவும் அறவுரைப் பெறவும் வைத்துக் கொண்டிருந்தனர். 'ஈதல், இசை பட வாழ்தல்' என்ற கொள்கையைப் பின்பற்றினார்கள். பெரும்பாலான புலவர்கள், கொடைபெறச் சென்றாலும் சில சான்றோர்கள் மன்னர்களின் இணைநிலையினைப்பாடி இருக்கிறார்கள். அப்படிப் பாடும் போது மன்னர்களின் புகழையும், பெருமையையும், குலத்தினையும், தொண்டுகளையும் போர் ஆற்றும் முறையினையும் பாடி வைத்திருக்கிறார்கள். ஏன் அவ்வாறு பாடினார்கள் என்பதற்குச் சில மௌன காரணங்களைக் காணலாம்.

அ. அன்றைய காலகட்டத்தில் மூவேந்தர்கள் பெண், பொன், மண் ஆகியவற்றிற்கு ஓயாது போர்புரிந்து கொண்டிருந்தார்கள். இரண்டு மன்னர்கள் கூடியிருந்து ஒருவருக்கொருவர் துணைநின்று கடமை ஆற்றுவது வியப்பிற்குரியதாக இருந்தது. ஆகையால்தான், சோழன் இராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டிய வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருமுறை அரசவையில் கூடியிருந்த காட்சியைப் போற்றுகின்றார்.

ஆ. அரசியல் ஆட்சி முறை பற்றி அறிய, ஒருவர் திறமையை மற்றவர் புரிந்து கொள்ள இரண்டு மன்னர்கள் ஒன்றாகக் கூடி இருந்தார்கள்.

இ நட்பு முறையில் மலைச்சாரலுக்குச் செல்லவும், வேட்டையாட விரும்பியும் இருமன்னர்கள் ஒன்றாக இருந்தார்கள்.

ஈ ஆற்றுநிலைப் பற்றிக் கூறி நாட்டு வளத்திற்குச் சான்றாக இருக்க இருமன்னர்கள் ஒன்றாக இருந்தார்கள்.

உ. ஒற்றுமையே வலிமை என்பதை மௌனமாக வெளிப்படுத்தி பகைவர்க்கு எச்சரிக்கைக் கொடுக்க இரண்டு மன்னர்கள் இருந்தார்கள்.

ஊ. புறநானூற்று மன்னர்கள் பல வேளைகளில் மௌனம் காட்டி இருக்கிறார்கள். களத்தில் தோல்வியுற்றால் ''மாங்குடி மருதன் தலைவனாகப் புலவர்கள் என் நாட்டைப்பாடாது விடட்டும்'' என்று கூறும்போது மௌனக் கொள்கை இடம் பெறுகிறது. என் நாடு பற்றி - என் போர் பற்றி, ஆற்றலைப் பற்றி - என் அரசியல் நாணயம் பற்றி - நானே கூறுவதா? அது இழுக்கு. ஆகையால், மாங்குடி மருதன் என்னும் புலவர் பாடட்டும்' என்று மௌனமாக மறைமுகமாகக் கூறுகிறான் மன்னன்.

எ. புகழ்பாடிய புலவர்கள் ஏட்டின் வாயிலாக - நூல்கள் வாயிலாகப் பாடப்புகுந்தார்கள். நூல்கள் வாயிலாக அறிவு பெற்றும் மன்னர்களின் ஆட்சித்திறன் - படை வலிமை ஆகியவற்றை நூல் வாயிலாக உயர்த்திக் காட்டினார்கள். நூல்களை இயற்றும்போதும், படிக்கும் போதும் ஆர்வமும் அதிசயமும் பட்டார்கள். ரஷ்யநாட்டு அறிஞர் 'மாக்சிம் கார்க்கி ''நான் படித்த ஒவ்வொரு நூலும் எனக்கு எத்தகைய மகிழ்ச்சியையும் ஊக்கத்தையும் அளித்தது என்று என்னால் கூற முடியவில்லை. ஒவ்வொரு நூலும் உலகைப்பற்றி அறிய உதவும் சன்னல்களாக எனக்குப் பயன்பட்டன. மக்களைப் பற்றி அறிய பயன்பட்டன. உணர்ச்சிகள் எண்ணங்கள் உறவுமுறைகள் ஆகியன பற்றி அறிய பெரிதும் துணை நின்றன.'' [10]

ஆகையால், சங்க கால மன்னர்கள் புலவர்களின் அவைகளைப் போற்றி வளர்ந்து வாழ்கிறார்கள். புலவர்கள்

இணைந்து இருந்த மன்னர்களின் சிறந்த நட்பைப் போற்றி வளர்த்தார்கள். அவர்கள் நட்பு ஒரு மௌனமல்லவா? அவர்களுடைய அன்பு ஒரு மௌனம் அல்லவா? விழி அமைப்புகளிலே வீர விளையாட்டுகளிலே - மௌனம் காட்டியவர்கள் சங்ககால மன்னர்கள்.

## 4. மௌன நட்பு

''**சோழன் குரோப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவன் காவிரி நாட்டுத் தலைவன்**''[11] இவ்வாறு ஒரு வரியில் சோழனைப் பற்றிக்கூற மௌனம் ஆகிவிடுகிறார் கவிஞர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். புலவர்கள் செல்வம் கண்டு போற்றுகிறவர்கள் இல்லை. அரசியல் வெற்றிகண்டு புகழுகின்றவர்கள் இல்லை. மன்னன் வீரம் கண்டு அதிகமாகப் போற்றுகிறவர்கள் இல்லை. ஆனால், நீதியுணர்ந்து, நட்பு கண்டு வாழ்த்துகின்றவர்கள் ஆவார்கள். சோழன் வளமான காவிரி ஆற்று மன்னன். காவிரி ஆற்று இயற்கை அழகு நிரம்பியது. எப்போதும் நீர் ஓடி வளத்தினைக் கூட்டுவது. காரிக்கண்ணனார் புதிய உத்திமுறை ஒன்றை இங்கே பயன்படுத்தினார். நாற்படைக்கு தலைவனே என்று கூறவில்லை. மைஉன்கண் பெற்ற பெண்டிற்குத் தலைவன் என்று புகழவில்லை. வீரம் மிகுந்து போரில் வேகம் காட்டும் ஆண்மையாளன் என்று போற்றவில்லை. விழிப்பார்வைக்கு அழகானவன் என்று சொல்லவில்லை. ஆனால், காவிரி ஆறு பாயும் நாட்டுக்குத் தலைவனே என்று விளக்கிக் கூறுகிறார். நாட்டின் வளம் நீரை முன்வைத்துத்தான் சிறப்பிக்கப்படுகிறது. நீர்நிலைகள் இல்லாத ஊர் வளமையற்று குன்றி வாடிப்போய்விடும். ஆகையால், காவிரித் தலைவன் என்று உரைக்கின்றார்.

பகை மன்னர்கள் நாட்டின் மேல் படையெடுப்பதற்கு முன்னால் மன்னனைத் தோல்வி காணச் செய்ய ''நீரும் தாரும் தா'' என்று கேட்பார்கள். கொடுத்தால் அது வீரமற்ற செயல். மனோன்மணியம் நாடகத்திலே கூட ஜீவகமன்னன் தன்படை வீரர்க்கு வீரவுரை நிகழ்த்தும்போது எல்லா வீரர்களும் ''தாமிரபரணிக்கு ஜே''[12] என்று ஆற்றுப்பெற்றி மாலையையும் அளிக்கக்கூடாது. ஆகையால்தான், நீரை முன்வைத்துக் காரிக்கண்ணனார் பாடுகின்றார். இது மௌன வீரத்தைப் பறைசாற்றவில்லையா?

## 5. மௌன ஆறு

**பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியை**

நோக்கி காரிக்கண்ணனார் கூறும்போது, ஆலமரத்து விழுதுபோல பாண்டிய குலத்தைத் தாங்குபவன்; தம்முடைய குடியைத் தம்முடைய முன்னோர்கள் இறந்து விட்டதால் தளர்ச்சியடையாது நல்ல புகழுடையப் பழைய குடியைத் தடுமாற்றமுற அணைத்துக் காத்து பாண்டிய குலத்துத் தோன்றிய ஏறுபோன்ற பெருந்தலைவன்' என்று குலத்துப் பெயரால் பாராட்டுகிறார்.

..............................இவனே
''முழுமதற் றெலைந்த கோளி ஆலத்து
கொழுநிழ நெஞ்சினை வீழ்பொறுத் தாங்கித்
தொல்லோர் மாய்க்குதெனத் துளங்கல் செல்லாது
நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழி(இ)
இனையதாயினும் இளையரா வெறியும்
அருநரை யுருமிற் பொருநரைப் பொருகச்
செருமான் பஞ்சவ ரேறே'' [13]

வீரகுலத்தில் பிறந்தவன் என்றும் பழைய தலைமுறை கழிந்த பின்பு புதிதாக நாட்டுப் பொறுப்பை ஏற்று ஆட்சி செய்தவன் என்று காரிக்கண்ணனார் போற்றுகிறார்.

இனி சோழனைப் புகழ்கின்றார். முதலில் ஆற்றின் பெயரைக் குறித்துப் போற்றிய பின்பு ஊர்ப் பெயர் சொல்லிப் புகழ்கின்றார்.

'அறந்துஞ்சும் உறந்தை பொருநனை' [14]

'உறந்தை' என்னும் ஊருக்குத் தலைவன் என்று பொருள். ஊர்ப்பெயரைச் சொல்லி போற்றுவதுதான் மௌனம். நெய்தலுக்கு உரியவனைச் சேர்ப்பான் என்பர். குறிஞ்சிக் குரியவன் வேடன்! பாலைக்குரியவன் ஆறலைக்கள்வன்; இவ்வாறு நிலப் பெயர்ச் சொல்லி போற்றுவது என்பது அந்தக்கால வழிமுறை. இன்றும் கூட இவ்வழக்கம் உள்ளது. துறவிகளைப் பற்றிக் கூறும் போது 'தங்கால் மௌனகுரு' என்பர். அதுபோல் அந்தக் காலக்கட்டத்தில் மன்னர்களைப் புலவர்கள் ஊர்ப்பெயர் சொல்லி போற்றினார்கள் என்பது கண்கூடு. இத்தகைய முறை 'மௌனம்' அடிப்படையில் வருவது ஆகும்.

## (அ) நீரும் முத்தும்:

அடுத்துப் பாண்டியனைப் பற்றிப் புகழ்கின்றார். நெல்லும் நீரும் எல்லோர்க்குரியது. அரசனுடைய நாடு சிறந்து விளங்க வேண்டுமானால் நெல் விளைச்சலின் வளம் வேண்டும். அரசனுடைய ஆட்சிமுறை வெற்றிபெற வேண்டுமானால் நாட்டில் நெற்பயிர் விளைய வேண்டும். குறிஞ்சி நிலத்தில் மழை

பெய்யும். காட்டாறாக ஓடி வரும் குன்றுகளை எல்லாம் சுற்றி சுழன்று ஓடும். மரங்களை வீழ்த்தி ஓடிவரும். மண்ணை அரித்துக் குழியாக்கி ஆறு ஓடும். மணல்வெளிகள் ஆங்காங்கு திட்டுத்திட்டாக இருக்கும். அத்தகைய ஆற்றின் வளம் நெல்லை விளைவிக்கும். ''வரப்புயர'' என்று ஔவையாரும் பாடுகின்றார். நாடு வளமாக இருக்க வேண்டுமானால், பயிர் நன்றாக வளர வேண்டும். அடுத்து நீர்வளம் கூறும்போது வண்டல் மண் நிறைந்த வளம் பொங்க வேண்டும் என்று புலவர் கூறுகிறார். நாட்டில் நெற்களஞ்சியங்கள் நிறையாது போனால், பஞ்சம் வரும், பஞ்சம் வந்தால் பசி வரும், பசி வந்தால் பத்தும் பறந்து போகும். ஆகையால், நாட்டு அளவில் பஞ்சம் இல்லாமல் இருக்க வேண்டும். இதைத்தான் நெல்லும் நீரும் என்று அமைத்துக் காட்டுகின்றார். தொடர்ந்து கூறும்போது சந்தனமும் முத்தும் நிறைந்த நாடு என்று கூறுகின்றார். சந்தனம் பற்றிப் பாடியதால் மௌனமாக நாட்டின் இன்ப வளம் காட்டுகிறார். தலைவன் - தலைவி இடையே மணம் மிகுந்த வாழ்க்கை - அன்பு பொங்கும் வாழ்க்கை - ஆறுதல் மிக்க வாழ்க்கை - ஆற்றியிருக்கும் வாழ்க்கை ஏற்பட்டு அமையும். அதுதான் நெஞ்சின் அளவில் பொங்கி வழியும் பூச்சாம் போன்ற வாழ்க்கை மாறி அமையும். சந்தனம் இருக்கும் இடத்தில் மணம் இருக்கும். மணம் மனதுள் இதயத்தைப் பொருத்தி வைக்கும். ஆகையால்தான் வளத்தைப் பற்றிப் பாடி அமைகிறார். முத்துக்குளிக்கும் தொழில் அன்றைய தமிழகத்தில் பெரும்பணியாகப் போற்றப்பட்டு வந்தது. ஆகையால் புதிய வளமும், புதிய தொழிலும் பொங்கிப் பெருகிற்று.

**நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென**
**வரைய சாந்தமும் திரைய முத்தமும்** [15]

என்று வளத்தைப் பாடுகிறார். மன்னவன் நாட்டுப் பொருளாதாரத்தை வளப்படுத்த வேண்டும். இந்த முறையான நிலை மௌனமுறை என்பதின்பாற்படும்.

சங்ககாலச் சான்றோர்கள் நாட்டுவளத்தைப் பற்றிப் பாடும்போது ஓலைச் சுவடியிலோ நூலின் வடிவாகவோ தருவார்கள். புத்தகங்கள் - நூல்கள் இன்றியமையாதனவாக விளங்கின. பெரும் புலவர்கள் நீரைப் பற்றியும் முத்துக்கள் பற்றியும் வரைந்து வைக்காமல் போயிருந்தால் அவர்களைப் பற்றி தெரிந்திருக்குமா? மு. வரதராசனார் அவர்கள் ''புத்தகங்கள் எழுதியவர்களும் படிக்கின்றவர்களும் நற்பண்பு

இல்லாதவர்களானால் அவற்றின் வாழ்வு புற்றீசல் வாழ்வதுதான்'' [16] என்று கூறியுள்ளமை நோக்கத்தக்கது.

## ஆ. முரசுகள்

வாழ்க்கையின் வளம் மௌனத்தில் இருக்கிறது. காரிக்கண்ணனார் தொடர்ந்து பாடும்போது மன்னர்களின் மூன்று முரசுகளைப் பற்றிக் கூறுகின்றார். அவை வீரமுரசு, நியாய முரசு, தியாக முரசு என மூன்று வகைப்படும். வீர முரசுக்குச் சான்றாக உறையூர் மருத்துவன் தாமோதரனார், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனைப் பாடும் பாடல் அமைந்துள்ளது. நாட்டை ஆளும் பொறுப்பு மிகக் கடினமான ஒன்றாகும். ஆனால் சாகாட்டு ஆட்சி போல அரையுடைய சகடையினது குழிப்பாய்த்தலைத் தீர்த்துச் செல்லும் வலியையுடைய பாரம் பொறுக்கும். பகட்டையுடை மன்னன் தவற்றியாக முழங்கும் வென்றி முரசு - வீரமுரசு முழங்கும் நாடும்'' என்று வீரமுரசு பற்றிப் புறநானூற்றில் சுட்டப்பட்டுள்ளது.

''ஆனாச் சாகாட்டு ஆழ்ச்சிப் போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்
வலனிரங்கு மரசின் வாய்வாய் வளவன்'' [17]

அடுத்த நிலையில் நியாய முரசுக் கூறப்படுகிறது. சங்க கால மன்னர்கள் நியாயம் கருதிப் போர்முரசு கொட்டி வைத்திருக்கிறார்கள். அவர்களுள் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வெற்பஃறொடைக்கைப் பெருவிறக்கிள்ளி என்ற இரு மன்னரும் போர்த்தொடுக்கின்றனர். இருவரும் களத்தில் மௌனமாக இறந்து கிடக்கின்றனர். பெருமன்னர்கள் அல்லவா? நியாயத்தைக் காக்க போரிட்டவர்கள் அல்லவா? அந்த இரு பெரு வேந்தர்களும் நியாயத்தைக் கட்டிக் காக்க முயன்றார்கள் அல்லவா? ஆகையால்தான் அவர்களுடைய முரசு நியாய முரசாகிறது.

தியாக முடிவுக்குச் சான்றாக பெருஞ்சேரலாதன் என்னும் மன்னன் சோழன் கரிகால் பெருவளத்தானோடு போரிட்டுப் புறப்பண் நாணி வடக்கிருந்து உயிர் துயிர்ந்தான். அக்காட்சியைக் கழாத்தலையார் பாடுகிறார். உயிரைத் தியாகம் செய்த மன்னன். கரிகாலனோடு பொருத காலத்தில் சேரமான் முதுகிடாது நேர்நின்று போரிட்டான். அவன் மார்பு குறித்தெறிந்த கரிகாலன் வேல் அவன் மார்பிற்பட்டு முதுகிடத்தைப் புண்ணாக்கிற்று. ஆகையால் வடக்கிருந்து உயிர்நீத்தான் என்று கழாத்தலையார்

பாடுகின்றார். அவனுடைய முரசு தியாக முரசல்லவா? ''யாழ் பண் மறந்தது. பெரிய இடத்துப் பாலுகவிழ்ந்து போயிற்று. சுற்றத்தார்கள் கள்ளை மறந்தார்கள். உழவர்கள் உழவுத் தொழிலை மறந்தார்கள். சுருங்கக் கூறின் நாடே அழுதது. அது தியாகம்தானே!

**'பண்யாழ் மறப்ப...**
**இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்ப...**
**சுரும்பார் தேறல் சுற்றம் மறப்ப...**
**உழவரோதை மறப்ப'** [18]

இறுதியில் முதுகில் பட்ட புண்ணிற்காக உயிர்துறக்கிறார் ஒரு வீர மன்னன் என்றால் அது தியாகமல்லவா? நாட்டுக்காக - நாட்டு மானத்தைக் காப்பதற்காக - தன் மானத்தைச் சேர்த்துக் காப்பாற்றிக் கொள்வதற்காக - முரசினை இழந்து தியாகம் செய்கின்றான் அல்லவா? அதற்குத்தான் 'தியாக முரசு' என்று பெயர். இவ்வாறு மூன்று முரசுகளைப் பற்றிப் பாடிய பின்பு இணைநிலைப் பற்றித் தொடர்ந்து பாடுகிறார் காரிக்கண்ணனார். மௌன ஆட்சி அல்லவா?

## இ. தெய்வம்

திருமாவளவனும் பெருவழுதியும் அவைக்களத்தில் அழகாக வீரம் தோன்ற - வீற்றிருக்கும் காட்சியைத் 'தெய்வக்காட்சி' என்று கூறுகின்றார்.

**பானிற அருவிற் பனைக் கொடியோனாம்**
**நீனிற வுருவிற் னேபியோனும்....** [19]

பால் போல் நிறத்தை உடையவனான பனைக் கொடியை உடையவனும், நீல நிறத்தை உடைய ஆழிக்கு உரியவனான இறைவனும் இருப்பதுபோல காட்சிக் கொடுத்த அம்மன்னர்களை வாழ்த்துகின்றார் புலவர். மன்னனை இறைவன் என்று ஏன் போற்ற வேண்டும்? செங்கோல் வளையாது முறையாக ஆட்சி செய்யும் மன்னவன் 'இறைவன்' என்று போற்றுவது வள்ளுவர் காலத்திலும் இருந்தது. சங்க காலம், சங்கம்மருவிய காலம் ஆகிய இரு காலத்தோடு சமய காலத்திலும் கூட மன்னனைத் தெய்வம் என்றும் இறைவன் என்றும் போற்றப்பட்டு வந்த காலம் உள்ளது. ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் மன்னவன் நாள்தோறும் செங்கோல் தவறாது ஆட்சி செய்ய வேண்டும். கொள்கைக் கூட்டத்தினர்; இறைவனைத் தூற்றுவார், சமய சழக்குகளை மன்னன் தீர்க்க வேண்டும். செங்கோல் தவறாது முறை செய்து ஆட்சியை நடத்த வேண்டும். அறம் பார்த்து மக்கள் கண்களில் கண்ணீர் வார்த்து [20] ஆட்சி நடத்த வேண்டும்.

வீட்டில் சிறு துன்பம் ஏற்பட்டால் பெற்றோர்கள்தான் அதற்குக் காரணம்; கோயிலில் சிறுசொல் பொறுக்காமல் ஏதேனும் குறைபாடு நேர்ந்தால் பூசை செய்யும் பூசாரிதான் அதற்குக் காரணம். ஆகையால்தான் மன்னனைக் கண்ணோட்ட முள்ளவர்களாகக் காட்டுகிறார் திருவள்ளுவர். கண் பெற்றும் அதைப் பயன்படுத்தாதவர்கள் வெறும் நோக்குவதற்குச் சமம் என்று கூறுகிறார் வள்ளுவர்.

''மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர்'' [21]

ஆகையால்தான் காரிக்கண்ணனார் மன்னனைத் தெய்வமாக்கிக் காட்டுகிறார். காத்தலும் கொல்லலும் மன்னனின் கடமையாகும். குற்றம் குறைகளை ஆராய்ந்து நீதி வழங்க வேண்டும். அரசவையில் ஒரு பெண் சிக்கிக் கொள்ள கொடியவர்கள் அவளை அவமானப்படுத்தி கட்டியிருந்த சேலையை அவிழ்க்க முயற்சி செய்தபோது அதைக் கண்டு வாளா இருந்த அவையோரைப் பார்த்து பாரதி ''நெட்டை மரங்களென நின்றிருந்தார்'' [22] என்று அறம் கேட்டு நீதி கேட்டுப் பாடுகிறார். மன்னவன் முறை தவறினான் என்பதை இது காட்டவில்லையா? துகிலுரியப்பட்ட அந்தப் பெண் இறைவனிடம் சரண் அடையும்போது இறைவன் வந்து காக்கவில்லையா? அதனால்தான் அறம் வளர்க்கும் மன்னனைத் தெய்வம் என்று காரிக்கண்ணனார் கூறுகிறார். இதற்குப் பெயர்தான் மௌனம். அறத்தை அறிவது மௌனம்; தெய்வம் மௌனத்தைச் சார்ந்தது.

இரு தெய்வங்களும் உடனிருந்து காட்சிக் கொடுப்பதுபோல இரு மன்னர்களும் அவையில் அமர்ந்திருந்தார்கள். காரிக்கண்ணனார் பாடல் சங்க காலத்தில் தெய்வக் கொள்கை இருந்தது என்பதைக் காட்டுகிறது. உருவ வழிபாடும் கூட அமைந்திருந்தது என்பதை விளக்குகிறது. இவ்வாறு கூறிய சான்றோர் 'இன்னும் கேண்மின்' [23] என்று தொடர்ந்து கூறுகின்றார்.

## ஈ. நட்பு

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மன்னர்கள் மிகுவலி படைத்தவராய் இருந்தாலும் கூட்டுச் சேர்ந்து நட்புக் காட்டிப் பகையை வென்ற வரலாறு நன்கு தெரிகிறது. அதற்குக் காரணம் சூழலே ஆகும். பலரும் ஒன்றிணைந்து வந்து பாரியைக் கொன்றார்கள் அல்லவா? 'உடனிலை' என்ற சங்க கால சொல்லுக்கு இன்று பொருள் காண வேண்டுமென்றால்

'இணைநிலை' என்றே கூற வேண்டும். 'உடனிலை' என்றால் இரண்டும் அருகருகே இருப்பது ஆகும். 'இணைநிலை' என்றால் அருகருகே இருப்பது மட்டுமன்று. இன்ப துன்பங்களில், வெற்றி தோல்விகளில், ஏமாற்றம் நம்பிக்கைகளில் சேர்ந்து இணை காட்டி வாழ்வது ஆகும். ஒரு வண்டி இருக்கிறது. அந்த வண்டிக்கு இரண்டு சக்கரங்களுண்டு. இரண்டு எருதுகள் உண்டு. சக்கரங்கள் இரண்டும் இணைந்து உருண்டால்தான் வண்டி ஓடும். அருகருகே இருப்பின் நின்றுவிட்ட வண்டியைக் குறிக்கும். இரண்டு எருதுகளும் இணைந்து இருந்தால்தான் வண்டி ஓடும். சண்டியிட்டு நின்று விட்டாலும் ஒரு எருதால் தான் இழுக்க இயலும்; அது போல இணைநிலைக் காட்டிச் சங்கத்து மன்னர்கள் வாழ்ந்தார்கள் என்று கூறுவது பொருந்தும் அல்லவா?

அந்த இணைநிலை என்ற சொல் இரு மன்னர்களுக்கு-மிடையே தோன்றி அமையும் பிரியா நட்பை உணர்த்த வல்லதாக உள்ளது.

'இசை வாழியவே' [24]

என்று விளக்குவதனால் இருவரிடையே காணப்படும் நட்பைக் காட்டவல்லதாக அமைந்துள்ளது. 'இசை' என்னும் சொல்லுக்கு சங்க காலத்தில் 'புகழ்' என்ற பொருள் அமைந்துள்ளது. 'இசைபட வாழ்தல்'[25] என்று வள்ளுவர் கூறுகின்றார். ஆகையால் இணைந்திருக்கும் நீங்கள் இருவரும் இனிதாக வாழ வேண்டும்; பிரியாமல் வாழ வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகின்றார். 'வாழிய என்பதனால் இறத்தல் 'சாதல்' வராமல் உடன் நின்று தோளோடு தோள் கொடுத்து, கண்ணோட்டம் காட்டித் தொடர்ந்து வாழ வேண்டும் என்னும் உள்ளத்து உணர்ச்சியை வெளிப்படுத்திக் காட்டுகின்றார்.

## உ. வெற்றி

வெற்றி அடைய வேண்டுமானால் - போர்க்களத்தில் வாகை சூட வேண்டுமானால் இரு மன்னர்களிடையே ஒற்றுமை இருக்க வேண்டும். நட்பு வெற்றியைக் கொடுக்கும். இணைநிலை - உடனிலை தளர்ந்தால் தோல்வியே கிடைக்கும். இணைந்திருந்தால் கடலால் சூழப்பட்ட - பௌவத்தினால் சூழப்பட்ட மாநிலம் உங்கள் கரத்தின் ஆளுகைக்கு வந்து சேரும் என்று விளக்கம் அளிக்கின்றார் காரிக்கண்ணனார்.

**ஒருவீ(ர்) ஒருவிர் ஆற்றுதிந் இருவரும்**
**உடனிலை திரியீர் ஆயினும் இமிழ்திரைப்**
**பௌவம் உடுத்தஇப் பவங்கெழு மாநிலம்**

என்று ஆழ்ந்து எண்ணிப் பார்த்து அறிவு புகட்டுகிறார், காரிக்கண்ணனார். பகைவன் முற்றுகை இடும்போது இருவரும் சேர்ந்து போராடி வெற்றி கொள்ள வேண்டும். வாகை சூட வேண்டும். பெருமன்னர்கள் இருவர் ஒருரையொருவர் சார்ந்து நின்றால் வெளிப்பகையையும், உட்பகையையும் வெற்றிக் கொள்ள வாய்ப்புண்டு. வீரர்கள் அல்லவா! படையுடைய மன்னர்கள் அல்லவா? அவர்கள் அஞ்சுவார்களா? அவர்கள் தோல்வியை ஒப்புக் கொள்வார்களா? மௌன வீரர்கள் அல்லவா?

## ஊ. பொதுமொழி

மன்னன் களம் புகுதலும் வெற்றியடைவதும் மிக இயற்கை.பதிலடிக் கொடுத்துத் தோல்வியுறச் செய்வது அரசனின் வலிமையையும் தந்திரத்தையும் காட்டும். போர் மேல் வந்த மன்னனை புறமுதுகிட்டு ஓடச் செய்வதென்பது மன்னனின் தலையாய கடமைகளில் ஒன்று. அந்த நிலையில் போர்மேற் சென்றால் மாற்றார்கள் - பகைவர்கள் பலவாறு தூற்றிப் பேசுவது இயற்கை. இவனென்ன பெரிய மன்னனா? களத்தில் வேல் எறிந்தால் அதைத் தாங்கும் வலிமை அவனுக்கில்லை. அவன் தோல்வி அடைவது நிச்சயம் என்று 'பொதுமொழி'[26] கிளப்புவான். இத்தகைய முறையை 'கண், காது இல்லாத செய்தி' (Rumour) என்று ஒற்றர் வாயிலாக அறிந்து வெற்றி பெற வேண்டும். சின்னஞ்சிறு கதைகளைப் பேசி வெற்றிக்கு எதிராகக் கூற்றுக்களைப் கிளப்பி தோல்வியுறச் செய்தல் என்பது இழிந்ததாகும். பொதுச் சொல் என்பதற்கு இன்னொரு பொருளையும் கூறலாம். பொது மகளிரால் உருவாக்கப்படுகிற வேண்டாத கட்டுக்கதைகள் - பொய்யுரைகள் - புழுதிச் சொற்கள் - இவற்றின் சாயலையும் பொருளாகக் கொள்ளலாம். பொதுமகளிர்கள் பண்பில்லாதவர்கள். பொன் தேடுகிறவர்கள், பண்புக்கு எதிராக நின்று அறவாழ்வின் போக்கை - பொதுமொழி கூறி - புளித்துப் போன வெறும் சொற்களைக் கூறி வாழ்வை சிதைக்கின்றவர்கள். மன்னர்களையும், பேரரசர்களையும் அணைந்து தாறுமாறாக வழிகளை, வாழ்வைச் சிதைக்கின்றவர்கள். மலர்கள் மடல் அவிழ்ந்து உதிர்ந்து போன சருகுகளைப் போல் - ஆரவாரத்தினாலும் - ஆட்சி முறையுடனும்,

ஆளுவோரை ஆற்றங்கரையோரத்தில் - அருவிகளின் சாரலில் - சுனைகளின் ஓரத்தில் சிந்துபாடி அழித்துக் குலைக்கிறவர்கள் ஆவார்கள். ஆகையால் முன்னோர் சென்ற நெறியான் வழிமுறையில் ஆண்டு அறத்தைக் காக்க வேண்டும். ஆகையால் நல்லவற்றை நாநிலத்தில் பரப்பி வாழ முயற்சி செய்ய வேண்டும். அதற்கு மௌன வழியே சிறந்தது என்று கூறலாம்.

சங்ககால வாழ்வியல் அமைப்பு முறை - போரியல் அமைப்பு முறை வேறாக இருந்தது. வியப்புக்குரியதாக இருந்தது. பொதுமொழி பேசப்பட்ட காலம் அது. பொறுமை மொழி என்பது பொதுமொழி ஆகி இருக்கலாம். எடுத்துக்காட்டாக சென்னை நகரத்தில் 'ஹேமில்டன் பிரிட்ஜ்' என்னும் பெயர் குறுகி 'அம்டவாராவதி' என்று வழங்குகிறதல்லவா? அதே சென்னைக்குச் செல்லும் வழியில் 'பூவிருந்தவல்லி' என்னும் பெயர் குறுகி 'பூந்தமல்லி' ஆயிற்று அல்லவா? 'அமைந்தகரை' என்னும் சொல் 'அம்ஜிகரை' ஆயிற்று அல்லவா? அப்படித்தான் சங்க காலத்தில் மக்களால் பயன்படுத்தப்பட்டு வந்த சொற்கள் காலப்போக்கில் குறுகியோ நீண்டோ வழங்கப்படுகிறது. அது போல் 'பொறுமைமொழி' என்பது மறுவி 'பொதுமொழி' என்னும் சொல்லாகி இருக்கக் கூடும்.

போர் நடக்கும்போது பகை மன்னர்கள் 'வதந்தி'களைக் கிளப்பி விடுவார்கள் போலும். மன்னனின் பொறுமையைச் சோதிக்கும் அளவுக்கு அப்பொது மொழிகள் இருந்திருக்கக் கூடும். எடுத்துக்காட்டாக 'பாலுணர்ச்சிச் செய்திகள்' (Sexual Matters) வெறுமனே வேண்டா வெறுப்பாகி கிளறி விடுவான். அவை மன்னனின் வெற்றி நிலையைத் தடுக்கக்கூடியதாக அமைந்திருக்க வேண்டும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடந்த போரில் ஒழுக்கமான மன்னனை - ஒரு துணைவியுடனே இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்த மன்னனை - நன்நடை நல்கல் வேந்தர்க்கு கடனே' என்று பொன் முடியார் பாடியிருக்கும் பாட்டு, அந்தக் கால மன்னர்களுடைய ஒழுக்கத்தையும் - நல் நடத்தையையும் காட்ட வல்லதாக உள்ளது. அரசிகள் எல்லாம் இல்லுறை மகளிர்களாக வாழ்ந்திருக்க வேண்டும். நாட்டுக்குத் தலைவனல்லவா? ஒழுக்கக் கேட்டினை ஒழுக்கத் திட்டம் போடுகிறவன் அல்லவா? அதனால்தான், அக்கால வஞ்சினைப் பாடல்கள் இதனை வலியுறுத்துகின்றன.

''கொடியண்டும் இறையென கண்ணீர்பரப்பி
குடிபழித் தூற்றும் கோலேன் ஆகும்'' [27]

இந்தப் பாடலில் பழிதூற்றல் என்னும் சொல் 'பரத்தையர் பால் காதல்' கொண்ட கொடியவனே ஆவேன் ஆகுக' என்று மன்னன் தன்னைத்தானே இகழ்ந்து கூறிக்கொள்வதில் இருந்து பழிக்கு அரசர்கள் அஞ்சிய போக்கு காணப்படுகிறது. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் மன்னன், உலகின் போக்கைப் பாடுகிறான்.

''அஞ்சலுமிலர் பிறர் அஞ்சுவது அஞ்சி
புகழெனின் உயிரும் கொடுக்குவர்'' [28]

என்னும் இந்தப் பாடலில் 'பிறன்மனை நோக்கா பேராண்மை' படைத்த மன்னர்களைக் காணமுடிகிறது. வழிமுறையாக வருகின்ற அரசு, தாய் முறைக்குக் கேடு நேரக்கூடாது என்று பழிக்கு அஞ்சி - மனை பார்க்கும் பழிக்கு அஞ்சி வாழ்ந்த போக்கு உள்ளது.

ஆகையால், 'பொதுச்சொல்' என்பது பொறுமையைச் சோதிக்கும் ஒரு சொல் என்பது தெரிகின்றது அல்லவா? சாதாரண உலகியல் வாழ்க்கையில் மானம் கெட்டவன் என்னும் சொல்லைச் சொன்னால் கத்திவெட்டு, குத்து குருதி பொங்கிவிடுகிறதல்லவா? ஓர் அழகான அடக்கமான இளம்பெண்ணைப் பார்த்து 'மானங் கெட்டவளே' என்று சொன்னால் ஒப்புக்கொள்வாளா? கோபமுறுவாள்; குடிகேடன் என்பாள். நீ மட்டும் உயர்ந்தவனா ! என்பாள். அதுதான் தமிழகத்து ஒழுக்க வாழ்க்கை. ஆகையால், பொறுமையைச் சோதிக்கும் பொழுது மொழிகளை மன்னவன் ஏற்க மறுத்து போர் மேல் புகுவான். ஆனாலும் கூட 'அஞ்சுவதற்கு அஞ்சி' என்னும்போது மௌனக்குரல் - மௌனக் கொள்கை இடம்பெறுவதைக் காணலாம். மௌனமாக ஊர்ப்பழியைப் பொறுத்துக் கொண்ட மன்னரும் பெண்டிரும் கூட வாழ்ந்திருக்கக்கூடும். அது சிலம்பில் தெரிகின்றது. மணிமேகலையில் புலப்படுகிறது. ஆகையால், இரண்டு மன்னர்களுக்கும் அறிவுரை வழங்கும்போது 'பொதுமொழி' கொள்ளா என்று பாடுகின்றார் காரிக்கண்ணனார்.

## எ. புணர்ச்சி

வாழ்க்கைப் போராட்டமானது. தனிப்போராட்டமும் இழிப்போராட்டமும் மிகுதியாக உள்ளது. காரிக் கண்ணனார் என்னும் இந்தப் புலவர் ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றல் உள்ளவராக

இருக்கிறார். வாழ்வியல் அகம்-புறப்போராட்டங்களை நன்கு உணர்ந்திருக்கின்றார். நட்பைக் குறிக்க 'புணர்ச்சி'[29] என்ற சொல்லை ஆண்டிருக்கிறார். இதே சொல் அக இலக்கியத்திலும் வருகிறது. குறிஞ்சி நிலமும் அதன் ஒழுகலாறும் 'புணர்தல்' என்று உள்ளது. ஆயினும் ஆணும் பெண்ணும் கட்டித் தழுவினால் அதற்கு நட்பு என்று பொருள். அன்னையும் மகனும் கட்டித் தழுவினால் அதற்குப் பாசமென்று பெயர். பரத்தையும் தலைவனும் கட்டித் தழுவினால் அதற்குப் 'பொய் முயக்கம்' என்று பெயர். தந்தையும் மகனும் கட்டித் தழுவினால் அதற்கு அன்பு என்று பெயர். குழந்தையும் கட்டித் தழுவினால் அதற்கு 'அறிய அன்பு' என்று பெயர். ஒரு கிழவியும் இளைஞனும் கட்டித் தழுவினால் அதற்குப் 'பெருந்திணை' என்று பெயர். ஆகையால் காரிக் கண்ணனார் 'இன்றே போங்க நும் புணர்ச்சி' என்று பாராட்டும் போது இங்கே உள்ளார்ந்த நட்பை அடிப்படையாக வைத்துக் கூறுகின்றார் என்று பொருள்.

பகைவர்கள் போர்க்களத்திற்கு வந்தால் இரண்டு மன்னர்களும் இணைந்து இருந்து போரிட்டு வெல்லவேண்டும் என்று கூறுகின்றார். இருவரும் வீரர்கள், இருவரும் மன்னர்கள். ஒருவன் சோழன், ஒருவன் பாண்டியன், ஆயினும், நட்பால் சேர்ந்தவர்கள், எண்ணத்தால் இணைந்தவர்கள் ஆகையால்-

**'அடுகளை துயர்த்தும் வேலே'** [30]

களத்தின் கண் போர்த்தொடுத்து இருவரும் வேல் உடற்றிப் போரிட்டு வெல்க என்று வாழ்த்துகின்றார். அப்போது இருவரும் கூட்டம் பெற்று ஓங்கி வாழ்க என்று கூறுகின்றார். சங்க காலத்தில் கூட்டம் என்றால் இருபொருள் உண்டு.

அ. தலைவனும் தலைவியும் இணைந்தும் இயைந்தும் சேர்ந்தும் சேர்ப்பில் இருந்தும் புணர்ந்து வாழும் வாழ்க்கை.

ஆ. பெருமன்னர்கள் தங்களுக்குள் இணைந்து தம் பகைவரை ஒழிக்க திட்டம் போடுதல். அதற்குக் கூட்டம் என்று பெயர் இருந்தது.

இன்றைய காலத்தில் கூட்டம் என்றால் பெரும்மக்கள் கூட்டத்தைக் குறிக்க வந்துள்ளது (Public Meeting) ஆகையால், காலத்திற்கு ஏற்ப சொற்கள் 'மௌனமாய்' பொருள் மாற்றம் பெற்று அமைந்துவிடுகிறது என்பது புலப்படும்.

**'குன்று கெழுநாடே'** [31]

என்று குன்றைக் காட்டி நாட்டுப் பெருமையைக் கூறுகிறார். மௌனமாக இணைந்திருந்து வாழ்க்கைக் களத்திலும் போர்க்களத்திலும் வெற்றிபெறுவீர் என்று காரிக் கண்ணனார் மகிழ்ச்சியுடன் வாழ்த்துகிறார்.

ஆகையால்தான், இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்டு அமைந்த மௌன நட்பை - மன்னர் வாழ்வில் மாறி அமைந்த நட்பை - இந்த நூற்றாண்டில் கூடப் போற்றி வளர்க்க வேண்டிய கடமை ஆட்சியாளர்களுக்கு இடையே தோன்றி அமைந்து விடவேண்டும் என்றும் - அது மௌனமான பண்பாட்டை ஒரு புதிய சமயக் கொள்கையாக 'மௌனிசம்' ஆக அமைய வேண்டும் என்றும் கூறுவதில் தவறு என்ன இருக்கமுடியும்?

## அடிக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | .... | புறநானூறு, வேள்பாரி, 105 |
| 2. | .... | பதிற்றுப்பத்து, புண்ணுமிழ் குருதி, 21 |
| 3. | திருவள்ளுவர் | திருக்குறள், நிலையாமை, 247 |
| 4. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், பாப்பா பாட்டு ப. 375 |
| 5. | திருவள்ளுவர் | திருக்குறள், புறங்கூறாமை, ப. 130 |
| 6. | கௌசிகனார் | மலைபடுகடாம், 12-17 |
| 7. | பாண்டியன் தலையாலங் கானத்து செருவென்ற நெடுஞ்செழியன் | புறநானூறு,18 |
| 8. | பாரதிதாசன் | பாரதிதாசன் கவிதைகள், பகுதி - 1 |
| 9. | பாண்டியன் நெடுங்செழியன் | புறநானூறு, 18 |
| 10. | Maxim Gorky, | On Literature PP: 11-12 |
| 11. | .... | புறநானூறு, ப.581 |
| 12. | சுந்தரம்பிள்ளை, பெ. | மனோன்மணியம், நீலகமன்னன் வீரஉரை |
| 13. | ... | புறநானூறு, 58, 1-8 |
| 14. | மேலது | 58, 9 |
| 15. | மேலது | 58, 49-52 |
| 16. | வரதராசன், மு. | இலக்கிய ஆராய்ச்சி. ப. 77 |

| | | |
|---|---|---|
| 17. | ... | புறநானூறு, 60, 8-10 |
| 18. | மேலது | 65, 1-4 |
| 19. | மேலது | 58, 14-15 |
| 20. | திருவள்ளுவர் | திருக்குறள், கொடுங்கோன்மை, ப.164 |
| 21. | மேலது | கண்ணோட்டம், ப. 181 |
| 22. | பாரதியார் | பாரதியார் கவிதைகள், பாஞ்சாலி சபதம், ப.429 |
| 23. | ... | புறநானூறு 58:19 |
| 24. | மேலது | 58:19 |
| 25. | திருவள்ளுவர் | திருக்குறள், இறைமாட்சி, ப.2 |
| 26. | ... | புறநானூறு 58: 27 |
| 27. | மேலது | 82, 12-13 |
| 28. | மேலது | 182-4-5 |
| 29. | மேலது | 58-28 |
| 30. | மேலது | 58-29 |
| 31. | மேலது | 58-32 |

# முடிவுரை

1. பக்தி என்றால் வழிபடுதலும், மதிப்பளித்தலும் ஆகும். இந்த பக்தி என்பது குகை மனிதனை (ஆதி மனிதனை) கடவுள் தத்துவத்திற்கு அழைத்துச் சென்றது. பழங்காலத்தில் மனித இனம் தன்னைக் காட்டிலும் வல்லமையும் ஆற்றலும் பொருந்தி இருக்கின்ற தன்மையில் கடவுள் தென்பட்டார். மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி ஏதோ ஒன்று இயங்கிக் கொண்டு இருந்தது. அதை அளக்கவும் தேடவும் அவன் முயன்றான். அதே நேரத்தில் தன்னைச் சுற்றிலும் இருக்கின்ற இயற்கைக் காட்சிகளில் - இயற்கை ஆற்றலில் - அவனுடைய கவனம் திரும்பிய போது 'இறைமை என்பதை உணரத் தொடங்கினான். இதுவே பக்தி தத்துவத்திற்கு ஆரம்பம் எனலாம்.

2. மனிதன் பகுத்தறிவு வளரத் தொடங்கியபோது பசியால் மிகவும் தவித்தான். எப்போதெல்லாம் பயிறு பசித்ததோ அப்போதெல்லாம் சோர்வால் - ஆற்றலின்மையால் அவன் நடுங்கிப்போனான். ஏதாவது மிருக இனங்கள் எதிரில் தென்பட்டால் கல்லாலாகிய கருவிகளை எடுத்து அவற்றின்மேல் வீசி வென்றான். அப்படி கல்லாயுதத்தை பயன்படுத்த வேண்டும் என்று அவனுள் ஒரு ஆர்வம் பொங்கி எழுந்திருக்கவேண்டும். ஆகையால், முதன்முதலாக 'பசி' என்னும் உணர்ச்சி இறைமை வழிபாடு செய்ய மனிதனுக்கு ஒரு தெளிவினை அளித்தது என்பதனை அறியலாம்.

3. சங்க காலத்தில் மனித வாழ்வு இயற்கையோடு இணைந்து செல்வது புலப்படுகிறது. இயற்கைக் கூறுகளை ஞாயிறு, திங்கள், வானம், சுனை ஆகியவற்றின் போக்கில் 'இறைமை', 'சமயம்', 'பக்தி', ஆகியவை விளக்கப் பட்டுள்ளது. இந்த இயற்கையின் பின்னணியில் இன்றைய வாழ்வு செப்பனிடப்பட்டுள்ளது. புலவர்கள் 'இறைபாதி-இயற்கைபாதி' என்று கோட்டிட்டுக்கொண்டு பாடிய

தன்மை இவ்வாய்வின் மூலம் வெளிக்கொணரப் பட்டுள்ளது.

4. மனிதனின் புத்திக்கு எட்டாத தன்மையில் அமைந்துள்ள இயற்கைச் சூழல் மனிதனின் நெஞ்சில் ஒருவகையான மயக்க உணர்வு தோன்றி மறைகிறது அல்லவா? இந்தப் பொருள் புரியாத - உணர்ச்சிக் கலவைக்குத்தான் சமயம், ஆன்மீகம், பக்தி, பேரின்பம் என்றெல்லாம் சான்றோர்கள் பொருள் கூறினார்கள். குழப்பமும், தெளிவின்மையும் சேர்ந்து புதியதொரு புத்துணர்ச்சிக்குத் தூண்டிலாய் நின்று இறைவனுடையை குணாதிசயங்களை விளக்கும் தன்மையில் இவ்வாய்வு தெளிவு செய்கிறது.

5. இறைவழிபாட்டினை இருவகையாகப் பார்க்கலாம். 1. அகவழிபாடு 2. புறவழிபாடு. அகவழிபாடு என்பது மனித வாழ்க்கையின் புறத்தே இயற்கையில் அமைந்துள்ள பொருள்களில் இறைவனைக் கண்டு வழிபடும் மரபு போன்றவற்றில் சடங்கு, சம்பிரதாயம், ஐதீகம் போன்றவற்றின் துணைகொண்டு இறைவனை வழிபடுதலும் போன்ற செயல்பாடுகள். புறஇயல் வழிபாடு எனவும் 'உள்ளங்கவர் கள்வன்'என்று இறைவனைப் பொதுவாகச் சுட்டிக் காட்டுவது ஒரு வகை - அதாவது அகம் - உணர்வு கண்ட 'இறைமை' என்று சுட்டுவது மற்றொரு வகை - அன்புணர்வு தோன்றும் போது உண்டாக்கும் வலிமை ஆகியவற்றை அகவழிபாடு எனவும் அறியப்படுவதை இவ்வாய்வு எடுத்துக்காட்டுகிறது.

6. இடைக்காலத் தமிழ் இலக்கியத்தில் வளர்ச்சி நிலை அடைந்த சைவ, வைணவ சமயத் தோற்றம் அவற்றின் வழிபாட்டுத் தன்மைகளோடு பிற்காலத்தில் சமய வரலாற்றில் புதிதாகப் புகுந்த சில புதிய கடவுள் கோட்பாடுகளும், தத்துவங்களும், கொள்கைகளும் அச்சமயங்களின் தாக்குறவுகளால் ஏற்பட்ட தற்கால சமய வாழ்வியல் போக்குகளும் ஆராயப்பட்டுள்ளன. பல சமய வழிபாட்டை ஏற்றுக்கொண்டு சமய வாழ்க்கையில் புதிய கூறுகளை அங்கீகரிக்க வேண்டிய காலகட்டத்தில் பக்தியின் தன்மை, சமயத்தின் உயர்வு தாழ்வு போன்றவற்றை சமன்படுத்த 'மௌனிசம்' ஒன்றே ஏற்றவழி என்பதை எடுத்துக்காட்டுவதாக இவ்வாய்வு அமைகிறது.

7. ஒன்று, ஒன்றிற்காக; ஒன்று, ஒன்றினுள் புகுவதற்காக; ஒன்று - ஒன்றினுடைய தேவைக்காக வளர்ந்த போக்குத் தென்படுகிறது. சூழல்கள் - தட்பவெட்பநிலைகள் - புரிந்தும் புரியாமலும் இருந்த காட்சிகள் - எதிலும் துடிதுடித்த ஒரு இதமான ஓசைகள் - தொடர்ந்து வளர்ந்து கொண்டிருந்தால், தேவையான 'பத்திர உணர்ச்சி' அங்கே அற்றுப்போன ஒரு புதுமைத் தோற்றம் எங்கும் காணப்படத் தென்பட்டுக்கொண்டிருந்த நிலை - மனித வாழ்வின் நீண்ட தொடர் வாழ்வே காட்சியாக அமைந்திருப்பதைப் பார்க்க முடிகிறது. எனவே, மனிதன் தன் பாதுகாப்பு நிலைக் கருதி தன்னைவிட சக்தி வாய்ந்த இறைவனை உயர்வாகக் கருதி வழிபட்டத் தன்மை தென்படுகிறது.

8. காடுகளில், மலைகளில், குகைகளில் வாழும் கொடிய மிருகங்களை எதிர்த்து அவற்றை வெல்லும் சக்தியைப் பெற்றிருந்த ஆதிகால மனிதன் தன்னுடைய வீரத்தையும், ஆற்றலையும் எண்ணித் திகைத்தான். அந்த உணர்வில் மனித ஆற்றலைவிட சக்திவாய்ந்ததாக காணப்படுகிற இயற்கையை அதன் பின்னணியில் இருக்கும் சக்தியை எண்ணி வியந்தான். அதனால் தன்னைவிட அதீத சக்தி ஒன்று உண்டு என்று அறிந்த அவன் அச்சக்தியை 'இறைவன்' என்ற பெயரை அளித்து மனிதன் வாழ்த்தினான். எங்கே மனிதசக்தி - மனித ஆற்றல் குலைந்து போகிறதோ, எங்கே உணர்ச்சிப் போக்கு - செயல்திறம் மாய்ந்து போகிறதோ, எங்கே சிந்தனைச் சக்தி சிதைந்து புதைந்து போகிறதோ, எங்கே மனிதத் தன்மையை மீறிய அசாதாரண சம்பவங்கள் தோன்றி அமைகின்றதோ, அதற்குத்தான் 'இறை' என்ற பெயரை அளித்து மனிதன் தணிந்தான். இதுவே சமயத் தோற்றத்திற்கு அடிகோலியிருக்க வேண்டும் என்ற கருத்தை இவ்வாய்வின் மூலம் கண்டு தெளியலாம்.

9. கண்டும் காணாமல் - கேட்டும் கேட்காமல் - அறிந்தும் அறியாமல் வாழ்கின்ற நிலை போய், விரித்துப் பார்த்து - எண்ணிச் சாய்ந்து, பின்னிப் பிணைந்து தன் முன்னால் அசைந்து கொண்டிருந்த காட்சிகளை வரிசைபட அமைத்தபோது தன் நினைவுக்கும் செயலுக்கும் அப்பாற்பட்ட ஒன்று வாழ்வில் புதுமையைப் படைத்துக் கொண்டிருந்ததை உணர்ந்து அந்தப் புதுமையில் புரட்சி மணம் கமழ்ந்து வருவதைக் கண்டு வணங்கினான். இதுவே

இறைவனை உய்த்து உணரும் தன்மைக்கு அடிகோலியது என்பதை அறியலாம்.

10. ஒரு காலத்தில் பெண்களின் கற்பு என்னும் கொள்கை சமுதாயத்தில் ஆழ்மையாய்ப் பதிந்திருந்தது என்பதை தமிழ் இலக்கியக் காப்பியங்கள் தெளிவுறுத்துகின்றன. இன்றைக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் பெண்கள் கற்பில் ஓங்கி நின்று வாழ்ந்தார்கள் என்றும் அதனால் 'பத்தினி' என்ற பட்டம் அவர்களுக்கு அளிக்கப்பட்டது என்றும் - நாளடைவில் அப்பத்தினிப் பெண்டிர் 'தெய்வம்' என்றும் 'மாசக்தி' என்றும் போற்றப்பட்டார்கள் என்றும் புலவர்கள் கோடிட்டுக் காட்டியப் போக்கு செம்மையுற இவ்வாய்வில் அறியப்படுகிறது.

11. சமய வாழ்வில் நெருப்பும், நீரும் என்னும் கருத்து இறைமையினுடைய தன்மையை விளக்குவதாக அமைந்துள்ளது. நெருப்பு என்பது ஆண்மை, நீரும் என்பது தண்மை. ஆகையால், இறைவன் வெம்மையாகவும், குளிர்ச்சியாகவும் உள்ளான் என்பதை புறநானூற்றுப் பாடலின் வழி இவ்வாய்வில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

12. பொருள்நாடிச் செல்லும் கலைஞர்களுக்கு எப்படி அரசரை நோக்கி வழி கூறப்பட்டதோ அதுபோல் கடவுளை நோக்கி மக்களை திசைமாற்றம் செய்யப்பட்ட தன்மையில் 'திருமுருகாற்றுப்படை' என்னும் பத்துப்பாட்டு நூல் அமைந்துள்ள பாங்கு ஆராயப்பட்டுள்ளது.

13. திருமுருகாற்றுப்படையில் சைவ சமய கருத்துக்கள் மட்டுமல்லாது திருமாலினுடைய சிறப்புகளும் இடம் பெற்றிருக்கும் குறிப்புகளும் இவ்வாய்வு உற்றுநோக்கி வெளிக்காட்டியுள்ளது.

14. சிவனை வழிபடுவோர் சைவம் என்னும் சமயத்தால் சேர்க்கப்பட்டார்கள். உயிர்கள் வாழ்வதும், முக்தி அடைவதும் சிவனுடைய அருளால்தான் என்று படித்தவர்களும், பண்டிதர்களும், சமயவாதிகளும் நம்பினார்கள். சிவனுக்கு மூன்றாவது கண்ணாக நெற்றிக்கண் உண்டு என்றும், அந்த நெற்றிக்கண்ணை பகைவர்களை அழிக்கப் பயன்படுத்தினார் என்றும் சமயக் குரவர்கள் நம்பி வந்த பாங்கு நன்கு ஆராயப்பட்டுள்ளது.

15. திருமால் அவதாரத்தை பத்துவித 'தசாவதாரமாக' வைணவர்கள் அமைத்திருக்கிறார்கள். அரக்கர்களாலும், அசுரர்களாலும் மக்கள் துன்பப்பட்டபோது இறைவன் மனிதனாக திருவவதாரம் செய்து அவர்களைக் காத்தான். எப்பொழுதெல்லாம் மண்ணின் ஒழுக்கம் கெடுகின்றதோ, நீதி அழிகின்றதோ அப்பொழுதெல்லாம் இறைவன் அவதாரம் எடுத்துக் காப்பாற்றுகிறான். இந்த வகையில் மக்களுடைய அறியாமையைப் போக்கத்தான் கடவுள் அவதாரங்கள் எழுப்பப்பட்டன என்பன போன்ற செய்திகளை இவ்வாய்வு ஈண்டு நோக்கியுள்ளது.

16. மனித வாழ்க்கை அனுபவங்களினால் ஆனவை. இன்பம், துன்பம், தெய்வீகம், உலகியல் என்று அனுபவங்கள் விரிகின்றன. ஐந்து வகையான இறைவனால் அமைக்கப்பட்ட ஐந்து உறுப்புகளின் மூலம் இவை அமைதல் கூடும். கண்கள், செவிகள், மூக்கு, நாக்கு, தோல் ஆகிய ஐந்து உறுப்புகள் வாயிலாக இந்த தெய்வீக அனுபவம் ஏற்பட்டமைகிறது என இவ்வாய்வு விரிவாக எடுத்துக்கூறுகிறது.

17. எல்லா சமயங்களும் சைனம், சமணம், பௌத்தம், சைவம், வைணவம் ஆகிய உலகம் தழுவிய சமயங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளைக் குறித்து விளக்கிக் கூறும் பாங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

18. சமயத் துறையில் ஐம்புலன் அடக்கம் மிகவும் விரிவாக விளக்கப்படுகிறது. மனிதனை படைக்கும்போது இறைவன் அவனுக்கு உலகத்தையும், வாழ்க்கையையும் விளக்க புறத்தே ஐம்பூதங்களையும், உடம்பின்கண் சுவையுணரும் ஐம்புலன்களையும் அமைத்தார் என்பதனையும் இவ்வைம்புலன்களை அடக்குவதின் வாயிலாக இறைமை வழிபாட்டில் கவனம் செலுத்தி காமம், மயக்கம், வெகுளி என்னும் மும்மலங்களை வென்று முக்திபேறு அடைய மனிதன் முயற்சி செய்கிறான் என்பதையும் இப்புலனடக்கம் வாழ்க்கை வழியினை வகுத்துச் செல்லவும் சமயங்களுடைய தத்துவங்களை புரிந்து கொள்ளவும் பயன்படுமாற்றை இவ்வாய்வு தெளிவுறுத்துகிறது.

19. கடவுள் என்றால் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன். மனித அறிவுக்கு அப்பாற்பட்டவன் என்பது போன்ற பொருள்கள் சான்றோர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றன. அத்தகைய உருவமற்ற பெறும் சக்திக்கு உருவத்தை அளித்துஅதைக் கண்ணாரக் கண்டு காமக் கழிவுகளை காணாமல் ஒளிபொருந்திய இறைவனின் காட்சி சிறப்பையே காணவேண்டும் என்னும் வேட்கையில் மனிதன் இறைவனை வழிபடத் துடிப்பதை இவ்வாய்வு படம்பிடித்துக் காட்டுகிறது.

20. சமயக் குரவர்கள் தங்கள் சமயமே உண்மையானதென்று நிறுவுவதற்கு செவிவழி அறிந்த செய்திகளுக்கு பதில்கூறும் வகையில் அனல்வாதம் புனல்வாதம் செய்து தங்கள் சமயத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்கு பெரிதும் போராடினர் என்னும் செய்தி இவ்வாய்வின் வழி விளக்கப்பட்டுள்ளது.

21. தவயோகிகள் 'பிராணாயமம்' என ஒன்றினைப் பின்பற்றுவது கண்கூடாக உள்ளது. இதன்பொருள் மூச்சுக் காற்றினை மேலும் கீழும் குறிப்பிட்ட கணித சம்பிரதாயங்களோடு செய்வது எதுவோ அதுவே 'தியானம்' அல்லது 'தவம்' ஆகும் என நம்புவர். இந்தக் காற்று மூக்கின் வழியாகச் சென்று குரல் வளையில் இறங்கி உணவுக்குழல் வழியாகச் சென்று உந்தியில் நிலைத்து இயல்பாக மனித உடலில் தோன்றுகின்ற பல்வேறு வகையான குற்றங்கள் குறைகள் ஆகியவை நீங்குவதற்கு உறுதுணையாக அமைகிறது என்ற கருத்தை இதன்கண் காணலாம்.

22. 'நா' உடலுறுப்புகளிலேயே சக்தி வாய்ந்த பெருமை நிறைந்த ஒரு உறுப்பாக அறியப்படுகிறது. இந்த நாவின்மூலம் மனிதன் சமூக வாழ்க்கையையும் சிறப்பான பக்தி வாழ்க்கையையும் நடத்தி வருகிறான். இந்த நாவை அடக்கி இறைவனின் புகழ்பாட இதனை பயன்படுத்தும்போது இது ஒன்றே மனிதனை கடவுளிடம் அடையாளம் காட்ட வல்லதாக அமைகிறது என்ற கருத்தினை இவ்வாய்வு உறுதி செய்கிறது.

23. எல்லாவற்றிலும் மனிதனுடைய தோல் எளிதில் உணர்ச்சியினைப் பெறவும் வெளிப்படுத்தவும் வல்லவையாகும். எனவே, உணர்ச்சிகளை ஒடுக்கி இறைமை அடைவதற்குரிய உணர்வுகளைப் பெருக்கி

வாழ்தலும், அதேபோல் இறைவன் வழிபாட்டில் இன்றியமையாத ஒரு ஆசனமாக தோல் விளங்கி புலி, சிங்கம், மான், கரடி ஆகியவற்றின் தோலில் முனிவர்கள் அமர்ந்து தவம் இயற்றி இறைவனை அடைந்துள்ளமை போன்ற கருத்துக்களை இவ்வாய்வு தெளிவு செய்கிறது.

24. மனிதனுடைய வாழ்க்கை இருபெரும் முனைகளினால் அமைந்துள்ளமை காணலாம். ஒருபுறம் அறம், பொருள், இன்பம் எனச் சொல்லத்தக்க முறையில் அமைந்துள்ளது. மற்றொருபுறம் வீடுபேறு அடைவதற்கு இறை வழிபாட்டில் மூழ்கிப் பேருண்மையை அறிந்து பேரின்பத்தில் திளைத்தல் ஆகியவைக் குறித்து இவ்வாய்வில் சிறப்பாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

25. செல்வம் சேர்ப்பது தவறில்லை. குடும்பம் வாழ - சிற்றூர் வாழ - நாடு வாழ - உலகம் வாழ ஒவ்வொரு படியின் முன்னேற்றத்தில் செல்வம் துணை நிற்பதோடு, இச்செல்வம் ஈதல் மூலமாகத்தான் மனிதனுக்கு முழுப் பயனையும் பெற்றுத்தந்து அமைகிறது என்ற கருத்தை இவ்வாய்வு மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளது.

26. முன்னோர்கள் சக்தியை வழிபாட்டுக் கடவுகளாக மதித்து வாழ்ந்தார்கள். ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே என்ற பழமொழி நோக்குதற்குரியது. சக்திக்குக் கனிவான உணர்ச்சியில் பெரும் பங்கு உண்டு என்று தெளியலாம். அதேபோன்றுதான் பெண்மை எல்லா இல்லங்களிலும் திகழ்ந்து பேரானந்தத்தை அளித்து வருகிறது என்ற பெண்மையின் சிறப்பை இவ்வாராய்ச்சியின்கண் காணலாம்.

27. கண்ணின் காமம் உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே ஆட்டிப்படைத்து மனிதனை அழிக்கும் தன்மையினை உடையது. காமத்தை வெல்பவனே கடவுளை அனுபவிக்க முடியும். காமத்தால் எண்ணங்களில் அழுக்கேறி அதே ஆணவத்தால் அழிவுள்ள பத்மாசூரனைக் குறித்து புராணக் கதையின் வாயிலாக இவ்வுண்மையை இவ்வாய்வு நிறுவுகிறது.

28. கோபம் என்பது ஒரு பண்பாகும். குணம் உள்ள இடத்தில் கோபம் இருக்கும் என்னும் வழக்கானது சமய வாழ்வில் தொன்று தொட்டு மக்களிடையே உதாரணம்

காட்டப்படுகிறது. இது இறைவனுடைய பண்பினைக் குறிப்பதாக அமைந்துள்ளமை அறியலாம்.

29. இறைவனுடைய எல்லா பகுதிகளையும் அறிய முடியாமல் போகும்போது மனிதனுக்குக் கோபம் வருகிறது. அறிதல் என்பது அறியாமையினின்றும் விடுபடுதல் ஆகும் என்ற கூற்றின் தன்மையில் இறைவனை அடைதல் மிகச் சிறந்த கூறுபாடே ஆகும். எனவே, கோபம் தவிர்த்து தீமைக்கு விலகி அறிவுப்பூர்வமாக இறைவனை அடைய சமயக் குரவர்கள் எடுத்துக்காட்டிய வழிமுறைகளை இதன்கண் ஆழ்ந்து அறியலாம்.

30. சில சமயக் குரவர்கள் ஏக இறைவனை வழிபட்டபோது வேறுசிலர் பல வகையான தெய்வ வழிபாட்டு முறையை மக்களுக்குக் காட்டியிருக்கின்றார்கள். இந்தக் குழப்பங்கள் எல்லாம் மிகுதியாக வளர்ந்தபோது கடைசியில் 'தெய்வம் பல வடிவம்' என்றும் 'உண்மையே கடவுள்' என்றும் 'அன்பே கடவுள்' என்றும் கூறி சாதி, சமயம் ஆகிய கட்டுப்பாடுகளைத் தளர்த்தி இறைமை பொதுமை ஆன பாங்கு இடைக்காலத் தமிழ் இலக்கியத்தின் வாயிலாக இங்கு நன்கு விளக்குப்பட்டுள்ளது.

31. சுற்றுச் சுவர்களுக்குள் முடங்கிக் கிடந்த பக்தி, இடைக்காலத்தில் தடுப்புச் சுவர்களை இடித்துக்கொண்டு புறப்பட்டு பக்தி ஆரவாரத்தையும் - மன உளைச்சலையும் ஏற்படுத்தத் தொடங்கியது. கடந்த கால வழிபாட்டு முறைகள் சரிந்து போய் மன உளைச்சலுக்கு ஏற்ற மருந்தாக பக்தி இலக்கியம் வளரத் தொடங்கியது. சங்கம் மருவிய காலத்தில் காப்பியக் கதையோடு இரண்டறக் கூடிவளர்ந்த சமயம், இடைக்கால இலக்கியத்தில் முழுமையான ஒரு தோற்றத்தைத் தாங்கி பக்தியின் முழக்கம்போல் எல்லா இடங்களிலும் வேகமாகப் பரவத்தொடங்கியப் போக்கும் 'மும்மைகால உலகுக்கெல்லாம் மூல மந்திரமாகத் திகழ்பவன்' என்று இறைமைத் தத்துவம் இராமாயணத்தில் வரையப்பட்டுள்ளவற்றை சுட்டிக்காட்டி இவ்வாய்வு இடைக்கால பக்தி வளர்ச்சியின் தன்மையைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

32. சங்க கால இலக்கியத்தில் சமயத்திற்கு என்று தனியான ஓர் இடம் அளிக்கப்படாமல், மன்னர் செயல் முறைக்கு -

மன்னர் அரசாட்சி முறைக்கு - மன்னருடைய வீரத்திற்கு உருவத்தைக் கொடுத்து சமயம் அரசனின் நிழலாகக் காட்டப்பட்டுள்ள செய்தியும், அதற்கு அடுத்த நிலையில் சங்கம் மருவிய காலத்தில் (இருண்ட காலத்தில்) - காவியங்கள் தோன்றும் காலகட்டத்தில் சிற்சில புள்ளிகள் போல் சமயத்தின் சாயல் தென்பட்டதையும், ஆனால், இடைக்காலத்தில், சமய காலத்தில் முழுமை அடைந்த ஒரு வட்டம்போல் சமயத்திற்கென்றே ஒரு அமைப்புத் தோன்றி சிவனை வழிப்பட்டவர்கள் 'சைவம்' என்றும் திருமாலை வழிபட்டவர்கள் 'வைணவம்' என்றும் பிரிவுகள் அமைந்து சமயம் வளர்ந்த போக்கு நன்கு விளக்கப்பட்டுள்ளது.

33. எல்லா சமயங்களும் உள்ளத்தில் இருந்து பொங்கிவரும் ஆசை-பாசம்-அன்பு என்னும் மூன்று பண்பு நலன்களை வற்புறுத்துகின்ற நிலை இடைக்கால சமய இலக்கியங்களில் காணுமாற்றை இவ்வாய்வு தெளிவு செய்கிறது.

34. 'முழுமையான வட்டம் போன்றது இறைமை' என்னும் கருத்து சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

35. மனிதன் நினைவுக்கும் உணர்வுக்கும் அப்பாற்பட்ட சக்தியொன்றைக் காட்டி, அதற்கு 'விதி' என்ற பெயரைச் சூட்டி, எல்லாம் அவன் செயல் என்று தன்னுடைய இயலாமையைக்காட்டி இறைவன் எல்லாம் தெரிந்தவன் என்றும் மனிதன் ஒன்றுமறியாதவன் என்றும் பறைசாற்றி இறைவனுடைய பார்வைக்கு மறைவானது ஒன்றுமில்லை என்று மனிதன் இறைவனுக்கு அடிபணிந்து நடந்து, வாழ்ந்து, கடந்து செல்லும் தன்மை இங்கு விளக்கம் பெறுகிறது.

36. பொய்மை மிக்க தேகத்தை உண்மை என்று நம்பி அதை காக்கத் தேடும் அன்னத்தின் துன்பம், அதுவே பெரிய துன்பமாகும். மனிதன் இந்த தேகத்தை வளர்க்கவும், இந்ததேகத்திற்கு தேவையான சுகத்தைக் கொடுக்கவும் மேலும் பல துன்பங்களில் சிக்கித் தவிக்கிறான். இவ்வாறு துன்புற்று வாடும் நெஞ்சங்களுக்கு ஆறுதல் அளித்து ஆட்கொள்ளும் சிறப்பு இறைவனுக்கு மட்டுமே உரித்ததாகும் என்னும் உண்மை சித்தரிக்கப் பெற்றுள்ளது.

37. மனிதன் காம வழிகளை கடக்க முடியாமல் காம உணர்வுக்குத் தீனியிட முடியாமல் தவிக்கும்போது அங்கு

ஒரு தெளிவு பிறக்கிறது. அந்தத் தெளிவு அகப்புண்ணை ஆற்றும் - இறைவன் அமைத்த உருவங்களை பக்தி வழிச்சென்று புரிந்துகொள்ள வேண்டும் என்பன போன்ற செய்திகள் இவ்வாய்வில் இடம்பெற்றுள்ளன.

38. சாதி, சமயம் ஆகியவற்றைக் கடிந்துகொண்டு, எல்லாம் ஆகிய இறைவனை எல்லோரும் தொழவேண்டும். எல்லோருக்கும் இறைவனுடைய அருள் தேவையாகும் என்று புரட்சிக் கருத்தொன்றைக் கூறுகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார். இறை உணர்வில் சாதி - சமயத்தைப் புகுத்தி வேடிக்கை பார்ப்போர்களை சாதிக் கயவர்கள் - சமயக் கயவர்கள் என்றும், பக்தி வழியை சுயலாபத்திற்காகவும், இன்ப வேட்டைக்கு உரியதாகவும் கொள்ளாமல் சேர்ந்து வழிபடும் தன்மையே 'இறைமை' கோட்பாட்டில் காணப்படும் உண்மையாகும். இக்கருத்து இவ்வாய்வில் விளக்கமுற எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

39. அகப்புண் - புறப்புண் என்னும் கருத்து பக்தி வழிபாட்டில் நின்று நோக்கத்தக்கது. புறப்புண் தோன்றினால் மறைந்து விடும். ஆனால், அகத்தில் காமக் கழிவுகள் மற்றும் மனதில் தீய நினைவுகள் தோன்றும்போது அது பெரிய பாதிப்பை உண்டாக்கிவிடும். அதனால் மனத்தூய்மை பெற மனிதன் இறைவனை நித்தம் மனதில் வைத்திருக்க வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

40. இந்த உடல் வெறும் தோலால் ஆகியவை. நேரம் வரும்போது கிழிந்து - அழிந்து போகும். எனவே, உடல் அழிவு சமாதி சென்று முடியும். இந்த நிலையில்லா வாழ்க்கையை பயனுள்ளதாக மாற்றுவதற்கு இறைவழிபாடு மிக இன்றியமையாத ஒன்றாகக் கருதும்போக்கு விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

41. சான்றோர்கள் மனித வாழ்வினை இருவகையாகப் பகுத்துக் கூறுகிறார்கள். ஒன்று பிறவி வட்டத்தில் சுழலுகின்ற போக்கு, மற்றொன்று பிறவி இல்லாமல் முக்தி அடைகின்ற போக்கு. சமயக் குரவர்களாகிய பலர் மனித வாழ்வில் மாறி மாறி அமையும் 'பிறவி' என்னும் பெருநோயினின்று விடுதலை அடையவேண்டுமென்று பாடிக் காட்டியுள்ளார்கள். அதேபோல பல பிறவிகளை எடுத்து ஒவ்வொரு பிறவியிலும் இறைவனைக் கண்டு பக்தியின்

உணர்வை அடையலாம் என்றும் விரும்புகின்றார்கள். இவ்விரு நிலைகளை இலக்கியத்தின் வழி காணப்படுகின்ற தக்க சான்றுகளோடு இவ்வாய்வு எடுத்தியம்புகிறது.

42. மனித வாழ்க்கை தோன்றி மடியும் தன்மையை உடையது. அது நீர்க்குமிழிகளைப் போன்று உண்டான ஒரு நொடியிலேயே கலைந்துவிடுவதைப் போன்று மனித உயிரும் அத்தன்மையினை உடையது என்ற நிலையாமை தத்துவக் கருத்தை இவ்வாய்வு உறுதி செய்கிறது.

43. மண்ணில் பிறந்த மனிதன் இறப்பு என்னும் முடிவுரையை எழுதாமல் இருக்க முடிவதில்லை. சித்தம் கலக்கப்பெற்று - குலப்பெருமை அழிக்கப்பெற்று பிறப்பென்னும் குற்றத்தில் அமுக்கப்பெற்று - இறப்பின் கொடுமையை உணரப்பெற்று தவிக்கும் மனிதன் வாழும்போது இறைவனுடைய அருள்வேண்டும் என்று ஏக்கத்தோடு வாழும் வாழ்வியல் போக்குகள் ஈண்டு ஆராயப்பெற்றுள்ளன.

44. மனிதனுடைய வாழும் காலம் வரையரை இல்லாதது. அது கடலலை கரையில் மோதி திரும்பவும் கடலில் சேரும் இடைவெளிதான் மனிதனின் ஆயுள் எனவும், அது மிகவும் வேகமாகச் சென்று வந்த இடத்தை மீண்டும் திரும்பச் சென்று அடைகிறது என்ற கருத்தும் ஆழமாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

45. அன்பு, அறம் இவ்விரண்டும் பக்தி வாழ்க்கையில் இரு கண்களைப் போன்றது. இவ்விரண்டினையும் யாதொருவன் பின்பற்றத் தவறினாலும் அவன் இறைவனை வணங்குவதற்கு தகுதியற்றவன். அவன் இறையருளை இழந்து போகின்றான் என்ற ஆழ்ந்த இறைமை தத்துவம் இதன்கண் பேசப்பட்டுள்ளது.

46. இறைமையை வழிபாடு செய்யும் போதெல்லாம் அலைபாயும் புலன்களை அடக்குதல் வேண்டும். அதிலும் சினம் என்னும் மிருக குணத்தினை ஒழித்தல் வேண்டும். இல்லையானால் அதுவே ஆட்கொல்லியாகவும், வாழ்க்கை சீர்கெட்டு போகக்கூடிய நிலைமையையும் உண்டாக்கும் என்ற கருத்தை இவ்வாய்வு நுட்பமாக ஆராய்ந்துள்ளது.

47. இந்த மனித உடல் ஒன்பது வாசல்களைக் கொண்டமைந்துள்ளது. இதில் பல்வேறு அழிவுகள் நடைபெற்றவண்ணமாகவே உள்ளன. ஆகையால், உடம்பைவிட உள்ளத்து நினைவுகள் மணம் நிறைந்ததாக இருந்தால் மட்டுமே அந்த மகேசன் மனிதன் வாழ்க்கையில் இடர்படுவான் என்ற உண்மையை இவ்வாய்வு எடுத்துக்காட்டியுள்ளது.

48. இன்று சமுதாயத்தில் பெருமளவில் பின்பற்றப்பட்டு வரும் அனைத்து சமயங்களும் ஒரே கருத்தை தங்கள் சமயத் தத்துவமாகவும் அதுவே இந்த மண்ணில் உண்மையெனவும் நம்பி வருகின்றன. மனித உடல் அழியக்கூடியது. ஆனால், அழிவில்லாத பரம்பொருளை அடைய வேண்டுமானால் 'எல்லாச் சமயங்களும் மனித வாழ்வின் சிற்றின்பப் போக்கை' கைவிட வேண்டும் என்று வலியுறுத்துவதைத் தக்கச் சான்றுகளுடன் இவ்வாய்வு எடுத்துக்காட்டுகிறது.

49. மனித வாழ்வு மிகக் குறுகியது என்றும், அந்தக் குறுகிய கால எல்லைக்குள் கடவுள் அருளைப் பெறவேண்டும் என்றும் பக்தர்கள் பாடியுள்ளார்கள். இவை தற்கால பக்தி வாழ்வில் பெரிதும் ஏற்றுக்கொள்ளப்பட்ட இறைமை தத்துவமாகக் காணப்படுகிறது என்பதை தெளிவுபடுத்துகிறது.

50. முழுமுதலாய் இருக்கின்ற இறைவனை நோக்கி வழிபாடு செய்தால் முன்வினை எல்லாம் தொலைந்து போகும். வினைகள் மனிதர்க்கும் பிறவிநோயினை அளிக்கவல்லது என்ற சமயக் கருத்தை உணர்ந்து வாழ்க்கையைச் செப்பனிட்டுக் கொள்ளவேண்டியது மனிதனுக்கு உரிய கடமைகளில் ஒன்று என்ற கருத்து சிந்திப்பதற்கு உரியனவாக இருப்பதை இதன்கண் அறியலாம்.

51. மனித வாழ்வு இருபக்கமுடையது ஆகும். ஒரு பக்கம் வேகம், மற்றொரு பக்கம் நிதானம். வேகமானது உலக வாழ்க்கை, நிதானமானது பக்தி வாழ்க்கை. இறைவனை வழிபாடு செய்யும்போது மிகுந்த பொறுமை வேண்டும். இந்த மார்க்கமே மனிதனை நிம்மதி என்னும் இறைவன் அருளை அடைவதற்கு ஏற்றவழி என்னும் செய்தி இடம்பெற்றுள்ளது.

52. மனிதனுடைய இறைவழிபாட்டுத் தன்மையே 'சரணாகதி' அடைவதுதான். இதுவே மனிதன் இறைவழிபாட்டிற்கு வழிவகுத்ததின் நோக்கமாகும் என்பதனை இவ்வாய்வின்மூலம் விளக்கமாக அறியலாம்.

53. இயற்கை மிகுந்துள்ள சங்க காலத்து இலக்கியம் போலவே, இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் 'இறைமை' தனித்து விளக்கப்பட்டிருப்பது வியப்பிற்குரியது ஆகும். வாழ்வின் நோக்கங்கள் புலவர்களால் போற்றப்பட்ட காலம் சங்ககாலம் ஆகும். ஆனால், சமயம் - மதம் ஆகியவை உணர்ச்சி மூலமாக வழங்கப்பட்ட தன்மை இடைக்கால இலக்கியத்தின் தன்மை ஆகும். முழுமன்னர் எண்பேராயம்- ஐம்பெருங்குழு என்ற இலக்கிய முறை சங்க கால இலக்கிய முறையாக அமைந்திருந்தது. வாழ்வும் வளமும் என்னும் சங்க இலக்கிய போக்கு மாறி, இறையும் பக்தியும் என்ற இடைக்கால இலக்கியம் என்று விரிவடைந்து இன்றைய நிலை வரை அதன் தாக்கம் அதிகரித்து அமைந்துள்ளப் போக்கையும் சமயப் புரட்சி தோன்றியதையும் இவ்வாய்வு எடுத்துக்காட்டியுள்ளது.

54. காலப்போக்கில் கடவுளர்கள் பல்கிப் பெருகி வளர்ந்த பாங்கு நன்கு அமையுமாற்றைக் காணலாம். சிவன், விஷ்ணு, பிரம்மன் என்னும் மூன்று தெய்வங்களும் அக்கால மக்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்ததை இலக்கியம், வரலாறு ஆகியவை பேசுகிறது. அதன்பின் காளி, லட்சுமி, சரஸ்வதி போன்ற சக்தி வழிபாட்டு வாழ்க்கை துளிர்க்கத் தொடங்கியது. பெண்மையில் தெய்வீகத்தைக் காணல் வேண்டும் என்ற போக்கு விரிவடைந்தமை இதன்கண் காணப்படுகிறது.

55. எந்த ஒருவனுக்கு வாழ்வு பற்றிய தெளிவு ஏற்படுகிறதோ அவன் ஞானி ஆகிவிடுகிறான்.எப்படி இருள்மயமான அஞ்ஞானம் கழிகிறதோ - அப்படித்தான் தேர்ச்சிமிக்க அஞ்ஞானம் ஏற்பட்டு அமையும்போது ஞானம் என்னும் கதிரவன் ஏற்பட்டு நிற்கின்றது. அப்போது சுடர் என்னும் அறிவு தோன்றி கசடு என்னும் அழுக்கை நீக்கிவிடுகிறது. அப்பொழுது பொய்யாலான உலக வாழ்க்கை நீங்கி மெய்யே வடிவான இறைவன் திருவடி தென்படுகிறது என்னும் கருத்து நோக்கத்தக்கது.

56. மனிதனுடைய முடிவு (மரணம்) அறிவியலுக்கும் மனித அறிவுக்கும் அப்பாற்பட்ட ஒரு நிகழ்ச்சியாகவே காணப்படுகிறது. மரணம் எல்லோருக்கும் பொது. குழந்தை முதல் முதியோர் வரை மரணப் பிடியிலிருந்து தப்ப முடிவதில்லை. அதனால்தான் பிறப்பும் இறப்பும் மனிதனுக்கு மிஞ்சிய செயலாகக் கருதப்படுகிறது. ஆகவே, மனிதன் தன் பிறவியின் நோக்கத்தை அறியவும், மரணத்திற்குப் பின் முக்தியைப் பெறவும் சமயத்தை நாடி அலையும் பாங்கு நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

57. கற்பனை என்பது சங்ககாலத்தில் இயற்கையோடு இணைந்து கூறப்பட்ட போக்கு உள்ளது. ஆனால், சமய காலத்தில் குன்று, காடு, கடல், வயல் ஆகியவற்றை விட்டுவிட்டு இறைவனுடைய பெயர், கோலம், அழகு ஆகியவை கற்பனையில் இடம்பெறத் துவங்கின. இக்கருத்துக்கள் கற்பனையிலேயே பக்தி நிலையை உருவாக்கி பேரானந்தப் பேற்றினை பெறுவதற்கு மிக்க ஆதாரமாக அமைந்த போக்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

58. இங்கு மனிதன் இரந்துண்ணும் நிலைமை ஏற்பட்டால் இந்த உலகத்தைப் படைத்த இறைவனே அழியட்டும். இறைவன் மனித உயிர்களை காத்து நிற்பான் என்று சமயத்துறைக் கருத்தோடு பிணைந்துள்ள கருத்து எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

59. ஒவ்வொரு மனிதனும் தம் வாழ்நாளில் மிகுந்த 'பெயரும் - புகழும்' அடையவேண்டுமென்று திட்டம் வகுத்துக் கொள்கிறார்கள். ஆயினும் சமயகால முன்னோடிகள் அத்தகைய பேர், புகழ் வாழ்வின் சட்டத்தை உடைத்தெறிந்து, ஒன்றும் நில்லாத உலகியல்பை அதாவது வாழும் ஊரும், உற்றார், பேரும், பெண்டிரும், பிள்ளைகளும், சீரும், செல்வம் மற்றும் இந்த உலகிலே யாரும் சதமல்ல என்ற உண்மை நிலைமையை சமயம் மனிதனுக்கு கற்றுணர்த்தும் பாங்கு விவரிக்கப்பட்டுள்ளது

60. இந்த மண்ணுலகில் பிறப்பெடுத்த பிறகு பந்த - பாச வாழ்வில் மூழ்கவேண்டி இருப்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும். நெஞ்சில் தோன்றி அமைந்து, எல்லா உயிர்களின் நெஞ்சிலும் வளர்ந்துபடும் பந்தங்கள், பாசங்கள் ஆகியவை அவற்றை வழக்குகளாக ஆக்கிவிடுகின்றன.

அந்த வழுக்கலைக் கொடுக்கும் பந்துக்கள் ஓங்கி எழுந்து நற்சிந்தனை வீழ்த்தி தோல்வி வரச் செய்துவிடும். ஆகையால், மிக முயன்று இந்தச் சமய தேக்கத்தைக் கொண்டுவரும் பண்பினின்றும் விடுபடல்வேண்டும். அதுவே பாசம் என்னும் குணம் என்னும் கருத்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

61. மனிதன் வாழ்வியல் ஆசைகளை வளர்த்து அது பேராசைகளாக மாறி அவை பேரழிவை உண்டு பண்ணிவிடும். ஆசையாகிய உலகப்பற்றை உதறிவிட்டு வந்தாலொழிய பாசமாகிய (பதி-பக்தி-பாசம்) இறைவனை கண்டடைய முடியாது என்கிற கருத்து விளக்கப் பட்டுள்ளது.

62. இறைவன் என்பவன் ஓசையில் ஒளிந்திருக்கிறான். அது 'ஓம்' என்னும் வடிவில் தோன்றி உலகின் எல்லாப் புறத்திலும் அதிர்வைத் தோற்றுவித்து வருகிறது. இதுவே நீண்டு இறைவனின் நாமமாக மாறி நிற்கிறது. உலகத்தில் ஏற்படும் எல்லா ஓசைகளும் ஒலிகளும் இறைமையைக் குறிக்கவே ஆகும் என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது.

63. சைவ சமயம் பெண்ணைச் 'சக்தி' என்று கூறி தனி வழிபாட்டிற்கு வழிவகுத்துத் தந்திருக்கிறது. தமிழ்நாட்டில் பெண் என்பவள் வெறும் போகப் பொருள் என்ற நிலையை விட்டுத் தெய்வீகம் ததும்பும் பண்போடு வழிபாட்டிற்குரிய இறைவி தத்துவத்தைப் பறைசாற்றி வருவதைக் காணலாம். ஒருமை மனதுடன் ஒருவனுக்காகவே வாழ்ந்து - மடிந்து தெய்வ உருவைப் பெறும் தன்மை 'ஒருமை மகளிரே போல' என்று கூறி பெண்ணுக்கு தெய்வநிலை தந்த பாங்கு நன்கு கூறப்பட்டுள்ளது.

64. மனிதன் வாழுகிற நாளும் - வாழ்ந்த நாளும் - வாழ இருக்கும் நாளும் மூன்று காலங்களாகிய நிகழ்காலம் - இறந்த காலம் - எதிர்காலம் ஆகிய இவற்றிற்கு அப்பாற்பட்டதாகிய வாழ்வை எண்ணிப் போற்றுவதால் இறைவனுடைய அருள் கிடைக்கப் பெறுகிறது. உண்மையை உணரவேண்டு மானால் காலத்தைக் கடந்த - உருவம் இல்லாத - ஒரு பெயரும் இல்லாத இறைவனைப் பற்றுக் கோடாய் பெற்று வாழும் முறையே சமய வாழ்க்கையின் தத்துவம் என்பதை இவ்வாய்வு தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

65. உலக வாழ்க்கை தண்மையில் ஆழ்ந்திருக்க வேண்டும். அப்போதுதான் துன்பம் என்னும் வெம்மையில் இருந்து விடுபட்டு அன்பு என்னும் தண்மையில்இறைவனைக் காண முடியும். எனவேதான் சமயக் குரவர்கள் கடவுள் வாழ்வதற்குரிய இடமாகக் குன்றுகளையும் மலைகளையும் அவ்விடங்களில் குதித்து ஓடும் தண்மையான அருவிகளையும் சோலைகளையும் தெய்வத்தைத் தொழுவதற்கு சான்றோர்கள் ஏற்பாடு செய்து இருக்கிறார்கள் என்னும் கருத்து இவ்வாய்வின்கண் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

66. வாழ்த்துவதும், வணங்குவதும் பக்தர்களின் தலையான பணியாகும். நேரந்தவறாமல் புனிதமான இறைவனின் திருவடிகளையே எண்ணி வாழ்வதென்பது இன்றியமையாத இயல்புகளில் ஒன்றாகும். காமச் சேட்டைகள் - கலங்கலான எண்ணங்கள் - கசடாக மாற்றம் பெறல் போன்றவை தீமையான வழிவகைகளையே தோற்றுவிக்கும். அப்போதெல்லாம் தாழ இருந்து பக்தி வயப்படுகின்ற மனதைப் பெறவேண்டும். இதுவே பக்தி வழிபாட்டிற்கு ஏற்ற நிலையாகும் என்னும் கருத்தை இதன்கண் அறியலாம்.

67. உலகம் முழுவதும் வாழும் மனிதர்களின் வாழ்வு இருவகையாகப் பிரிக்கப்படுகின்றது. பெருங் கட்டிடங்களைக் கட்டி - உயர்ந்த கோபுரங்களை எழுப்பி இறைவனை வழிபடும் தன்மை ஒருபுறம். சின்னஞ்சிறிய குடிசைகளில் இறைவனை அமர்த்தி நெஞ்சில் நிறைவுடன் கும்பிட்டு வாழ்வது மறுபுறம். முன்னது படாடோப முறை. பின்னது எளிமை. இரண்டாவதாகச் சுட்டுவது அடக்கமுடன் இறைவனை வாழத்துவது ஆகும். இதுவே இறைமையைப் பெற வழிவகுக்கும் எளிய வழிமுறையாகும் என்பதை இவ்வாய்வு தக்கச் சான்றுகளுடன் நிறுவியுள்ளது.

68. தற்கால பக்தி இலக்கிய மரபுகளில் மக்களின் வாழ்க்கையில் புற வளர்ச்சிகள் வெகுவாகப் பெருகி வளர்ந்து வந்தாலும் அகவெளியில் இருளடர்ந்த பகுதிகளே மிக அதிகமாக ஏற்பட்டு அமைந்துள்ள போக்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

69. ஓசையாகிய கடவுள் தத்துவத்தைப் புறக்கணித்து புதிய பல கடவுட் கொள்கைகளை, கடவுள்களை உருவாக்கி அவற்றைத் தக்கவழியில் போற்றாது விரைவான உலக வாழ்க்கையில் மனிதன் அமைதி இல்லாத போக்கில் செல்வதை உணர்ந்து மௌனமே இறைவனை உணரும் தத்துவமாக இக்கால பக்தி நெறி மாறியுள்ள போக்கு காணப்படுகிறது. இது சங்க காலத்திலேயே விதைக்கப்பட்ட விதையாகக் காணப்படுவதை தற்கால நிலை என்னும் பகுதியில் ஆராயப்பட்டுள்ளது.

70. அறத்தை அறிவது மௌனம், தெய்வம் மௌனத்தையும் சார்ந்தது. ஆரவாரம் நிறைந்த இல்வாழ்க்கையில் மௌனமாக தெய்வத்தை உணர்தலே சிறந்தது என்னும் கருத்து சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

# துணை நூற் பட்டியல்


1. அறவாணன், க.ப., : தொல்காப்பியக் களஞ்சியம், பாரி நிலையம், சென்னை - 600 001. முதற்பதிப்பு - 1975.

2. ஆண்டாள் : திருப்பாவை

3. இராமநாதன் அரு., (தொ.ஆ.) : அறுபத்துமூவர் கதைகள், பிரேமா பிரசுரம், 35, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 600 024. ஏழாம் பதிப்பு - 1992

4. இராமநாதன், அரு., (தொ.ஆ.) : சித்தர் பாடல்கள், பிரேமா பிரசுரம், 35, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 600 024. நான்காம் பதிப்பு - 1984.

5. இராமலிங்க அடிகள் : திருஅருட்பா, அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடு, சிதம்பரம், முதற்பதிப்பு - 1983

6. இராமநாதம்பிள்ளை, ப.: பன்னிரு திருமுறைத் திரட்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 1/140, பிரகாசம் சாலை, சென்னை - 600 001. 1974.

7. இளங்கோ அடிகள் : சிலப்பதிகாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., 1/140, பிரகாசம் சாலை, சென்னை - 600 001. 1975.

8. கடியலூர் உருத்திரங் கண்ணனார் : பட்டினப்பாலை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 1/140, பிரகாசம் சாலை, சென்னை - 600 001. 1956.

9. கபிலர் : குறிஞ்சிப்பாட்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 79, பிரகாசம் சாலை, சென்னை - 600 001. மறுபதிப்பு - 1978.

10. கோபாலாசாரியார் காரப்பங்காடு : நாலாயிர திவ்விய பிரபந்தம், பி. ரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை - 600 001. 1977.

11. கௌசிகனார் : மலைபடுகடாம், திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்,. 1/140, பிரகாசம் சாலை, சென்னை - 600 001. 1976.

12. சக்திவேல், சு., : தமிழ்மொழி வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், 55, லிங்கி தெரு, சென்னை - 600 001. இரண்டாம் பதிப்பு - 1991.

13. சஞ்சீவி, ந., (தொ. ஆ.) : தெய்வத் தமிழ், சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு : 36 சென்னை - 600 005. முதற் பதிப்பு - 1975.

14. சதாசிவ செட்டியார், பி.ஏ., : திருஞான சம்பந்தர் தேவாரம்,
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை - 600 018.
திருத்திய முதற்பதிப்பு - 1987.

15. சாமிநாதய்யரவர்கள், உ.வே. : புறநானூறு மூலமும்
உரையும், ஸ்ரீ தியாகராச
விலாச வெளியீடு,
சென்னை,
ஆறாம் பதிப்பு - 1963

16. சீத்தலை சாத்தனார் : மணிமேகலை,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை - 600 018. 1991.

17. சுந்தரம் பிள்ளை, பெ. : மனோன்மணீயம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை - 600 018.
1991.

18. தாயுமானவர் : தாயுமானவர் திருப்பாடல்கள்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாகம் சாலை,
சென்னை - 600 001. 1975.

19. திருஞானசம்பந்தர் : சம்பந்தர் தேவாரத்
திருப்பதிகத் திரட்டு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,

1/140, பிரசாகம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு - 1975.

20. திருத்தக்கதேவர் : சீவகசிந்தாமணி,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரசாகம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு - 1975.

21. திருமூலர் : திருமந்திரம் மூவாயிரம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
79, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001. 1989.

22. திருவள்ளுவர் : திருக்குறள்,
17, துளசிங்கப் பெருமாள்
கோயில் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005. 1965

23. நம்மாழ்வார் : திருவாய்மொழி,
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141, உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
இரண்டாம் பதிப்பு - 1991.

24. நக்கீரர் : திருமுருகாற்றுப்படை,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001. 1978.

25. பட்டினத்தார் : பட்டினத்துப் பிள்ளையார்
திருப்பாடல்கள்,
திருநெல்வேலி தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001. 1973.

26. பவணந்தி முனிவர் : நன்னூல்,
மாக்மில்லன் அண்டு கம்பெனி
லிட்,,
சென்னை. 1922.

27. பாரதியார் : பாரதியார் கவிதைகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)
லிட்., 41, பி. சிட்கோ
இண்டஸ்டரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை - 600 098. 1994.

28. பாரதிதாசன் : பாரதிதாசன் கவிதைகள்,
அருள்-சுடர் பதிப்பகம்,
7, கடம்பாடி அம்மன் கோயில்
தெரு, வளசரவாக்கம்,
சென்னை - 600 087.
1993.

29. மாணிக்கவாசகர் : திருவாசகம்
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு - 1976.

30. வரதராசன், மு. : தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்திய அக்காதெமி,
இரவீந்திரபவன்,
35, பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி - 110 001.
பத்தாம் பதிப்பு - 1996.

31. வரதராசன். மு. : இலக்கிய ஆராய்ச்சி,
பாரி நிலையம்,
59, பிராட்வே,
சென்னை - 600 001.
மூன்றாம் பதிப்பு 1958.

32. — : நற்றிணை நானூறு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி - 6. 1962.

33. நக்கீரர் : நாலடியார்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு 1964.

34. — : பதிற்றுப்பத்து,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு 1963.

35. — : நந்திக் கலம்பகம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
79, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு - 1986.

36. — : பரிபாடல்
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 600 001.
மறுபதிப்பு 1975.